நாடுமிக்கயிலையாதிரவின்றபஃறலங்கட்கெல்லாம்
பாடுகாரோணமேன்மைபடைத்ததெத்திறனுலென்னிற்
கூடுபேரண்டமெல்லாங்குலையுகாண்மூர்த்தியாவு
நீடுமத்தலத்தேவர்துகிரம்புதலாலென்றோர்தி. (௪௬)

அத்தலத்திடையுதித்தாரத்தலத்திடைவசித்தா
ரத்தலத்துயிர்விடுத்தாரத்தலத்தாசைவைத்தா
ரத்தலத்தெல்லைசூழ்ந்தாரத்தலத்தலர்துய்த்தாழ்வா
ரத்தலப்பெருமைதேர்ந்தாரனைவருமுத்தராவார். (௪௭)

கருதினவருளுநாகைக்காயாரோகணத்தலத்தி
லொருகணம்வசிப்பாரேனுமுறுபலன்பெரியதாகின்
மருவுமற்றதன்மேலாகவசிப்பவர்க்குரைப்பதென்னே
பொருவில்பஃறலத்தும்வைகும்பயனெலாம்பொருந்துவாரால். (௪௮)

அத்தலத்துயர்ந்ததானமகிலத்துமில்லையாகு
முத்தலங்களினுமொத்ததிதுவென்றுமொழிவாரில்லை
கைத்தலமழுமானேந்துமெம்மையேநிகருங்கண்டாய்
மைத்தலஞ்சனமுமோவவயங்குகார்க்கூந்தனல்லாய். (௪௯)

பலவிரித்துறைவதென்னைபகருமத்தலத்தைச்சார்ந்தார்
நலமருவெமைச்சார்ந்தாரோநவின்றதற்கையமில்லை
நிலவுமிவ்விசேடத்தாலேநிரம்பியபிரியம்வைத்தோ
மலமரலன்றிநீயுமமைந்தனையறிதியென்றான். (௫0)

தலவளநந்தியெம்மான்சனற்குமாரனுக்குச்சொற்ற
கலமுறவெடுத்துச்சொற்றநயந்தவன்விழைவுநோக்கிக்
குலமுனிபுண்டரீகன்குறிமுதற்காட்சிபெற்று
நிலவியதுரைத்தவாறுதெரிதரநிகழ்த்தலுற்றும். (௫௧)

தலவிசேடப்படலம் முற்றிற்று.

ஆ படலம்-எ-இ திருவிருத்தம் - ௪௬௯.

## புண்டரீகமுனிவர் முதற்காட்சியுரைத்தபடலம்.

நலமலியுநந்திபிரானுடுசனற்குமரமுனி
பொலமலியுஞ்சிவராசதானியெனும்புரத்தினுக்குக்
கலமலியுநகடனுகைக்காயாரோகணமெனும்பேர்
நிலமலியும்படிசொல்லென்னிகழ்த்துகெனநேர்ந்துரைப்பான். (௧)

அறமனைத்துங்குடிகொளுங்கையம்பிகையன்னலைவணங்கி
மறமனைத்துந்தவிர்தலத்தின்மான்மியங்கேட்டுளமகிழ்ந்தேன்
றிறமனைத்தும்புணர்வினையத்தலத்தடைந்துசேர்ந்தவர்யார்
நிறமனைத்தூந்தருமதவுமுரைத்தியெனநிகழ்த்திடுவான். (௨)

புரையெறியும்பெருங்குணத்திற்புண்ணியப்பூங்கொம்பேகேள்
வரையெறியும்பன்மணியுமால்யானைக்கோடுகளும்
விரையெறியுமொண்மலருமேதகுசந்தனக்குறடுந்
திரையெறியும்யமுனையெனுந்திருத்தகுமாநதிக்கரையில். (௩)

சாதமறைமுழங்கொலியுஞ்சாலையழலோம்பொலியும்
போதவமரரையவியூண்புசிக்கவழைத்திடுமொலியு
மேதமின்மங்கலவொலியுமென்றுமெழுகடலொலியாம்
வேதபுரமெனும்பெயரின்விளங்குமொருதிருநகரில். (௪)

வழிவழிநம்மடிக்கன்பேவயக்கிவருபெருங்குணத்தா
லிழிவுசிறிதேனுமுறாதெஞ்ஞான்றுமுயர்வேயுற்
றொழிவரியகண்ணோட்டமொப்புரவாதிகடழுவிக்
கழிபுகழினனிபொலிந்துகமழ்கற்ககோத்திரத்தில். (௫)

மறைமுழுதும்வடித்துணர்ந்தானங்கமுமாண்புறத்தெரிந்தா
னிறைதருமாகமக்கடலுநீந்தினனல்லொழுக்க
முறைநெறியிற்றலைநின்றான்முனிவருநந்தமையுணர்ந்து
கறைகெழுபல்பவமுமறுகருத்தமனென்றொருமறையோன். (௬)

அந்தமுனிவரன்றவத்திலான்றபாற்கடலுதித்த
சந்தமதியெனவுதித்தான்சதுர்வேதமுதலாக
வாதகலைபற்பலவும்வடித்துணர்ந்துதந்தையினு
நந்தவறிவினிற்சிறந்தானல்லொழுக்கந்தலைநின்றான். (௭)

நம்மடியர்தமைக்காணினுமென்றேயுபசரிப்பான்
செம்மலர்மேலயனுதித்தேவருளுமிணையில்லான்
விம்மலறுபெருந்தவமேவினோந்தகனல்வருமுவகைப்
பொம்மல்படைத்துயர்ந்தோங்குபுண்டரீகப்பெயரான். (௮)

அன்னமுனிவரன்றந்தையாயகருத்தமற்பணிந்து
சொன்னபவத்துயரகற்றித்தூயசாயுச்சியமா
நன்னரமைமுத்தியினைநயந்தளிக்குங்கடவுளெவன்
மன்னவுரைத்தருளென்றான்மற்றவனுண்மகிழ்ந்துரைப்பான். (௯)

உரவில்விடயாதிகளினுழலிளமைப்பருவத்தே
கரவுதவிரின்பமுத்திகாதலித்தாயம்முத்தி
விரவுதிறலினனீயேவீடுமுதல்யாதாலும்
பரசிவனையல்லாதுபாலிப்பாரிலையுணர்தி. (௧௦)

சங்கரனுமெவ்வுயிர்க்குந்தாவில்சுகங்கொடுத்தலினற்
பங்கவியசனந்தவிர்க்கும்பண்பினுலுருத்திரனே
யங்கணருள்பொழியம்மைபசமேதனுயமர்தலினு
றங்கமிருசாம்பனெனச்சொல்லுவாரறிவுடையோர். (௧௧)

நிலமுராத்துத்தரித்திடலுநீர்குளிர்ந்துபதஞ்செயலுங்
கலவழல்சுட்டொன்றாதலுங்கால்சலித்துத்திரட்டுதலும்
வலனமைவிண்ணிரந்தரமாயிடங்கொடுத்துமருவுதலு
மலமரலிலருட்பெருமான்கட்டளையென்றறிமைந்த. (௧௨)

இரவிமதிமுதலாயகோள்கடகவியங்குதலுங்
கரவறமீன்புணர்பரவைகரைகடவாதடங்குதலும்
புரவமையும்புவனங்கள்போவதுவுமாவதுவு
மரவணியுஞ்சிவபெருமானாணையெனவறிமைந்த. (௧௩)

மறைகளவன்வாய்மொழியேமறைகளவன்வந்தியரே
மறைகளவன்பாதுகையேமறைகளவன்காற்சிலம்பே
மறைகளவனூர்பரியேகாணாதுமயங்குதலு
மறைகளெனிற்சிவபெருமானமான்மியநானென்றுரைக்கேன். (௧௪)

எங்குமவன்றிருமுடியேயெங்குமவன்றிருமுகமே
யெங்குமவனுலோசனமேயெங்குமவன்குழைச்செவியே
யெங்குமவன்செவ்வாயேயெங்குங்கையேபதமு
மெங்குமெனிற்சிவபெருமானேற்றநானென்றுரைக்கேன். (௧௫)

புனையுருவெட்டொன்பதுமுற்புணர்ந்துமோருருவுமிலன்
வினையொருநான்கொன்றியற்றிமேவினுமோர்வினையுமிலன்
புனையிழையோர்பான்மருவப்பொருந்தினும்விகாரமில
னனையபிரானுண்மைநிலையாரியம்பவல்லவரே. (௧௬)

மண்ணிடையைந்தாயமர்ந்தானீரிடைநான்காய்வதிந்தான்
கண்ணிடைதீயிடைமூன்றாய்க்காலிடைமற்றீரிரண்டாய்
விண்ணிடையொன்றாயமைந்தானுறுலும்விளம்பியவை
யெண்ணிடைவதல்லாமலின்னனெனவுணர்வனவோ. (௧௭)

கூற்றுவன்செய்கொடுந்தண்டங்குதித்துய்யக்குறித்தவர்க
ளேற்றுமிசைவருபெருமானடியன்றிவெண்ணுவரோ
போற்றுமறையாகமபுராணமெலாம்புகல்பவர்தோங்
காற்றுவலியமைநாலகாலனெனத்துதித்தலினால். (௧௮)

எண்ணியபூங்கணைமதவேளிரவுபகலாவியற்றுங்
கண்ணியவெந்துயரொழித்துங்கடந்துபயவுளங்குறித்த
புண்ணியர்களவனையன்றிப்பிறரையுமபூசிப்பர்கொலோ
தண்ணியபுராலெல்லாய்காமதகனனெனமுறையிடலால். (௧௯)

மேயபலதுயரமெலாம்விளைத்தெழுவான்றோற்றிடுவித்
தாயபிறப்பொழித்திடுவானமைபவுளத்திடைக்குறித்த
தூயமதியினர்சிவனையல்லாதுதுதிப்பர்கொலோ
பாயமறைபிறப்பிலியென்றெடுத்துரைக்கும்பான்மையினால். (௨௦)

அரியகடவுளராயவரிபிரமாதியர்க்கெல்லாம்
பெரியபிரான்சங்கரனேயென்றறிஞர்பேசிடுவார்
தெரியமுரசறைந்ததெனச்செகமுழுதுமவாய்க்கேட்க
வுரியமறைமாதேவனெனுந்திருப்பேரோதுதலால். (உக)

பிரணவத்தினுரியபொருள்பிறவொன்றுபேசிடுவார்
முரணவித்தற்காகமங்கண்முதலாயவேண்டுபவோ
கரணவிகற்பங்கடப்பாய்காவதமெண்ணிலகமழுந
திரன்மிகுத்தசெழுங்கொன்றைமாலிகைசேர்தரக்கண்டும். (உஉ)

வேதகாயத்திரியின்பொருளாகும்வித்தகரார்
போதநாயகனானபொங்கொளிச்சம்புவையன்றி
யேதநீவாதமரும்யாவரையும்புகன்றிடலா
மோதவாம்பற்கனெனுமொருமொழிகள்ளமையாதேல். (உ௩)

மும்மறையுணுமெமறையின்முனிவிலெழுகாண்டத்திற்
செம்மைதருநடுக்காண்டஞ்சேர்ந்தவெழுசங்கிதையி
லம்மநடுச்சங்கிதையினடுவீரெழுத்துநடுப்
பொம்மலுறவமர்மனுவின்பொருளாவானெவன்மைந்த. (உ௪)

இருத்தமிருமறைமுடிபாய்த்திகழ்தருகாலாக்கினிசா
ருருத்திரப்பேருபநிடதமுதலாயவுரைப்பதெலாம்
வருத்தமறவுலகனைத்துமிவைப்பொழித்துமாதேவன்
பொருத்தமுறமெய்ப்பூசுபுண்ணியனீறேபிறிதோ. (உ௫)

பிரியமிகவனைத்தினுக்கும்பிரமாணமாயமறை
தெரியவெடுத்தினிதுரைத்தல்சிவலிங்கார்ச்சனையொன்றே
யுரியவெனப்பிறர்வடிவமுரைத்ததுமற்றுண்டுகொலோ
வரியதவத்திருமைந்தவறைவதெவனிதன்மேலும். (உ௬)

ஆதலினம்பரசிவனையரிபிரமாதியர்பல்லோர்
காதலிற்பூசனைபுரிந்துகருதியதெய்தினரின்னு
மேதமறயானைமுதலெறும்பீறுதியபலவுட்
போதமுறப்பூசித்துப்பொலிந்தவைக்கோரளவுண்டோ. (உ௭)

இன்னுமுயர்பரசிவனையிருதினையினுயிரனைத்து
மன்னும்வழிபாடியற்றிவயங்கியவைக்கறிகுறியா
மின்னுபலதலம்பொலியுமன்றியினிரனையபிரா
னன்றுமொருவரைப்பூசையுஞற்றியதுமுண்டுகொலோ. (உ௮)

விச்சுவமென்றெடுத்தியம்பவிளங்குவானொருமுகுந்தன்
விச்சுவத்திற்கதிகனெனவிளங்குவான்பரமசிவ
னெச்சமெனயாவர்களுமியம்புவார்மாயவனை
யெச்சவதிபதிசிவனேயெனப்புகலுமெம்மறையும். (உ௯)

பரசிவனேபிரமமெனப்பன்மறையுமெடுத்தோது
முரனிலானையும்பரமென்றோதிடுவதென்னையெனில்
விரவுமுபசாரமேயன்றியுமேவுயிர்ப்பரப்பின்
றரமுணர்ந்தும்போலுமெனச்சாற்றுவார்சான்றோரே. (௫0)

படைத்தலொடுகாத்தலுநம்பரமசிவன்புரிதொழிலே
படைத்தலயன்றொழிலென்னிற்பாறியவோர்தலையின்னும்
படைத்தறனக்கியற்றுகிலான்மால்காப்பனெனப்பகரிற்
படைத்தமகாருறுப்பழிவுமுடம்பழிவும்பார்த்திருந்தான். (௫௧)

எம்பெருமானித்தியமுமேனையோரனித்தியமு
நம்பவமையமறையாதியெடுத்தோதவின்றிடவேண்டா
கம்பமுறவருகற்பகாலங்கடொறுங்கவர்ந்த
வம்பதுமன்முதலியர்தந்தலைத்தொடையேயறிவிக்கும். (௫௨)

ஆயமலரவனாதியமரரொலாம்பசுக்களே
மேயபசுபதிசிவனேவிளம்புவதெனினனுங்கே
ணேயமிருமாதேவநின்மலனவான்பரனவனிடை
மாயவனாதியரொருநிலையாமென்றுணருதியால். (௫௩)

அர்கமாதேவனேயகிலகாரணன்காண்டி
பந்தமுமற்றஃதொழியப்பற்றுமொருபெருவீடு
நந்தவனருளன்றிநண்ணார்நண்ணுவாரெவ்வா
னுந்தவமைபசுந்தோலிற்சுருட்டும்வலியுளராவார். (௫௪)

மன்னியவப்பரசிவனையவனமர்மாத்தலந்தனைந்து
நன்னியமத்தொடுபோற்றிக்கருதியதூநன்கடைவாய்
முன்னியநின்கருமமிடையூறின்றிமுற்றுகவென்
றன்னியமில்கருத்தமனன்கருளிவிடைகொடுத்தனனே. (௫௫)

வேறு.

தாஙையாருமாத்தவார்த்தைதலைக்கொடுபுண்டரீக
னிர்தைதீர்தலத்தின்மிக்கதெனவெனநினையுங்காலை
முந்தையோர்பலருங்காசிமுழுநாடதியென்னச்
சிந்தைகூர்களிப்பிரோடத்திருத்தலம்வந்துபுக்கான். (௫௬)

ஆனந்தவனத்துமேயவளமெலாமமையநோக்கி
யானந்தம்பயப்பதற்கோரையமின்றென்றுதேர்ந்தே
யானந்தவாமுண்டாக்குமற்புதக்கடலையாடி
யானந்தவுருவமாநம்மருட்குறிபணிந்தெழுந்தான். (௫௭)

கங்கையினன்னீராடல்காலங்கடோறுஞ்சார்ந்து
செங்கையின்மழுமானேந்தித்திகழுநங்குறிசேவித்த
லங்கையிற்கன்றாய்ஙியாமன்னபூரணியைப்போற்றல்
சங்கையினியமங்கொண்டான்றவத்துயர்புண்டரீகன். (௫௮)

இந்தரன்னியமம்பூண்டேயிராயிரவருடங்காறு
நந்தவெம்பொறியடக்கலாதியநயந்துமேவும்
பந்தமின்முனிக்குக்காட்சிபாலித்தேமல்லேமாக
வந்தநன்முனிவனுள்ளத்தவலத்தாற்கவலலுற்றான். (௧௯)

இரங்கிடுகாலைவாமதேவமாமுனியாங்கெய்தி
வரங்கிளரொருநீநெஞ்சமாழாந்ததென்னையென்னப்
பரங்கிளருடம்பினோடுமுத்தியிற்படர்தல்வேட்டேன்
கரங்கனன்மழுவேந்தண்ணல்கருணைசெய்திலனின்னும். (௨0)

அதுகுறித்திரங்குகின்றேனையனேயென்றனன்றான்
விதுமுடிப்பெருமானீங்குவீந்தார்க்குத்தன்சாரூபங்
கதுமெனக்கொடுப்பதன்றிக்கருதியதளித்தல்செய்யான்
மதுமலர்ச்சூதக்காஞ்சிமாநகர்க்குறுகென்றான். (௨௧)

மொழிபுகழ்வாமதேவமுனிவன்சொலுள்ளங்கொண்டு
கழிதவப்புண்டரீகன்காஞ்சிமாநகரஞ்சென்று
பழிதபுகம்பையாதிப்பற்பலபுனலுமாடி
யிழிவறுசூதநீழலெம்மையாங்கிறைஞ்சினானே. (௨௨)

கறைதபுகாமக்கண்ணியெனும்பெயர்கலந்துவாழு
மறைபுகனிலையும்போற்றிவழுத்துமத்தலத்தின்கண்ணே
முறைமையினொருகாரோணமூர்த்தியைத்தாபித்தன்பிற்
பொறைமிகவாண்டுபன்னீராயிரம்பூசித்தானால். (௨௩)

ஆங்குநாங்காட்சிநல்கேமாயினேமறுதெரிந்து
பாங்குசால்புண்டரீகன்படருற்றுத்துயருங்காலை
யீங்குமேவினருடம்போடுமுத்தியெய்தாதாகும்
வீங்குபோகாதியாவும்வீசுதல்கூடுமோர்தி. (௨௪)

ஆதலிற்கும்பகோணமடுத்துநீபூசிப்பாயேற்
காதலிற்பெறுவாயென்றுகருதசரீரியாலு
மோதலிற்களிப்புமேவியொருகும்பகோணஞ்சார்ந்தான்
போதலிற்கருதன்முற்றப்புணருமென்றுள்ளங்கொண்டே. (௨௫)

மன்றுமத்தலத்தின்மேலாமாமகதீர்த்தமாடித்
துன்றுநந்திருமுன்றும்பொற்றாமரைப்புனலுந்தோய்ந்து
பன்றுநங்குறியும்போற்றிமங்களப்பெயர்பரித்து
மின்றுமின்றனையும்போற்றிமற்றவும்விருப்பிற்றாழ்ந்தான். (௨௬)

எண்ணியவாங்குங்காயாரோகணலிங்கந்தாபித்
தண்ணியவன்பினெண்பானாயிரவருடம்பூசை
பண்ணியமுனிவனுக்குப்பருவம்வந்துறுமையாலே
கண்ணியதருளாவண்ணமிருந்தனங்கருங்கட்பாவாய். (௨௭)

இத்தலையாண்டுப்பூசையியற்றியுமிருவர்தேரு
வத்தனையடியர்க்கெய்ப்பில்வைப்பெனவருளனாதி
முத்தனையடையப்பெற்றேமலமென்றுமுனிவன்வாடிப்
பித்தனைகிளர்ப்பமேன்மேற்பேதுறுகின்றகாலை. (௪௮)

கண்ணுவமுனிவன்றோன்றிக்கருதியதடையவேண்டி
லெண்ணுவதினியொன்றின்றியிரங்குகீழ்ப்பரவைக்கோட்டி.
லண்ணுவமானமில்லாவாதிபுராணஞ்சார்ந்து
பண்ணுவதாங்குச்செய்யிற்பலித்திடுநினைத்ததென்றான். (௪௯)

முனியுரைதலைமேற்கொண்டுமொய்வளக்குடந்தைநீத்தே
யினியதுசெய்வேனென்னாச்சிவராசதானியென்னும்
பனிமலர்ப்பொழில்சூழாதிபுராணமாத்தலம்படர்ந்து
துனிதவிர்தேவதீர்த்தமுதற்பலபுனலுந்தோய்ந்தான். (௫௦)

பொருந்தவங்கமருமாதிபுராணப்பேரொளியுமேன்மைக்
கருந்தடங்கண்ணியென்னக்கலந்தமர்நினையும்போற்றித்
திருந்துமவ்வசறுவதீர்த்தத்தென்மேற்காச்சிரமஞ்செய்தாங்
கருந்தவர்தொழுங்காரோணலிங்கமும்பதிட்டையாற்றி. (௫௧)

அந்தமாலிலிங்கத்திற்குமளப்பருமன்புபொங்கச்
சந்தமென்மலர்களாதியாவையுநதந்திஇப்பூசித்துப்
பந்தமுற்றொழியுமாறுபரவிசன்கமாமுனிகளுக்
கந்தமென்மலர்ப்பூங்கோதாய்காட்சிதந்தருளினேமால். (௫௨)

காட்சிதந்தருளலோடுங்கதுமெனவடியில்வீழ்ந்து
மாட்சிசாலன்பர்வாழ்வேவருபவப்பிணிமருந்தே
மூட்சிசால்விருப்பிற்பன்னாண்முயன்றனனின்றாள்காணப்
பூட்சியோடடியேனின்னைப்புணர்திறமருளாயென்றான். (௫௩)

முன்னியபுண்டரீகமுனிவநம்மூன்றாங்காட்சி
மன்னியகாலத்தெண்ணம்வாய்த்திடப்பெறுவாயென்று
நன்னியமத்தவற்குநாஞ்சொல்லிமறைந்தேம்யாரும்
பன்னியலிலிங்கத்துள்ளாற்பனிவரையயாதசேரகாய். (௫௪)

உரைத்தருளியசொற்கொண்டேயுறுவரரேறுபோல்வான்
விரைத்தபூம்பொழில்சூழாங்கேமேவிரோற்றிருந்தான்மான்பாற்
புரைத்தராமெழுவாய்க்காட்சிபுணர்த்தியதுணர்தியென்று
ரைத்தசாநதளாயகொங்கையம்மையுள்ளுவகைபூத்தாள். (௫௫)

பந்தமில்புண்டரீகப்பரவனுக்கெழுவாய்க்காட்சி
தந்தமையெடுத்துச்சொற்றாஞ்சிவராசதானிமேய
வந்தமிலனையமூர்த்தியணிகிளரிரண்டாங்காட்சி
நந்தான்கருளுமாறுகாமினியுரைக்கலுற்றாம். (௫௬)

புண்டரீகமுனிவர் முதற்காட்சியுரைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம்-௮-க்கு-திருவிருத்தம்-௫௬.

# புண்டரீகமுனிவரிரண்டாங்காட்சியுரைத்தபடலம்.

பொருவுதவிர்சனற்குமரனந்திபிரானடிவணங்கிப்புண்டரீகன்
வெருவுதவிர்சிவராசதானியாச்சிராமத்துவிருப்பின்மேவி
மருவுதவிராவிரண்டாங்காட்சிபெற்றவரலாறும்வகுத்தியென்ன
வொருவுதவிர்நயசுருணைத்தலையன்மனமகிழ்ச்சிமிகுந்துரைக்கலுற்றான்.()

சிற்றுதரம்வருந்தாமலண்டபகிரண்டமெலாஞ்செழிக்கவீன்றுஞ்
சற்றுமொருதளர்ச்சியுறுதிளங்கன்னியாயமருஞ்சயிலப்பாவை
கற்றுநவில்புகழ்முனிக்குமீயிரண்டாங்காட்சிதந்தகருணைகேட்கும்
பற்றுமிருந்தனனெனப்பல்லுலகுமுய்யவிடமுண்டபரமன்கூறும். (௨)

மாண்டதவப்புண்டரீகப்பெருமாமுனிகிரியைவழுவாதாற்ற
நீண்டமனமுடையானுய்வைகறையிற்றுயிலெழுந்துநிகரிலாமை
யாண்டநறுந்தேவதீர்த்தங்குடைந்துவெள்ளியநீறணிந்துமேன்மை[வான்
பூண்டமணித்தொடைபுனைந்துபிடகைகொடுநந்தவனம்புகூஉப்பூக்கொய்

நந்தியாவட்டமாதளைசந்துகூதாளாநரந்நாவல்
புந்திகூர்மாலூரமந்தாரமாஞாழல்புன்னாகஞ்செவ்
வந்திபாடலங்கன்னிகாரமாமலகமார்மாயோன்காந்தி
முந்தியாம்விழைகொன்றைதேங்கொன்றைவகுளநீர்முள்ளிகாஞ்சி. (௪)

சிந்துவாரங்குரவஞ்செவ்வகத்திநீர்மிட்டான்செருந்திவேங்கை
நந்துநாயுருவிபொன்னூவிரைகுருந்துவன்னிகுசைநாணல்காயா
முந்துமோரிதழ்க்கமலம்வழைகொக்குமந்தாரைமுளரிதான்றி
யுந்துபொன்னூமத்தைகூத்தன்குதம்பைசெவ்வரத்தமுயரசோகம். (௫)

மருவருக்கம்வெட்பாலைவெள்ளிலோத்தம்பூளைமாவிலிங்கம் [ணை
கருவிளம்பன்னீர்திலமார்பலாசு பட்டிபருத்திவெண்காக்கணஞ் செங்கீ
யொருகுவளைசேதாம்பல்சதகுப்பைவெட்சிதுழாயோங்குவாகை
கருநிறத்தமலர்ச்செம்பைகண்டங்கத்திரிகிளுவைகரந்தைகாணை. (௬)

கொழுந்துவிளாவலரிதுரோணங்காந்தள்வெட்டிவேர்கோட்டந்தாழை
யெழுந்துபொலிவிலாமிச்சவேர்மஞ்சளூத்திகடம்பிரவிகாந்தி
செழுந்தகைவெற்றிலையறுகுகருங்காலிகுளவிபச்சைசிறந்தசாலி .
தழுந்தரமாராழிஞ்சில்வழுதுணைமயிலையொண்பாரிசாதந்தாளி. (௭)

வதரியெலுமிச்சைபுலிதொடக்கிநறுமல்லிகையவாங்குச்சிப்பு
லிதமிகுசண்பகமாதிப்பற்பலவுமிதப்பக்கொய்தெடுத்துக்கொண்டு [ஞ்
சுதமிலொருதலையமைத்துமாலையு மிண்டையுந்தொடையுங்கண்ணித்தாரு
ஈதமினமையலங்கரிக்கத்தக்கபடிமுயன்றமைத்துத்தொகுத்தபின்னர். ()

வண்டுபடுமோர்ங்கண்ணிவளவர்பிரான்முனிவர்பிரான்மாண்புதேர்ந்து
கொண்டுபரிசனம்பூசாதிரவியமுனேனையவுங்கொடுத்துவேண்டக்
கண்டுமகிழ்ச்சியிற்றழுவிக்கதிர்முதிர்முன்மஞ்சனநீர்கனிவிற்றெவ்வீ [டு.
யண்டுநிறைதொறுநிரப்பித்துடிகருப்பூரம்பொடித்திட்டமைத்துக்கொண்

பலநிவேதனமமைக்கச்சிலரையேவிப்பசுங்கர்ப்பூரமாதிப்
பலவிராய்ச்சாந்தமைக்கச்சிலரையேவிப்புனிதம்பாத்திரங்கள்
பலவும்வாய்த்திடவியற்றச்சிலரையேவிக்கனிவுபரவப்பூக்கள்
பலவிராம்புனன்மீட்டுங்குடைந்துநீற்றொடுகண்மணிபராய்த்தரித்தே. ()

தெளிவளராய்பதமைந்துமுளத்தெண்ணியன்பொடுநற்றிருமுன்போந்து
களிவளர்நம்மனுவைஞ்பெற்றுவிதிவழியேபுண்ணியாகவாசனஞ்செய்
தளிவளர்கௌவியபூசையாற்றியமுதோரைந்துமமையப்போற்றி
யொளிவளரொன்பதுரும்பகிறீஇத்தொழுதுதழற்சருமமுஞற்றினனே. ()

ஒருமருப்பன்முதலாயதுவாரவானவர்பூசையுவந்துசெய்து
பொருவரியகருக்கிரகம்புகுந்துவரநதிபூசைபொலியவாற்றிப்
பெருவலியிற்பூதசுத்திதானசுத்திமனுச்சுத்திபெருக்கம்வாய்ந்து
மருவுதிரவியசுத்தியிலிங்கசுத்தியோரைந்துமாண்பிறைற்றி. (௧௨)

சொற்றபாத்தியமுமாசமனமுநல்லருக்கியமுந்தூய்தாப்பண்ணி
யுற்றவாதாரசத்திமுதற்சத்திமண்டலமீறுறப்பூசித்துப்
பற்றவாவாகனமுந்தாபனமுமுளத்தன்புபதியவாற்றி
மற்றவாறைந்தன்மேலெட்டங்கநியாசமுநன்மாண்பிறைற்றி. (௧௩)

கூறுசந்நிதானமொடுசந்நிரோதனமவகுண்டனமுஞ்செய்து
பேறுதருநற்றேனுமுத்திரைமுற்பற்பலவும்பிறங்கநல்கி
வீறுகெழுபாத்தியமாசமனமருக்கியங்கொடுத்துவேலையேழு
மாறுகொடுமுழங்கியனவியமுழங்கவபிடேகமாண்பிற்செய்வான். (௧௪)

ஆன்றநறுந்தயிலமாநெல்லியரிசனங்குடஞ்சுட்டமைந்தவைந்து
சான்றவமுதைந்துநெய்பாறயிர்சுவைத்தேனயிராம்பைநறைழவருக்கை
யென்றநறுஞ்சூதமுயர்கருப்பஞ்சாறிலிருசக்கினெடுத்தசாறு
தோன்றநாரந்தக்கனிமாதுளங்கனிநமரக்கனியிற்றெருத்தசாறு (௧௫)

மேயவிளநீரடிசில்சந்தனங்கங்கைவில்வச்சாறு
பாயசகத்திரதாரைசிருக்கம்வலம்புரிமுறைமையப்பவாட்டி
நேயமுறவாட்டுதொறும்இடையிடைச்சுத்தோதகநன்னிவேதனுதி
யாயபுரிநதொற்றுடையிட்டுமிளிர்பரிவட்டமலங்கச்சூழ்ந்து. (௧௬)

தூயவுபவீதமெடுத்தணிந்துமணிமுடிகுழைபொற்சுடர்க்கேயூர
மாயவொளிபடுவயிரகடகமணிமதாணியொளிராழிநாண்மு
ணேயமலிதரச்சாத்திநீறொடுசாந்தணிந்துதொடைநிரம்பச்சூட்டிப
பாயநறுந்தூபமொளிர்தீபமெடுத்தறவய்க்கிப்பண்புமேவ. (௧௭)

நாடுதளவரும்பனசுத்தோதனமொண்பருப்படிசினன்பாற்சொன்றி
நீடுகுளப்பொம்மல்புளிபடுமிதவைதிலமூரனெய்யினோடு
கூடுசருக்கரைவல்சிமரிசயினிததிமடைகுய்க்கோலச்செய்து
வாடுதலில்சுவைக்கருனைபாகிலட்டுகந்தோசைவளங்கூர்பிட்டு (௧௮)

பண்ணியமோதகமுழுந்தவடையினியநோலைமற்றும்பகரபூபந்
தண்ணியதெங்கிளநீரின்குளநீர்வண்பழநீர்மோர்சார்ந்ததூநீர்
கண்ணியவொண்சுத்தநீரிவையனைத்து மொரோவொன்றுக்கனிவினல்கிப்
புண்ணியமாரருக்கியர்தாம்பூலமுகவாசமுறைபொலிவினீந்து. (௧௯)

விரைகெழுதூபங்கொடுத்துமேலடுக்குதீபமுதல்விளம்பாநின்ற
புரையில்பலவாகியவாராதனமும்புரிந்துமணப்பூக்கடவிக்
கரையுநிராஞ்சனஞ்செய்தபின்பளிதவிளக்கெடுத்துக்கனிவுமேவ [தி
வுரைபருத்திவித்தொடுவேப்பிலைசுழற்றியெறிந்துவெண்ணீறொளிரச்சாத்

திருந்துதருப்பணங்கவிகைவெண்கவரியாலவட்டஞ்சிவிறியாய
பொருந்துமிவைநேர்வயக்கிப்புதுமலரக்கதைசாத்திப்புனிதந்தீரா
திருந்துதிகழருக்கியமுமீந்துபலமலரிடக்கையேந்திச்சன்ம [ணி.
மருந்துபுரையைந்தெழுத்தும்வலக்கையிற் கண்மணிமாலை வாங்கியெண்

ஆயவினிதாகியநம்மடிமலரிற்சாத்தியபினட்டாங்கத்தி
னேயமிகப்பணிந்தெழுந்துதுதித்துவெளிவந்தொருசார்நிலவுமேவிப்
பாயநமதருளுருவங்குறித்தமர்ந்துபின்னெழுந்துபணிநின்றார்க்கு
மேயபிரசாதநல்கிவிதிப்படிநின்னையும்பூசைவிரும்பிச்செய்வான். (௨௨)

காலைவளச்சுரதீர்த்தம்படிந்திவ்வாறியற்றியவக்கருந்தமன்சேய்
பாலைநிகர்மொழிமடவாய்முனிதீர்த்தமுழுகுபுநண்பகலாமுச்சி
வேலையின்முன்சொற்றபடியெமையுநினையும்பூசைவிழைந்துசெய்வான்
மாலையில்வண்காகநீர்தோய்ந்துபூசனைபுரிவான்மகிழ்ச்சிபொங்க. (௨௩)

பொய்யிறொடுகூடாதபுண்டரீகப்பெயரோன்புக்கிலாய
மெய்யிறொடும்வீடடைவான்சருவதீர்த்தம்படிந்துமேலோங்கன்பின்
மொய்யிறொடுவேண்டுவகொண்டத்தயாமப்பூசைமுயன்றுசெய்வா
னெய்யிறொடாங்குழலாய்நித்தியமிதுநைமித்தியமுநிகழ்த்தக்கேண்மோ.

பனிவரையின்முளைத்தமலர்ப்பசுங்கொம்பேநமக்கன்புபுரியபார்தம்மிற்
புனிதநனியுடையவனம்மடியவரைநாமென்றேபுந்திசெய்வோ
னினியபுனலுடனிப்போன்முனமொழிந்தவளவன்வருமிடையூறோட்டி
முனிவனுளமெப்படியப்படிநடக்குமொருவிரதமுன்போற்பூண்டான். ()

வேறு.

[டைப்
திருகுகோட்டுச்செழுந்தகர்த்திங்களில், வருகுணத்தசெய்வான்றிருநாளி
பெருகுவாசக்கொழுந்துபெருக்கியே,யுருகுமன்பினுளுற்றுவல்பூசனை. ()

கொழுவியிற்பெருங்குண்டைமதிவரு,செழுமுறத்திருநாளிற்சிறப்புறத்
தழுவுசாந்தந்தகக்கொடுபோற்றுவான்-வழுவிலாதமுனிமலைமங்கையே()

மேயதூயமிதுனமதியிடை, யாயவன்றிலவடைதிருநாள்வயிற் [னே.
பாயமூன்றுபழமுங்கொண்டேத்துவான், மாயவாழ்க்கைமதியாமுனிவ

கவைபடுங்கார்க்கடகமதிவரு, நவையிலாதவுடைகுளநாள்வயிற் [லிறுய்
செவையினும்பயங்கொண்டுசிறப்பிப்பான், குவையருமலர்கொண்டுழ

பரவுகின்றபஞ்சானனத்திங்களில், வரவுமேவியமாயவனுளிடை
விரவுசிரயிரான்மிகப்போற்றுவான்,புரவுமேவிப்பொலியுங்கைமாதராய்()

விரைநறுங்குழற்கன்னியிளிர்மதிக், கரைசிறப்பிற்கடைக்குளநாள்வயிற்
புரையிலாதவபூபத்திற்பூசிப்பான்,வரையுதித்தபைந்தோகைமயிலனாய். ()

தொக்கமேன்மைத்துலாமதிவாய்ப்பகை, யுக்கவுலமுறுந்திருநாளிடைத்
திக்கவாவுபதத்திற்சிறப்பிப்பா,னக்கதாமரைபோன்முகநங்கையே. (௩௨)

துட்டனென்றுசொலப்படுநதிங்களி, லிட்டமாமறுநாளிலிலகுறப்
பட்டதீபம்பலகொடுபூசிப்பான், வட்டமாமுலைவாள்விழிமாதராய். (௩௩)

குனிசிலைப்பெயர்கொண்டமதியிடைப்,புனிதமாகியசெங்கைபொருந்துநா
ளினியவானநெய்கொண்டினிதேத்துவான்,கனியுநாணக்கரையுமின்சொல்
விறாய். (௩௪)

திரையுலாமகரப்பெயர்சேர்மதிப்,புரையிலாதகொடிறுபுகுர்தின[ரத்தாய்.
முறைசிறந்தசெந்தேன்கொண்டுவப்பிப்பான்,றரைமுன்யாவையுநதந்தவுத

கோலமேயகுடப்பெயர்த்திங்களின், ஞாலமேத்துங்கொடுறுகநாளிடைக்
காலவாயநெய்க்கம்பலஞ்சாத்துவா, னேலமார்ந்தகருங்குழலேநதிழாய்

விடையமைந்துவெடித்தெழுமீன்மதிக், கடையெழுஞ்சனிநாளிற்கனிவுற
வுடைதராததயிர்கொண்டுவப்பிப்பா,னடையிரேறுதிமநாளுறநாட்டுவாய்.

இந்தவாறுரைமிதிதியமென்பது, நநதநாளுநடாத்துந்திறலினோன்
பந்தமோவபபனவர்குலமெலா,முந்தவாற்றுதவத்தின்முளைத்துளான். ()

பிணையுமின்னவைபேணுவதன்றியுந்,துணையிலாதவத்துங்கமுனிவா
னிணையுநாளொன்றனுக்கிலக்கம்பிரண்,டிணையிலாதவெழுத்தைந்துமெண்
[ணுவான்.(௩௯)

புண்டரீகன்பொலியும்பெருந்தவங், கண்டவானவர்கோனுட்கவலுரு
வண்டரோடினிதாய்நதுசிதைத்திடும்,வண்டவாவுகைமாதரைக்கூவினான்.

அரம்பைமேனகையாதியமாதரார்,வரம்பையோவியமாமைசுமந்துளார்
திரம்பைநாகஞ்சிதைத்திடுமல்குலார்,பிரம்பைமுன்னருற்றீதுநிகழ்த்து
[வார். (௪௧)

வேதனுவியலைத்திடல்வேண்டியோ,வோதமீகிலுறங்குமுகுந்தனு [யோ.
மாதகாதெனவாற்றுதல்வேண்டியோ,மாதவத்தரைவாட்டுதல்வேண்டி

இன்றுநீவிரந்தெம்மைவிளித்தது,குன்றுசெற்றகுலிசப்படையினு [ன்.
யென்றுகூறலுமிநதிரனேுதவ,தொன்றுகேண்மினென்றோதுதன்மேயினு

குணகடற்பெருங்கூலத்தொருதலம்,புணருமாதிபுராணமெனும்பெயர்த்
தணவுமத்தலத்தாய்புண்டரீகன்செய், மணவருந்தவமாற்றுதிர்போமென்
[றுன். (௪௪)

என்றுகூறலுமித்துணையோவெனா,நின்றுநக்குநிலத்தரமங்கைய [யார்.
ரன்றுவந்தனராதிபுராணத்தைச்,சென்றுசேர்ந்தனர்வென்றிநெஞ்சின்தை

புண்டரீகமுனிவன்முன்போயினர், பண்டவாதவிசைபலபாடினா
ரொண்டவாதநடமுமியற்றினர்,தண்டமீதுவிழுந்துதந்தமுவினர். (௬௬)

நம்மையேயுளங்கொண்டுநயந்திடுஞ்,செம்மையாளனிச்செய்கையுணர்ந்தி
லான்,கொம்மைவெம்முலைக்கோடுறத்தாக்கவுந், தம்மைவாட்டுதறியுமொா
[த்தானரோ. (௬௭)

கண்டமங்கையர்நாணங்கதித்திடக்,கொண்டலூர்திதிருமுன்குறுகினார்[ர்,
விண்டவாவத்தலப்பெருமேன்மையாலொண்டவாமலுறையுமுனியென்று

இனியியற்றுவதென்னையெனக்கவன்,றனியமோவியவாண்டளப்பானொடு
ம், புனிதவானவரும்புடைசூழ்வரப், பனிமலர்த்தலையான்பதஞ்சார்ந்தன
தானவேந்தன்வரவுதகத்தெரிந், தானவேதனவரொடுமேவியே [ன்.
மீனவேலைவிழிதுயில்வைபந்தழாய்க், கானமார்பனைக்கண்டுரையாடினான்.

அன்னரோடுமெனையனம்பாலடைந்,தன்னருநதவத்தோங்குமொருமுனி[ம்
முன்னமேவிமுழுதருள்செய்யென, நன்னர்யாமவரோடங்குநண்ணிறே

புண்டரீகன்பொருக்கென்றெழுந்தொரு, தண்டநேரத்தரையிற்பணிந்தன
னண்டருக்குமணுகருங்காட்சியான், கண்டதெங்ஙனமென்றுகளித்தனன்.

உறுவகேண்முனுரைத்தபடிமற்றோர், மறுவில்காட்சியில்வாய்ப்பமின்னெ
ணணமே, பெறுவையென்றுறப்பேசிப்பல்லாரொடு, மறுவிலாதமர்நாம
[ரைந்தாமன்றே. (௫௨)

பொங்குகேள்விப்புகரின்முனிவரன், றங்குமோகைதவாதுதலைக்கொளத்
தெங்குவார்பொழில்சூழத்திருநக,ரங்குமேவியருந்தவமாற்றினன். (௫௩)

பற்றுநீத்தபடிமையர்யாவரு, முற்றுநோக்கியுறுவதிதுவெனக் [துவாம்.
கற்றுமேவிரண்டாவதுகாட்சியைச், சொற்றுளாமினிக்காட்சியுஞ்சொல்

புண்டரீகமுனிவ ரிரண்டாங்காட்சியுரைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம்-௯-இ-திருவிருத்தம்-௫௭௪.

## புண்டரீகமுனிவர்மூன்றாங்காட்சியுரைத்தபடலம்.

மாதவச்சனற்குமாரனந்திவானவனைப்போற்றி
மூதறிவுடையனுயமுனிவற்குமூன்றாங்காட்சி
மேதகுபெருமானல்குகருணையும்விளம்புகென்னச்
சீதளவதனங்காட்டிமகிழ்ச்சியிற்செப்புகின்றான். (௧)

சராசரமனைத்துமீன்றதாயிளங்கொடிவணங்கி
நிராமயபரமானந்தநிருமலபுண்டரீகன்
பராவருமூன்றாங்காட்சிபாலிப்பின்மூன்றுதந்த
புராதனசரிதங்கூறென்றிரத்தலும்புராணன்கூறும். (௨)

ஒருவினம்மிரண்டாம்பாதமுளங்கொடுகருமமாற்றிப்
பொருவருகாலாம்பாதமெய்யொடும்புணர்தல்வேட்டான்
கருவடர்புண்டரீகன்கருதினீதிறம்பூதின்னு
மருமலர்க்கிழவனுதியெவர்க்கும்வாய்த்திடுவதன்றே. (௩)

அம்மையென்றுலகமேத்துமருட்பசுங்கொம்பேமிக்க
செம்மைகொள்புண்டரீகன்றிகழ்மனவாக்குக்காய
மும்மையுமுலகமாயமூன்றினுமுய்த்தல்செய்யா
னம்மையேகுறித்துநிறபாணிருவினைநலிவுந்தீர்ந்தான். (௪)

பொறையுருவமைந்தகோதாய்பொறியைநதுமடக்கிநாளு
நிறைதவஞ்செய்தலன்றிநிரம்புநங்குறியைப்போற்றி
முறையுறச்சூழ்தலோடுமுழுதுதீர்த்தமும்யாவோரு
மறைசெய்கேத்திரமுஞ்சூழ்வானருநதவமுருக்கொண்டன்னான். (௫)

இறைசெய்தீர்த்தங்களெல்லாஞ்சென்றுசென்றன்பினுடிக்
கறைசெய்வெண்ணீறுபூசிக்கண்மணிமாலைபூண்டு
புறைசெயைந்தெழுத்துமெண்ணிபபோக்கருங்கனிவுபொங்க
விறைசெயங்கதுப்பினல்லாய்மேதகநமைப்பூசிப்பான். (௬)

அலயகுநங்கோயின்மேவியலகிடலமெழுகன்மற்று
மிலங்குபஃறீபமேறறலாதியவியற்றுவாறை
விலங்குவெங்கரணமொன்றிவிரும்புமைஞ்சுத்தியாற்றித்
துலங்குநம்பூசைசெய்துதொழுதுதோத்திரஞ்செய்வாறை. (௭)

வளியிருவழியுஞ்சேறன்மாற்றுபுநாப்பணுடி
யுளியெழவெழுப்பிநம்மையுணர்ந்தனரிருக்கின்றூறை
விளிவின்முபபொருளுமோர்நதுவெவ்வியபாசநீங்கிக்
களிகொளநம்மோடொன்றுதொன்றிவாழ்கலப்பினுறை. (௮)

கண்டிடுதொறுமார்க்தாண்டன்வரவுகாண்கமலப்போது
கொண்டிடுவிகசிதந்தன்குருமுகத்தியல்பேதோன்ற
மண்டிடுமிடியன்செம்பொன்வைபபெதிர்கண்டாறபோன்று
விண்டிடுமுகமனோடுவிறைந்தெதிர்சழீஇயுவப்பான். (௯)

இன்னணமொழுகுந்துயோனிறையவன்மூன்றுங்காட்சி
நன்னாயாம்பெறுவதெந்தஞான்றெனவுள்ளத்துள்ளி
முன்னருஞ்சறுவதீர்த்தமுழுகுபுகறைமேல்வாநது
பன்னருமாங்குமேவுநங்குறிபரவிப்போற்றி. (௧0)

ஓங்குதென்கரைப்பாலெய்தியுயர்குணதிசையைநோக்கிப்
பாங்குசேர்சுகாசனத்துப்பண்புமேவுறவிருநது
வீங்குநான்முகன்மால்வேதவேதாந்தமுணரொணுத
தேங்குபேரொளியாநம்மைச்சிந்தையிற்பதித்திருந்தான். (௧௧)

என்றுமோர்பொழுதேசற்றுண்டிரவுறும்புண்டரீக
னன்றுதொட்டொருநாள்விட்டுமமைதரவிருநாள்விட்டு
மொன்றுறமூந்நாள்விட்டுமொருங்கொருபக்கம்விட்டு
நன்கொருமதியம்விட்டுநாடாதுசிறிதுண்பானால். (௧௨)

அயனமொவ்வொன்றுநீத்துமொவ்வோராண்டமையநீத்தும்
பயன்மிகவடையுமாண்டுபன்னிரண்டொருங்குநீத்தும்
வியனுறநூறுநீத்துஞ்சிறிதுணவிழையுமன்று
வியலுமெவ்வுணவுநீத்தானிருந்தனன்கற்றுணைத்தே. (௧௩)

இவ்வண்ணமிலக்கமேலோரிருபானுயிரமாண்டெல்லை
யவ்வண்ணமாயநம்மையகங்கொடுபுண்டரீகன்
மெய்வண்ணத்தவத்துமேவமேற்பொங்கியெழுந்ததம்மா
செவ்வண்ணத்தீயினோடுஞ்செறிபுகைப்படலமேன்மேல். (௧௪)

தடநெடும்புகைமேற்பொங்கித்தானமுற்புவனமெல்லாம்
படருபுவெதுப்பலோடும்பண்ணவர்நடுநடுங்கிக்
கடவுவெண்களிற்றான்பாதங்கலந்தனரிறைஞ்சிக்கூற
மடனின்மற்றவனோர்காலமகதியாழ்முனிவன்வந்தான். (௧௫)

வந்தமாமுனியைத்தாழ்ந்துமனைஞ்செய்கற்பகத்தார்வேந்
னிந்தவான்றூமமேவறகேதுநீயுரைத்தியென்ன
நந்தாவன்முகத்தான்வாழுநகர்நின்றும்வருதல்செய்வேன்
சந்தமார்புண்டரீகன்றனைத்தலைந்தவஞ்செய்கின்றான். (௧௬)

அன்னவன்றவத்தாலாயதூமமென்றறைந்தாராங்கு
முன்னமேயுணர்ந்தேனென்றுமொழிந்தனனெழுந்துபோனான்
கொன்னவில்குலிசத்தோளான்குலவரம்பையைக்கூவிப்
பன்னரும்புண்டரீகன்பயிறவஞ்சிதைப்பீரென்றான். (௧௭)

செழுமணிவயிரத்தூணைச்சிதலரிதரித்திட்டாலு
முழுமுதற்பரனையாலமுயன்றெழுந்தடர்ந்திட்டாலும்
வழுவின்மற்றவனைக்காமன்மலர்க்கணைமயக்கிறாலும்
பழுதிலம்முனிவனோன்புபாறுருதெம்மாலென்றார். (௧௮)

இனியவன்செய்துநாமென்றிலேகர்தங்கூட்டத்தோடும்
பனிமலர்க்கிழவன்பாங்கர்ப்படர்ந்தவன்பாதம்போற்றி
முனிவரன்றவத்தாலாயமுழுப்புகைமுருக்குந்தன்மை
கனியெடுத்துரைத்தான்வானநாட்டவன்கேட்டவேதன். (௧௯)

விளையவிந்திரனோடும்பால்வேலையினடுவட்பச்சை
வளைபலகமலம்பூத்துமாநாகமிசைக்கிடந்தாற்
புளையநம்மானைதாங்கிவிழிவளர்புயலைச்சார்ந்தா
துளையமைவணக்கஞ்செய்தாங்குரைத்திடலுற்றான்மன்னோ. (௨௦)

திருமகண்மணாளகேண்மோதிரைக்கடல்வளாகத்துள்ளா
லொருமுனிதவஞ்செய்கினறானுறுபுகைப்படலையாலே
கருகியவனைத்துமோர்ந்துங்கண்டுயில்கின்றாயென்னப்
பருவரலொழியினென்றுபகர்ந்தனனெழுந்தானன்றே. (உக)

மாயவன்பிரமனாதிவானவரொடும்விரைந்து
ஆயநந்திருமுன்வந்துதொழுதுவிண்ணப்பஞ்செய்ய
நேயமால்விடைமேற்கொண்டுவிரம்பியவவர்களோடும்
பாயபல்கணமுஞ்சூழமுனிவன்முன்படர்ந்தாமன்றே. (உஉ)

காட்சிதந்தருளுநம்மைக்கண்டுவல்விரைந்தெழுந்து
பூட்சியோடடையுமுத்திபொருந்தியதின்றென்றுன்னி
யாட்சிகொடவத்தான்பல்காலடிமிசைப்பணிந்துசூழ்ந்து
மீட்சியிலெதிர்நின்றேவாத்துதிபலவிளம்பலுற்றான். (உ௩)

எவனருள்வலியாற்பந்தமெனைத்துமெவ்வுயிர்க்குமெய்து
மெவனருள்வலியாற்பந்தமெனைத்துமெவ்வுயிர்க்குமாயு
மெவனருள்வலியாலோவாவின்பமெவ்வுயிர்க்குமேவு
மவனொருநீயேயன்றியாருளாரறவேற்றண்ணல். (உ௪)

எவனுடையாணையாலேமதிகதிரியங்காநிற்குங்
கவனவார்திரைநீர்வேலைகரைகடவாதுமேவும்
புவனங்களனைத்தும்வைத்தநிலைமையிற்பொருந்தாநிற்கு
மவனொருநீயேயன்றியாருளார்மிளிர்முக்கண்ணாய். (உ௫)

அதிசயம்பயக்குநாராயணவுபநிடதம்யாரை
மதியினிற்குறித்தியாவர்வணங்கினுமவ்வணக்கந்
துதிகெழுநினவேயென்றுசொலுமுனைகுறித்துநாயேன்
விதியிற்செய்வணக்கம்வேறுமேவுமோவிமலவாழ்வே. (உ௬)

சாதலும்பிறப்புமில்லாய்தணத்தலும்புணர்வுமற்றாய்
காதலும்வெறுப்புந்தீர்ந்தாய்நினைத்தலுமறப்புங்காணாய்
நோதலுங்களிப்புங்கூடாய்நுண்மையாயதிதூலத்தா
யர்தன்முன்னொடுபின்சாராயடியனிற்புகழாநின்றேன். (உ௭)

விரிதருபடைப்புக்காப்புவிளைத்திடுதேவர்காளுந
திரியில்சட்டுவமேபோன்றுசெயற்படச்செயற்படுத்தி
யுரிமையிற்காலநோக்கியொழித்துமீட்டுறுத்தல்செய்தும்
புரிதருவிகாரஞ்சற்றும்புணராய்நிற்புணர்வான்வேட்டேன். (உ௮)

அரிதனைத்தனையலாளாயனிவினைமுதலாச்செய்துந்
தெரியொர்பாற்படைத்திரண்டாம்வேற்றுமைப்பொருளாச்செய்து
மெரிகணைசெய்துமூன்றாம்வேற்றுமைப்பொருணீயென்றும்
புரிபடையருளிநான்காம்வேற்றுமைப்பொருள்புணர்த்தும். (உ௯)

செறியிளைப்பொழியவைந்தாம்வேற்றுமைப்பொருளுஞ்செய்து
நெறிகொளத்தழுவியாறும்வேற்றுமைப்பொருணிறைத்துங்
குறிகொண்மார்பமர்ந்தேயேழாம்வேற்றுமைப்பொருளாக்கொண்டு
மறிபெயர்ப்பொருளேநின்னையடைதரமுயலாநின்றேன். (௩௦)

மாயவன்வந்துவேண்டமலரிணைப்பொருட்டுமேய
தூயனைமகவாத்தந்துஞ்சுந்தரமுகங்கணுன்கு
மேயவப்பிரமன்வேண்டவிண்டுவைமகவாத்தந்தும்
பாயகாரணமாய்நின்றபரமநிற்பழிச்சாநின்றேன். (௩௧)

திருமேனியோரொட்டுள்ளுஞ்சிலீமுகமொருமூன்றுக
விருமேனியுருளையாகவியவைவொன்றுகமற்று
மொருமேனியிரதமாகவொன்றுதானவர்கள்சோரப்
பொருமேனிலாஞ்சோமூன்றும்பொடித்தாய்நிற்புணர்தல்வேட்டேன். ()

சயந்தனமறைத்துவைக்குந்தானமுஞ்சடைமுற்பூண
னயந்தபல்கலங்கள்வைக்கும்பேழையுநகுதாண்மேலா
வயங்குபொற்கழலிற்பூண்டுமெருவனும்பிலமாச்செய்து
சயங்குலவடிகேணின்னைச்சார்தரமுயன்றுநின்றேன். (௩௩)

படுசுவையுணவுநல்குமட்டிலும்பகைபோய்ப்பாற
விடுகணையிட்டுவைக்குமாவமும்விரும்பிளஞ்சே
யடுபசிப்பிணிதவிர்க்குமருமருந்தன்னசெப்புந்
தொடுபயக்கடலாக்கொண்டதூயநிற்றொழுதல்வேட்டேன். (௩௪)

நகுசடைமுடியாய்போற்றிநஞ்சுண்டுமுடியாய்போற்றி
கருபால்லுடையாய்போற்றிகாண்டிபற்குடையாய்போற்றி
செகுமழுப்படையாய்போற்றிசிதைவளம்படையாய்போற்றி
மிகுதிறலேற்றாய்போற்றிவிரிந்தநீரேற்றாய்போற்றி. (௩௫)

சூலவெம்படையாய்போற்றிதொக்கதோலுடையாய்போற்றி
ஞாலமுண்விடையாய்போற்றிநதிமதிச்சடையாய்போற்றி
யாலமுண்டுடையாய்போற்றியலருளத்தடையாய்போற்றி
மாலமர்புடையாய்போற்றிவான்புகழ்நடையாய்போற்றி. (௩௬)

மறைமுதற்கலையாய்போற்றிவண்மதிக்கலையாய்போற்றி
யிறைமையிற்கலையாய்போற்றியிரசிதக்கலையாய்போற்றி
நிறைதிசைக்கலையாய்போற்றிநிலவுகைக்கலையாய்போற்றி
யறையொளிக்கலையாய்போற்றியரவமேகலையாய்போற்றி. (௩௭)

வரிசிலைமலையாய்போற்றிவயங்குகமலையாய்போற்றி
யுரியவமலையாய்போற்றியொண்டாழைமலையாய்போற்றி
•புரியகமலையாய்போற்றிபுயலெனுமலையாய்போற்றி
யரியொடுமலையாய்போற்றியலரகமலையாய்போற்றி. (௩௮)

திருநகரராசாய்மன்னுஞ்சிவராசதானியென்னு
மொருநகரரசேபோற்றியும்பர்நாயகனேபோற்றி
பெருமறையின்னுர்தேருப்பேரருளாளபோற்றி
பொருவிடைப்பாகவாதிபுராணநாயகனேபோற்றி. (௩௯)

பொருவரும்வளஞ்சாலாதிபுராணத்தினினிதமேவி
மருவுயிர்தழைப்பநல்கிவாழ்கருந்தடங்கணம்மை
யொருபுறத்தமையக்கொண்டவுத்தமயோகிபோற்றி
பெருமையிற்பொலிகாயாரோகணப்பெருமானேபோற்றி. (௪௰)

என்றுரைத்துருகிக்கண்ணீரிழிதரவெதிர்நின்றானை
நன்றுளக்கருணைபொங்கநாமிருகரத்தால்வாங்கி
யொன்றுதலமையக்காயத்தொடுமாரோகணஞ்செய்தோமோர்
கன்றுதலின்றியொன்றாய்க்கலந்தின்பந்துளைந்தானன்றே. (௪௧)

இன்னதுகண்டவானோரினர்மலர்மாரிபெய்தார்
பன்னகக்கிடக்கையானும்பங்கயத்திருக்கையானுந்
தன்னிகர்புண்டரீகமுனிவரன்சார்ந்ததெண்ணி
யன்னமென்னடையாயொல்லாவழுக்காற்றுண்முழுகினூரால். (௪௨)

வெங்கதிரவனுஞ்சீதமதியெனமெய்குளிர்ந்தாண்
மங்கலமலரளாவிமந்தமாருதமுலாவிற்
றங்கணர்கருணையென்னுவிருந்ததென்றுடியாடித்
துங்கநன்முனிவரொல்லாந்தோய்ந்தனருவகைவாரி. (௪௩)

அறிவினிற்சிறந்தோர்பன்னாள்வருந்தியுமமையுமாறு
முறிவருமெமதுநாலாம்பாதமேமுயங்கிவாழ்வார்
செறிவலிச்சீயம்யானைத்திறன்மருப்புறுவோரன்றிப்
பிறிதுமொன்றவாவுங்கொல்லோபிறழ்கருநடங்கணல்லாய். (௪௪)

பொருவரும்புண்டரீகன்புணரருமினையமுத்தி
மருவியதினையவாதிபுராணத்தினவலியாலென்பார்
பெருகுமிச்சறுவதீர்த்தப்பிறங்குமான்மியத்தாலென்பார்
வெருவருமினையமூர்த்திவிளங்கிடும்விசேடத்தென்பார். (௪௫)

இத்தரம்புகன்றவானோரிலங்குமச்சறுவதீர்த்தத்
துத்தமமேவமூழ்கியொளிருநங்குறிபூசித்துத்
தத்தமதிருக்கைசேர்ந்தார்தவலருமுனிவர்பல்லோ
ரத்தலமகலாராகியருநதவம்புரிந்துவாழ்ந்தார். (௪௬)

அன்றுதொட்டனையதீர்த்தமரும்புண்டரீகதீர்த்த
மென்றுபேர்புனைந்ததின்றுமெய்ம்மையேயென்றுகூற
லொன்றுவெண்கமலம்பல்லவுருகெழவலராநிற்குங்
கன்றுபல்லுயிருமின்பங்கலவகோக்கிடுகணல்லாய். (௪௭)

முன்னியபுண்டரீகமுனிவரன் சரிதங்கேட்டு
மன்னியசறுவதீர்த்தம்வாஞ்சையிறுடியெங்கு
மன்னியமில்லாநம்மையன்புறப்பூசைசெய்வார்
மின்னியவடிக்கலப்பின்மேவுதலுண்மையாமால். (சஅ)

புன்னியம்பாவமில்லையெனப்புகல்பொல்லாமூர்க்கர்
மன்னியமணியேபோலுமாதலப்புண்டரீகன
கன்னியசரிதங்கேளார்கேட்பினுங்கரையார்மேலோ
ரன்னியதீங்கேசார்வரவரோமெறைந்துளோரும். (சக)

விரும்புறமுன்னமாதிபுராணமென்பெயர் ... மவிற்கு
விருஞ்சிவராசதானிபெனும்பெயர்பின்னராய
தரும்புகழ்மைசாயாரோகணப்பெயரமைந்தததுஞ்சூ
கருங்கருப்மரீஇயிற்குற்பின்காரோணமெனவோரொன்முன். (ருo)

என்றலுமுமைமகிழ்ந்தாள்காயாரோகணமெனும்பேர்
நன்றினிதமைதற்கேதுவுணவொன்முனந்திப்புத்தே
ளொன்றியபுண்டரீகனுற்றதையெடுத்துச்சொற்றும்
வென்றிசைதேவதீர்த்தமான்மியம்விளம்பலுற்றும். (ருக)

புண்டரீகமுனிவர்மூன்றுங்காட்சியுரைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் கo-க்கு திருவிருத்தம் சுஉரு.

## தேவதீர்த்தப்படலம்.

தாவரும்புகழ்ச்சனற்குமரன்றங்கவர்
நாவருநந்தியையநயாதுபோற்றுபு
தேவதீர்த்தத்துமான்மியமுஞ்செப்பென
வோவருமகிழ்ச்சியினுரைததன்மேயிறுன். (க)

மலைமகளாகியவன்னைவானதிக்
கலைமதியொடுபுனைகடவுட்டாழ்ந்தெழா
வலைகடலுகைக்காரோணத்தற்புத
முலைவறக்கேட்டுமிக்குளமகிழ்ந்துளேன். (உ)

மறிதிரைப்பெருங்கடல்வளைப்பில்யாருநன்
னெறிகடைப்பிடித்திலர்நியமநீத்தன
ரறிமறையவருநின்னடியிற்பததிமை
செறிதரக்கொண்டிலர்கலியின்றீமையால். (ங)

குறையறமார்பகங்கொண்டநூலான்
மறைமுதனூலெலாமதித்துக்கொண்டிலர்
நிறைபுகழ்நீற்றினைநீத்துவேறுவே
றுறைதரவிலாஞ்சனைநுதலுறுத்துவார். (ச)

நீறுமெய்ப்பூசுமந்தணருநேரதன்
மாறுவாயாற்பிறபெயர்வழுத்துவார்
வேறுரைசெய்தலுமெய்ம்மையோவதற்
கூறுறவுள்ளத்திலுன்னல்கோடியே. (௫)

அந்தணரென்பதற்கமைந்தகாரணஞ்
சிந்தையிற்கொளாரிடுகுறிசெய்தாரினு
நந்தியதீத்தொழினயந்துளாரெனல்
வெந்தொழின்மேற்றெனவிருப்பிற்கொண்டுளார். (௬)

இழிதொழிலியற்றியும்யாவர்மாட்டும்வெம்
பழிபடுபட்டிமையாதிபண்ணியு
மொழிவறவுணுமுதல்விற்றுமோகையிற்
கழிபொருளீட்டலேல்கருத்தமைத்தனர். (௭)

பொருண்மறையவர்களிப்புன்மைமேவலால்
வருணமாச்சிரமமும்வழீஇமற்றியாவரு
மிருண்மிடற்றன்னடியெண்ணலோவினர்
மருண்மனத்துதரமோம்புதலின்மன்னினர். (௮)

மன்னவர்நெறிமுறைமாறுறாலுணர்
முன்னவருளுமுழுதொழின்முயற்சிசெய்
பின்னவருளுஞ்சிலரன்றிப்பேதுறீஇ
யென்னருநெறிமுறையிகந்துமேவுவார். (௯)

மற்றிவராயுளுஞ்சிறியவல்வினை
யொற்றியநோய்களோபெரியவொன்றுபு
முற்றியவறுமையான்மூடப்பட்டுளார்
பற்றியஞானமுமனுவின்பாலதால். (௰)

ஆதலிற்பிறப்பிவரகன்றுமுத்தியிற்
காதலிற்புகுவதெக்காலமன்றியுஞ்
சாதலிற்பெருந்துயர்தருபல்கும்பியும்
போதலிற்றளருமேபுடைவறத்தலால். (௧௧)

ஆனைத்திற்பெருந்துயரனைத்துந்தீரக்கா
ரோணத்தின்வசித்துனைப்போற்றலொன்றுகொன்
மாணத்தினகப்படுமற்றுமுண்டுகொ
லேனைத்தின்கரத்திறையியம்புகென்றனள். (௧௨)

என்றலுந்திருவுளமிரங்கியெம்பிரா
னன்றலினமதுகாரோணத்தல்குபு
பொன்றலிலாநலமைப்போற்றலன்றியு
மொன்றலிதென்றுளதுரைப்பக்கேட்டியால். (௧௩)

வினைதபுநமதுகாரோணமெய்ப்பெயர்
புனைகுறிக்கழற்றிசைப்பொருநதுநீரது
தனையருந்தனத்தரோசாரத்தக்கது
வனையினம்போலுயர்மாட்சிமேயது. (௧௪)

ஆதிநாளுமினிதமைக்கப்பட்டது
நீதியாடினர்க்கெலாநிரப்புநீரது
காதிமாபாதகங்காற்றவல்லதா
லோதிமாமுகிலனையுளதோர்தீர்த்தமே. (௧௫)

அறுபதின்றலையிடுமாறுகோடியென்
றுறுபெருநதீர்த்தங்களொருங்குதொக்கது
மறுவறநினைப்பினும்வழுத்தகேட்பினுங்
கறுவறக்காணினுங்கதிகொடுப்பது. (௧௬)

அதுநிகர்தீர்த்தமற்றகிலத்தில்லையான
மதுமலர்க்குழலினாய்மற்றதன்சிறப்
பிதுவெனவுரைக்குநரோவர்யாமலாற
புதுமையதுறச்சிலபுகலுவாமரோ. (௧௭)

கூறுமுப்பத்துமுக்கோடிததேவரு
நாறுகற்பகத்தொடைசூயநதவேநதனு
மூறுதேமலர்த்தவிசுளானுந்தார்க்கிய
னேறுமாயனுமற்றையாருமுனனொநாள். (௧௮)

இரணவேலவுணரோடேற்றுவென்றிட
மரணநீத்தமர்பெருவன்மையெய்துவா
னரணமாமருநதுபெற்றருந்தலெண்ணினா
சரணமேவினருளர்தவாதகாட்சியாய். (௧௯)

புரைதபுமந்தரப்பொருப்புநாட்டினார்
விரைதரவரவநாண்விழைந்துபூட்டினார்
தரைபுகழ்பெருமதித்தம்பநகூட்டினார்
கரைபொருதிரங்குபாற்கடலைவாட்டினார். (௨௰)

ஓடதிகொடுத்தனருறக்கடைந்திட
நாடருஞ்சுவைதக்குடநலகெழுநததா
லாடல்சாலமரர்களதுகைப்பற்றினா
வீடருமவுணரைவெரீஇயினாரரோ. (௨௧)

கலிமிகுமாற்றலர்காணவும்பமேல்
வலிமிகுபுயத்தவர்வெளவினென்செய்வா
மொலிகடல்வரைப்பகத்துறுதுணைய
பொலியிடமெதுவெனப்புநதியாய்நதனா. (௨௨)

கடையெழுவெள்ளமுங்கலங்கக்கண்டவர்
தடைபவர்தமைப்புரந்தழிவிலாதமர்
மிடைவளத்திருநகர்வேறுகண்டிலே
முடையவர்சிறந்தகாரோணமென்றலால். (௨௩)

என்றுநம்முளங்குறிக்கொய்திருவண்
வென்றுயர்தீர்த்ததின்விடையுநதென்கரை
நன்றுயர்சுதைக்கடநயந்துவைத்தனர்
துன்றுவண்புனல்படிந்தணைறுணிந்தனா. (௨௪)

எண்ணியபடியிருந்தடத்திறங்கினு
ரண்ணியசங்கற்பமறைந்தமூழ்கினர்
தண்ணியவெணெபொடிதயங்கப்பூசினா
புண்ணியமலிதரக்கரையிற்போதமுன. (௨௫)

இருஞ்சுதைக்கும்பமோரிலிங்கமாகநா
மொருங்குளாதெண்ணிநின்மொளியியேகமாய
மருங்கிருளறுத்ததுவயங்ககண்டனா
லருங்குணத்தைபுகுந்தமாநதுளேமரோ. (௨௬)

உலகில்கன்ருப்புதட்பிழுக்கையோர்மரண்
முலயளந்திடுமொருகருவிமொக்கணி
யலைவறவிவைவெலாமமருநாஞ்சுதைக
நிலையகும்பத்திடைநீங்குமேயகொலோ. (௨௭)

வானவர்சுதைசாருடமருங்குவாதனர்
தானகுமிலிங்கமாய்த்தயங்கக்கண்டனர்
ரானதொனறிஃதெனவறிடவிறிஸ
ரீனமிலுளத்திகைபெய்தினாரரோ. (௨௮)

செறிதருவானவர்திகைப்புமாறிட
வறிதருமலமிலிங்கத்துநின்றிடாவ
குறிதருமாலமழுவகொண்டகையொடும
வெறிதருகூந்தலாய்வெளிவந்தாமரோ. (௨௯)

வெளிவருநம்மைநவீழ்ந்துபண்ணவ
ரொளிவருசோதியேயெங்கடெய்வமே
யளிவருகருணையேயமலமேயென
தளிவருங்கண்ணொடுதுதிசெய்தாரரோ. (௩௦)

துதிபுரிபவர்முகநோக்கிசனயவித்
திதிபெறுதலந்திடைச்செறிந்தவாலுகப்
பொதியெலாமிலிங்கமாய்ப்பொலியுமென்றிடி
லதிசயச்சுதைகடமயலொன்றுகுமோ.

ஏற்றஞ்சாலமுதகடேசமென்றொரு
தோற்றஞ்சால்பெயர்பெறீஇத்தலங்குமித்தல
மாற்றஞ்சாறுதியொடுவணங்குவார்க்கரு
ளூற்றஞ்சால்வினையொழித்துதவுநாளுமே. (௩௨)

வண்பதுமாசனனுதிவானுளி
ருண்பதுபோயதென்றுளம்புழுங்கலீர்
பண்பதுபராயவித்தடத்துநின்றுமோர்
நண்பதுசால்சுதைக்குடநன்றீகுவாம். (௩௩)

என்றொருசுதைக்குடமெழுநினைந்தன
மன்றொருகடலெழுமமுதவிந்துவி
னன்றொருங்கெழுந்ததுநயந்துகண்டனர்
பொன்றொருதினமுமின்றென்றுபுங்கவர். (௩௪)

வெருவழுதெதிர்ப்படேஉவெறுத்தல்சாலமு
தருவருளாற்றலமைந்ததன்றெனு
மருதுநிற்பார்களோவாங்கியுண்டுமெய்
யிருவலிபெறுமினென்றியம்பினுமரோ. (௩௫)

அருண்மறுத்திடுவதற்கஞ்சிவானவர்
தெருள்சுதைக்குடத்தினைச்சென்றுபற்றினார்
வெருளறயாவரும்விரும்பியுண்டனர்
மருளில்யாமாவயின்மறைந்துளேமரோ. (௩௬)

மறைமுடிவயன்றுநாமறையக்கண்டனு
நிறைவெருக்கொண்டதுநீங்கிப்பின்னரு
முறையினத்தடம்பயிழிமுன்னினார்க்கெலாங்
குறைதபுகருணைக்காரோணம்புக்கனர். (௩௭)

ஆண்டெம்மையுமருளமைந்தநின்னையும்
பூண்டபேரன்புளம்போற்றியாங்கொரீஇ
மீண்டுவந்தமுதகடேசமேவினார்
தூண்டுகாதலின்மிகத்துதித்துப்பூசித்தார். (௩௮)

விடைகொடுத்தமதிருக்கைமேவினார்
குடைபவர்பாதகங்குமைக்குமபபுனல்
சடையுறுத்தேவபுட்கரணியாயது
நடைகொளிவ்வேதுவாலுணர்திநங்கைநீ. (௩௯)

தேவதீர்த்தப்பெயர்செறிந்தவாவியுள்
யாவர்போய்க்குடையினுமிசைந்தவெவ்விய
பாவநூறுயிரகோடிபாறிடு
மேவமால்வளைவருவிமலையின்னுங்கேள் (௪0)

வேறு.

ஆயவெங்கதிரோனவொருபொழுதுசெய்யரசும்
பாயதார்லைக்கணடுப்பொலிதருபண்புந்
தூயவானவர்தம்பசியவித்திடுதுணிவு
மேயசீதளகலைமதியென்பவன்மேனாள். (௪௧)

பரமடந்தையர்ப்புணர்தலிற்படுபழிபாவந்
திரமடைந்திடுமென்பதுதன்னுளந்தெரிந்துஞ்
சிரநெடுந்துயர்விளைத்திடுகருமலச்செருக்கால்
வரமிகுங்குருமனைநலம்புணர்வதுமதித்தான். (௪௨)

ஆன்றசாலிமுற்பற்பலருயர்புற்றதறிந்துஞ்
சான்றபேரொழிற்றாரையுஞ்சந்திரனழகே
மான்றவுள்ளத்துமதித்தனள்வருபழிமதியா
டோன்றவாண்டளப்பாற்பிழைத்திடுவதேதுணிந்தாள். (௪௩)

இருதிறத்தருமின்னராயொழுகுழியொருநா
ளொருகழைச்சிலைகோட்டியொண்சுருப்புநாண்பூட்டிக்
குருமலர்க்கணையெடுத்தெடுத்தளப்பிலகூட்டித்
தெருமரச்சமர்செய்தனன்மாரவேள்சினந்து. (௪௪)

வருமலர்க்கணைபாய்தலுநெஞ்சமாழாந்து
கருகிருட்கதிரரசனில்லமையத்திற்கசிந்து
வெருவரச்சென்றுதாரைமென்மலர்க்கரம்பிடித்தா
னருவருப்புறுதவளுமற்றவனுடனணைந்தாள். (௪௫)

கொண்டுபோயொருதன்மனைக்குறுகிமெல்லமளி
மண்டுவான்பரியங்கத்தினிருத்துபுவரம்பு
விண்டுமேல்விழாமெய்யுறத்தழுவிவாயூற
லுண்டுதேக்கியொண்முகத்தொடுமுகமியைத்துவந்தான் (௪௬)

முத்தமுண்டனனிளமுலைவருடினன்முழுதுஞ்
சித்தமின்புறவணைக்கலைநெகிழ்த்தனன்செழும்போ
தொத்தவொண்கடிதடத்தவிடுத்தனனுவப்புற்
றத்தலைப்படுங்கடலகத்தழுந்தினனுலோன். (௪௭)

மதியழிந்தொருமதிகுருமனையொடிவ்வண்ணங்
கதியமைந்தவர்போன்றுபன்னாளுளங்களிக்க
விதிகொளந்தணன்மனைவியைக்காணலன்வெருவித்
திதியமைந்தவைப்பெங்கணுந்தேடினன்றெரிந்தான். (௪௮)

பாவகாரியீதாற்றியதென்னெனப்பதறித்
தேவர்வேந்தனோடொருழியடைதரத்திரட்டி
மேவவெவ்வியமதிபுரிசெயலெலாம்விளம்பி
யாவராந்துறவடைகுதுயினியெனவறைந்தான். (௪௯)

குரவன்வாய்மொழிசெவித்துளைகுறுசலுங்கொதித்துப்
பரவுவானவர்யாவருமிகமனம்பதறிக்
கரவனாகியமதியினைப்புடைத்திலட்கழித்து
விரவுதன்பழுங்கழிக்குதுமெனவெகுண்டெழுந்தார். (௫0)

அதுதெரிந்துமிக்கஞ்சுபுவிதிர்விதிர்ப்படைந்து
விதுபளிங்கமரிடம்புகூஉவவனடிவீழ்ந்து
கதுமெனச்சுரர்வளைந்துபோர்குறித்ததுகரைய
விதுவெனாவதென்றவனுமற்றவுணருக்கிசைத்தான். (௫௧)

தீயதானவர்வட்டுடையிறுக்கினர்சினத்திற்
பாயமாமுகரோமமுமுறுக்கினர்பலகை
யாயவாள்சராசனமுதல்யாவுங்கையமைத்தார்
மாயவான்சமர்குறித்துவாளுடைவளைந்தார். (௫௨)

திதியளித்தவர்வளைந்தமைதெரிந்துகண்சிவந்து
பொதிகுடச்சுதையெடுத்தயின்றமரராய்ப்பொலிவார்
கொதிசமர்த்திறற்கோலத்திற்குறைவறக்கொண்டு
மதிபிழைப்பதின்றெங்கெனவாளமரேற்றார். (௫௩)

சிலைவளைத்தனர்செறியநாணேற்றினர்திகழின்
மலைபிளப்புறமாமதயானையுமயங்கித்
தலைவிதிர்த்திடநாணொலியெழுப்பினர்சலதி
யலைமுழக்கமுமச்சுறத்தோள்புடைத்தார்பபார். (௫௪)

ஒன்றுபத்துநூறாயிரமெனக்கணையுகைப்பார்
சென்றுசென்றுவாள்வீசுபுசாரிகைதிரிவா
ரன்றுவாள்வெட்டுப்பலகையிற்றகைந்துசென்றடாப்பா
ரின்றுவென்றிமற்றெமதெனநெடுமொழியிசைப்பார். (௫௫)

பரியுகைப்பவர்பரியுகைப்பவரொடுங்கழைசொல்
கரியுகைப்பவர்கரியுகைப்பவரொடுமுருளைக
கிரியுகைப்பவர்கிரியுகைப்பவரொடுஞ்செங்க
ணரியுகைப்பவரரியுகைப்பவரொடுமமர்த்தார். (௫௬)

மண்ணிடைப்புகும்வாளராக்குலம்பலவயங்கும்
கண்ணிடைப்புகுமழைக்குலத்திடைப்புகுங்கார்கோ
ளெண்ணிடைப்புகுந்திசையெலாம்புகுமிருதிறத்தா
புண்ணிடைப்புகுந்தருவியபொருதிறற்பகழி. (௫௭)

முடியழுத்தியமணிபலதெறித்திடமுழுதுங்
கடிமணக்குழைசிதர்ந்திடத்தோள்வளைகழல
வடிபிடித்தனர்மேலெடுத்தறைந்திடுமள்ளர்
தடியிடைக்கதிர்ச்சாலிகொளமள்ளரும்போன்றார். (௫௮)

மொழிந்தமள்ளர்களறைதலுமுற்றியசெந்நெல்
கழிந்தவையினைமேலெடுத்தெறிதிறங்கடுப்ப
வழிந்தநெஞ்சிலாவொருவனையொருவர்தொட்டறைந்து
பிழிந்தவாற்றல்செய்தெடுத்தெடுத்தெறிவர்மேற்பிறங்க. (௪௯)

தோளிழந்தவரிழந்தனர்தும்பைமாலிகையுந்
தாளிழந்தவரிழந்தனர்தழங்கொலிக்கழலும்
வாளிழந்தவரிழந்தனர்பிடித்தவன்கையு
நாளிழந்தவரொன்றிருதிறத்தருணலிந்து. (௫0)

ஆவமாகிமெய்சிவப்பவும்விழிச்சிவப்பழியா
ரோவமேயெனநிற்பினுநிற்பரஃதொழிந்து
மேவமுன்வைத்தபாதம்பின்வைத்திடாவிறலார்
பாவமுந்தருமமுஞ்சமராடியபடியார். (௫௧)

ஒருவர்தண்டமற்றொருவர்கைத்தண்டத்தாலுடையு
மொருவர்தோமரமொருவர்தோமரத்தினொழியு
மொருவர்வெஞ்சரமொருவர்வெஞ்சரத்துடைந்தோடு
மொருவராற்றன்மற்றொருவராற்றலிற்றளாயுறும். (௫௨)

படையிழந்தவரொண்ணிமெய்ப்புதைபடைபறித்துத்
தடையிலாதெதிர்சமர்செயவம்மினென்றழைப்பார்
படைபறித்தவருளுஞ்சிலர்கோளுதல்பார்த்துத்
தடையிலாதுடற்புண்ணிட்டுமிழ்த்தனர்சார்வார். (௫௩)

மேயவாகவப்பூமியின்மரிதரவிழ்ந்த
பாயகேடகம்பரிகலம்பரந்தவீழ்மூளை
யாயசொன்றிமற்றதன்மிசையிருளம்பருப்பு
நேயமென்றசைநிணமெலாநிரப்பியகறிகள். (௫௪)

என்புவற்றல்வீழரக்குநீரினிதுபெய்திருந்து
வன்புமேயதோன்மூடியபரிவட்டமாக
வன்புமேவியசயமகளிவேதனமமையும்
புன்புலாலுடல்சாய்ந்தவர்பணிபவாபோன்றார். (௫௫)

இந்தவாறமர்நிகழ்வுழியுலகெலாமேங்கச்
சந்தநான்முகனறிந்தவணடைந்தமர்தணித்துப்
பந்தமேவியமதியினைக்கூயவற்பார்த்து
நந்தநீயிவன்செய்தனையென்றிதுநவில்வான். (௫௬)

கற்றகல்வியும்பரிதியோடெண்ணிடுகணிப்புஞ்
சொற்றகோள்களுளொன்றெனத்துலங்கிடுமாண்பு
மற்றமோவவெவ்வுணவுநன்றுக்கிடுமேமையும்
பெற்றநீயிவன்செய்தனையறிவிலாப்பேதாய். (௫௭

ஈரநெஞ்சிலாமுருட்டுருமிதுசெயத்துணியார்
வீரமொன்றிலாவலியுருமேல்விளைந்திடுமே
பாரமோவுருப்பாதகந்தடிக்குமேயயலார்
தாரம்வெளவினூர்நரகன்றிச்சார்வதுமுண்டோ. (௬௮)

தீயசெய்தனைதாரையைவிடுமதிசெத்தோ
ஞயசெய்கையையுயிருடனிருந்துமென்றறைந்தான்
தூயதேவர்கள்குரவனைப்பிழைத்தவித்துட்டன்
மேயவேள்வியிற்பாகமெய்துரனெனவிதித்தார். (௬௯)

நிலைகலங்கியவிமகரனெடிதுயிர்ப்பெறிந்து
தலைவனைந்தொருதாரையைவிடுத்தனல்வியாழந்
கலைசொலுங்கழுவாய்செய்துகைக்கொடுபோனு
னலைவில்வானவர்யாருந்தம்மிருக்கைசென்றடைந்தார். (௭0)

முத்தவாணகைத்தாரைசின்னுளிற்குன்முதிர்ந்து
வித்தரேரொருமைந்தனையீன்றனள்வெய்யோ
னொத்ததானவனென்மகனெனவழக்குரைத்தான்
அத்தவாரியன்றன்மகனேயெனச்சொற்றான். (௭௧)

இருவருங்கலாய்த்தின்னமாறுமேல்வை
மருமலர்த்தவிசோன்முனம்போலவேவந்து
குருமலர்க்குழற்றாரையைநேர்வரக்கூவிக்
கருவில்யாவராலமைந்ததிக்கான்முளையென்றான். (௭௨)

என்றகாலையிலறிந்திலாய்போலவீங்கென்னை
யொன்றநீவினவியதெவன்மதியெனவுரைத்தா
ளன்றவன்மதியாலெனல்குறிபபினுலறிந்தான்
வென்றதானவன்பாலுறமகவினைவிடுத்தான். (௭௩)

அன்னதூர்பவன்றனமர்வளநகரடைந்தான்
பின்னமேவுறுத்திவினைபெருகலான்மதியோன்
முன்னமேவியதேசுமுற்றொழிதராமுன்னி
யென்னகாரியஞ்செய்தனமென்றிழித்திருந்தான். (௭௪)

மதலையாம்புதனைத்தழீஇமகிழ்தலினிந்த
விதலைதீர்திறமின்றெனமெலிந்துளத்தெண்ணி
முதலைசூழ்புவித்தீர்த்தங்களிடைச்சென்றமூழ்கி
னதலைவார்துயர்தீர்க்குமென்றவனிவந்தடைந்தான். (௭௫)

ஆயகங்கைமுற்றீர்த்தங்களனைத்தினுந்தோய்ந்தான்
சாயமேவொளிமுன்னையிற்பொலிதரக்காணன்
மேயபாதகம்வீந்திலதின்னுமென்செய்வா
மாயமோவிஃதென்றமுதிரங்கினன்மதியோன். (௭௬)

அந்தவேலையின்மகதியாம்முனிவரனடுத்தான்
முந்தமேவியயாவையுமறிதரமொழிந்து
சந்தமேவவனடிமிசையழுதுதாழ்ந்தெழலு
நந்தவோதுவதுண்டெனவவனையவனவில்வான். (௭௭)

குணகடற்கரைநாகைக்காரோணத்தைக்குறுகி
யணவுதேவதீர்த்தத்துநீமூழ்குவையாகிற்
புணரும்பாதகமெவ்வளவிருப்பினும்போகு
முணருமாறுநீமுன்னையிற்பொலிவையென்றுரைத்தான். (௭௮)

சொற்றவாசகங்கேட்டலுமுவகையிற்றுளைந்தே
யற்றமேதுமின்னாகைக்காரோணம்வந்தடைந்தா
னுற்றவானவர்பலர்சூழீஇக்குடைவதுமுணர்ந்து
வெற்றதேவபுட்கரணியாதெனவினவினனே. (௭௯)

ஈதுதானெனநிகழ்த்தினருவகையிற்கெய்திச்
சாதுவானவரவரொடுமத்தடம்படிந்தான்
காதுதீவினைவேரொடுங்கருகியதுடனே
போதமுன்னையினுருப்பொலிந்தெழுந்தனனுவந்தான். (௮௦)

வெய்யபாதகமுழுதுமுன்விடுபடப்போக்கி
யையமுன்னையிற்பொலிவுநன்கருளியதென்னில்
வையமெங்கணுநாடினுமிதுபொருவும்வாவி
செய்யவாயினுமுண்டுகொல்செப்புவதினியென். (௮௧)

அரவினால்விடுபட்டவனத்தலங்காலோன்
புரவினுயர்ந்திருக்கோயிலுட்புகுந்தே
யிரவினற்புரிகண்டத்தெம்மிணையடியிறைஞ்சி
யுரவினுற்பொலிவினையும்வழுத்தினனுமையே. (௮௨)

திருந்துநங்குறிப்பதிட்டையுமினிதுறச்செய்து
பொருந்துபூசனைபொருமதிசெய்தனன்போற்றத்
திருந்துபல்வரங்களுந்தந்துதேவரோடளாவி
யருந்துவெள்வியிற்பாகமும்பெறும்படியளித்தோம். (௮௩)

விரைசெயாம்பல்கண்முகமலர்ந்திடவெழும்வீபத்
துரைசெய்முன்னையிற்சிறப்படைந்துவப்புறப்பணிந்து
புரைசெய்காமருள்விடையொடுந்தன்பதம்புகுந்து
தரைசெய்தன்செயல்புரிந்துவாழ்ந்திருந்தனன்களித்தே. (௮௪)

மன்னுதேவதீர்த்தப்பெருமான்மியம்பகரி
னன்னுதாலவிட்டெவர்நவின்றிடவல்லார்
பன்னுதேனினுமமுதினுநனிசுவைபடுமா
றின்னுமொன்றெடுத்தியம்புதுமினிதுகேட்டிடுதி. (௮௫)

## வேறு.

மின்னுநாணுமருங்குல்விமலைகேள், பன்னுமண்ணுலகெல்லாம்பரிப்பவன்
பொன்னுரேரில்குணத்தன்புரூரவா, வென்னுநாமத்தரசனிருந்தனன். ()

மதிக்குலஞ்செய்தவத்துறவந்தவன், விதிக்கொடுந்திக்குமேவும்புகழினன்
றுதிக்கிரங்குநந்தாடொழுவாழ்க்கையா, னுதிக்குமன்பினுயிரினிதோம்
[வான. (அஎ)

அறியுமேன்மையமைச்சர்புரோகிதர், செறியுந்தானைத்தலைவர்சிறந்துற
நெறியுமாலெனநேர்ந்தூறுவிநதோ, மெறியுஞ்செங்கோலினிதுசெலுத்
[தாநாள். (அஅ)

மீனவார்கடல்சூழ்புவிவேந்தகே, ளானவேட்டவினையதுதாழ்த்தலாற்
றூனவாரணமாதிதழைத்தெழூஉ, வீனமாற்றுமெனமுனிறைஞ்சிச்சிலர்.

கேட்டவேந்தன்கிளாந்தூதாழ்த்திடி, லூட்டவாம்பயிராதியொழிதரும்
வாட்டமல்லதென்மனனுயிர்க்குண்டெனு, வேட்டமாடும்விருப்பினெழு
[தனன். (க0)

அணைபிற்காலுரிபாதையுடுத்தினன், விணையக்கச்சுடைவாளொடும்வீக்கி
னன், கணையுமெய்யிற்கவசம்புனைந்தனன், புணையிலாத்தலைச்சாந்தும்பொ
[ருந்தினன். கக)

முதுபெரும்பகையாளர்முடித்தலைக், கதுமெனக்குரம்வைத்துயிர்காறறிடு
வதுகடுப்பின்மறலுங்கொடியகாற், றதுதிறம்புமடற்பரியேறினன். (கஉ

கூற்றம்பல்லுருக்கொண்டன்னகொள்கையர், சீற்றமிலைறியுந்தியெழுநோ
ரோற்றமிக்கவிருந்திறல்வீரர்க, ளூற்றமிக்கவுகையின்முந்தினார். [க்குவா

காயுஞ்சிற்றமும்போர்திங்கருக்குநோர், வாயுமுள்ளால்வலைதருதோகையு
மேயுஞாளிக்குலம்பலவீண்டின, தோயும்வார்வலையாளருநண்ணினர். ()

மிடலொடும்கலில்வெம்பகையோருயி, ரடல்செயும்படையாள்கைப்புரு
வா, விடலிலார்தொடர்வீரொனப்படும், கடலொடும்பெருங்காட்டிட்புகு
[நனன். (கரு)

ஒடியெறிந்தனர்வாருமொழுக்கினர், கடியவார்வலைசூழவுங்கட்டினார் [னர்
துடியெறிந்துவன்றியவேடர்கள், வெடிகொளும்பல்விலங்குமெழுப்பி

சிங்கம்யாளிசினக்குந்தரக்குமா, தங்கமெண்குதவாவலிச்சல்லியங் [ன
அங்கமான்கருங்கேழற்ருடக்கத்த, வெங்கண்மாக்கள்வெருவியெழுந்த

கூடிச்சென்றுசரிசையிற்குத்துவார், நாடிப்பாய்ந்துவைநாந்தகம்வீசுவார்
தேடித்தேடிச்சிலைக்கணைதூற்றுவார், வாடிச்சோரவிவ்வாறமாரற்றினர்.

வாலிழந்தனபல்லவலிநடைக், காலிழந்தனபல்லகலங்கிமெய்த்
தோலிழந்தனபல்லதுடிதுடித், தோலிழந்தனபல்லவுடன்றரோ. (கக)

துடித்திடுஞ்சிலதோலைகயெடுத்துமண், ணடித்திடுஞ்சிலவாரயிலாதியைக்
கடித்திடுஞ்சிலகானகந்துளெழ, வெடித்திடுஞ்சிலமிக்கபன்மாக்களுள்.()

இன்னவாகவனத்துவிலங்கெழூஉப், பின்னமாகிப்பெயர்தருகாலையிற் [ன்.
சொன்னவார்கழற்றோன்றல்புருரவா, மன்னனேர்ந்துவடிக்கணைதூவினு

புலிமுகத்திற்புகுந்தோர்நெடுங்கணை, வலியிற்பின்சென்றுவாலடித்தோன்
றுவ, மெலிவிலாவிவ்விலங்குக்கிரட்டைவா, னலியுமாறுபறதென்னென
நாடவே. (௧௦௨)

ஏற்றயானைமுகத்திலிருகணை, யேற்றவுள்ளாலுழைந்தும்வெளியினுந்
தோற்றநான்குமருப்புச்சமந்ததெத், தோற்றமென்றுதுணிதரவாய்வரால்.

மடங்கலேயெனவல்விரைந்தேகியோர், மடங்கன்மார்புகிழித்ததொர்வன்
கணை, மடங்கல்கூடாவலிசாலொருநர, மடங்கல்கீண்டவலியபுண்மானவே

கணையொன்றுய்ப்பக்கடுமிமதிக்கண்வாழ், தினையனைந்திடமேற்செலுஞ்
சூழ்ச்சிபோ, லிணையும்வேகத்தெழுந்துமேறுருவுவ, பிணையொடும்பயில்
[பெட்பிற்குரங்கமே. (௧௦௫)

மோகவாண்முனிந்தாலுமுனிவுவீண், போகமேன்மயிர்க்கேடகம் போர்த்
தென, வாகநீண்மயிராருங்குடாவடி, வேகமாறும்விடுகணையொன்றனால்.

கோடிழந்தனகுஞ்சரமார்பகர், தோடிழந்தனவேங்கையுயிர்திறற்
பாடிழந்தனபஞ்சானனம்பெருங், காடிழந்தனமொய்ந்நகவரியே. (௧௦௭)

வாளியோயினும்வைநுதிவேல்விடு, மீளியோயினும்வெவ்வியகட்கமா
மாளியோயினுமாங்காங்குப்பற்றிடு, ஞாளியோய்விலதாயினநாடினே. ()

சூலடைந்தபிணையைத்தொலைந்திலான், மாலடைந்தபறழும்வதைத்திலா
னேலடைந்தவுறுசினமாககமோ, வேலடைந்தவிருகதென்றுநூறுவான், ()

மேயவித்திறம்வேட்டைவினைமுடித், தாயமன்னனடுபரிமேற்கொளாப்
பாயவெம்பசிபற்றிவருத்தலாற், றேயமாநகர்துன்னமுடுக்கினான். (௧௧௦)

பரிவிரைந்துபடருகடவையோர், விரிகிளைத்தருகீழலோர்வேதியன்
சரிவருத்தநதணிப்பக்கிடந்தனன், புரிவிறந்திற்புரவியிதித்ததே. (௧௧௧)

உளைவயப்பரியோரடிவைத்தலும், வளைமருப்பெருமைப்பகடூர்பவன்
விளைநயப்புறமேவுநகாசெல்வா, விளைதிறத்தினவீரடிவைத்தனன். (௧௧௨)

கண்டமன்னன்கலங்கி[illegible]வென்றனன், மண்டவந்ததுவன்பிரமக்கொலை
யெண்டவாவிதற்கென்செயலென்றுசீர், கொண்டமாதவர்கூட்டங்குறுகு
[வான். (௧௧௩)

அண்மையோர்பொழிலாங்குவசித்திடும், வெண்மைதீர்விசுவாமித்திரன்
முத, லொண்மையோர்திரளுற்றுப்பணிந்தன, னெண்மையோவநடந்தி
[டம்பிறான். (௧௧௪)

கேட்டமாதவர்கேழ்கிளர்வேந்தகின், வாட்டமோவுமறையவனுக்கிடு
காட்டகத்துக்கடனுரியோர்க்கொடு, நாட்டமேவநடத்துதிநன்றரோ. ()

பின்னர்நீபரிமேதமகம்பினை, நன்னர்மேவநடத்திடுவாயெனின்
மன்னரோறனையாய்வந்ததீங்கொடு, முன்னராற்றியதீங்குமுருங்குமால்.()

என்றுகூறவிறைஞ்சினனேகினன், பொன்றுவேதியனுக்குப்புரிகட
னனறுசெய்நனைக்கொண்டினிதாற்றினு, னொன்றுமாமகஞ்செய்வதற்கு
[ன்னினுன். (ககஎ)

அளவிலாமறையந்தணரைத்தழீஇ, யளவிலாச்செம்பொன்வாரியளித்தன
னளவிலாவறமாக்கும்பரிமக, மளவிலாப்புகழானினிதாற்றினுன். (ககஅ)

அதுபுரிந்துமசன்றிலதாய்ப்பழி, கதுவிநீழலிற்பற்றக்கலங்கியே [னன்.
யெதுசெய்துய்வலினியெனவேதங்கள், சதுவுமோர்ந்ததவுமியற்சார்ந்த

முன்னடந்ததனைத்துமொழிதலு, மன்னமாதவனுள்ளத்தினுய்ந்தனன்
பினைமின்றிப்பிறங்குபன்னூல்களுஞ், சொன்னதீர்த்தங்கள்யாவுந்துனை
[யென்குன். (கஉ0)

தூயகங்கைமுதற்பலதோயமு, மாயவன்பினைணைந்தனைந்தாடினுன் [ன்.
பாயசெம்பொனமுற்முனமும்பண்ணினுன், றியதாயதுதீர்தரக்கண்டிலா

இட்டமேவாசமராற்றற்கெனக்கெழீஇ, யொட்டுங்கோபித்துடன்றெழுமார் .
பகந், தட்டும்போக்குத்தடுக்குநதடம்புயங், கொட்டுமோர்க்குங்குதிக்கும
[திர்க்குமே. (கஉஉ)

பெயர்விலாதபிரமகத்திக்கெவன், செயலெனுவுளந்தேம்பிக்கவுதமி
யுயர்நதிக்கரைபுற்றகவுதம, னயர்வில்பாதமடைந்தனனன்னவே.(கஉந)

அன்னமாதவற்கோதியமுதன, னென்னபாதகமேனுமுள்ளெண்ணலை
யின்னறீருங்கழுவாயியம்புது, மன்னவென்றுவகுத்துரையாடுவான். ()

செறிவளங்கொடென்றேசத்துள்யாவரு, மறிபுலிக்கொடியான்றிருநாட்
டிடைச், குறிகொள்கீழ்கடல்வேலையிற்கோலமார், நெறியினின்றுநிலவுங்
[காரோணமே. (கஉரு)

கெடுபோக்கிடுங்கேத்திராசமென், குடோமத்தொடுமெத்தலமுறும்
பாடுசாலநிறுள்ளுறபாரொலா, ராடுவானவதீர்த்தநராதிப. (கஉசு)

அந்தத்தீர்த்தத்தடைந்துமுழுகுறி, னெந்தப்பாதகமுங்கழிந்தேகிடு
மநதத்தானத்தமரிலிங்கர்தொழி, னெநதப்பேறுமெளிதிற்கைகூடுமே, ()

அடையின்னேயென்றரசனையேவினுன், மிடையுமோகைதுளும்பிடவேந்
தனுங், கடையுறுத்திருக்காரோணதெய்திவிண்,குடையுந்தெய்வப்புனல்
[குடைந்தானரோ. (கஉஅ)

குடைந்தபோதேகொடும்பழிமாய்ந்தது, மிடைந்ததேசின்விளங்கியெழு
ந்தன, னடைந்தவோகையனுய்நம்மெதிரடைந், துடைந்தநெஞ்சினுருகித்
[தொழுதனன். (௧௪௯)

நேயமேமிகநின்னையும்போற்றினன், றூயதெய்வச்சுவைப்புனற்றென்க
ளை,மேயகும்பத்தலமும்விழைந்துதாழ்ந், தேயவங்கணிருந்தனனென்ப
[வே. (௧௫௦)

இதுதெரிந்திலனிந்தநாளெலா, முதுகொடுந்துயர்மூழ்கலுற்றேனந்
வெதுவிரும்பினுமீயுமித்தேமெனுப்,பதுமமாதிபலகொடுபூசிப்பான்.[தோ

பரவுசெம்பொன்பரப்பியுயர்கருக், கிரகமோடந்தமண்டபங்கேடிலா
வரனிலாவியமாமண்டபம்மெழில், விரவவாற்றினைக்கும்விளைத்தனன்,

மலமுயுரிஞ்சுமதிலைந்தெடுத்தனன்,றழைபொற்கோபுரம்பல்லசமைத்தன
ன், விழையுந்தூண்பலமேவியமண்டபம், பிழையில்யாவுமபெருகவியற்றி
[னன். (௧௫௩)

அருள்விராயவமுதகடேசத்தும், பொருள்விராயபலவும்புரிந்தனன் [ன்
றெருள்விராயவண்டெய்வப்புனற்குக்கா, மருள்விராயபடியும்வகுத்தன

விளைநிலங்களுமேதருசோலையு, மிளைகொணர்ந்தவனமுமியைபெருங்
களையமைந்தகனகப்பணிகளு, மளையும்பட்டுடையாதியபல்லவும், (௧௫௫)

குடைவெண்சாமரைகோணுதண்டங்கோ,வடைதருந்தண்டமான்றபல்
பாத்திர, முடைதராச்செம்பொனூர்தியுமற்றுளன், னடைகொள்வேந்தன
[மக்குறநல்கினன். (௧௫௬)

அந்தமாத்தலத்தன்பின்வசிப்பவர்க், குந்தவேண்டுவயாவுமுதவினு
னந்தமாருள்பெற்றுநலம்விராய்ப, பந்தமோவியபார்த்திபனேகினன்.()

தேவதீர்த்தப்பெருமையைச்செப்பினு,மேவவின்றும்விளம்பிலனேகமாம்
பாவமற்றதன்பேர்சொலப்பாறிடு, மோவநேருமொளியிழைமாதராய். ()

என்றுகூறவிறைவிமகிழ்ந்தன, ளன்றுவானவதீர்த்தநலஞ்சொற்று [ம்.
மொன்றுமாமுனிதீர்த்தத்திலுண்மையுங், கன்றுசோகங்கழியப்புகலுவா

தேவதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௧௪-இ-திருவிருத்தம்-௭௬௪.

## முனிதீர்த்தப்படலம்.

நலமலிசனற்குமரனந்திதன்மலர்ப்பாதம்
புலமலிதரப்போற்றிப்புகர்தபுமுனிதீர்த்த
வலமலிமான்மியமும்வகுத்தருளென்றிரப்பப்
பலமலிதவத்தலையான்பன்னுவனுவப்புற்றே. (௧)

இறையவன்முகநோக்கியேழுலகமுமீன்றுண்
மறைமுடியுணர்வரியாய்வானவதீர்த்தத்தி
னிறைபுகழ்கேட்டுவந்தேனிலவுமத்தலத்தின்று
முறைபுனல்சிறந்துளதேலருளெனவுரைசெய்வான். (உ)

பனிமலைவருபாவாய்பதுமகற்பத்திடையுட்
கனிவருகலிவருதல்காணுபுவசிட்டன்முதன்
முனிவரர்மலர்மகனைமுன்னுபுதொழுதேத்திப
புனிதமதுறுதானம்புகறவஞ்செயற்கென்றார். (ங)

அனையவனுளத்தெண்ணியார்கலிசூழுலகிற்
புனைதமிழ்வளநாட்டிற்பொன்னியின்புனல்பாய்ந்து
நனைவளம்பலவாக்குநேரியனன்றூட்டிற்
கனைகடற்கரையுளதுகடைதபுகாரோணம். (ச)

கண்ணியபாதாளகங்கையென்றொருதீர்த்த
மண்ணியசிவபெருமானன்றமைத்திட்டதது
புண்ணியமிகவாக்கும்பொற்புளதத்தலத்தே
நண்ணியததுவைகுந்தானமுநவின்றிடுவாம். (ரு)

கருதியகாயாரோகணலிங்கத்திறுக்கு
நிருதியந்திசைமேவுநிகரிலத்தடம்படிந்து
சுருதிசொல்விதிப்படியவ்விலிங்கத்தைத்தொழுதேத்தி
யொருதினம்வசித்திடிலுமுறுபயன்பெரிதாமால். (சு)

அத்தலமுப்பொழுதுமயின்றினிதிருப்பாரு
முத்தலங்களும்புகழமுத்தர்களேயாவர்
பித்தலமந்துழலும்பேயர்களடைந்தாலுங்
கைத்தலவாமலகம்போற்கதிகாணுவரே. (எ)

கண்டவர்சிவலோகங்கண்டவர்காணாது
விண்டவருயர்பனைத்தும்விண்டவரளறனைத்துங்
கொண்டவர்வசிக்குநசைகொண்டவரமுதள்ளி
யுண்டவர்தொழப்பொலிவாருத்தமரவர்கண்டீர். (அ)

கடுநுகர்காயாரோகணச்சிவபெருமானூர்
வடுவகிர்க்கருந்தடங்கண்ணுமையொடுமெகிழ்ந்தமர்ந்து
கொடுவினைமலமாசுகுறுகினர்தமக்கொழித்து
நெடுநிலம்புகழின்பநிரப்புவர்முனிவரர்காள். (கூ)

சொற்றவத்தலம்புகுந்துயவத்தடம்படிந்து
பொற்றநங்காரோணப்புனிதனைக்கைதொழுது
கற்றவமினிதியற்றியமருமினெனநளினத்
துற்றவன்விடைகொடுத்தானுறவரர்தொழுதெழுந்தார். (க0)

தொழுதெழுமுனிவரெலாந்தூமலரோனுரைத்த
பழுதறுகாரோணப்பதிவயினுறப்புகுந்து
செழுவளம்பலநோக்கிச்சிந்தையிற்களிப்பெய்தி
யுழுவலன்பொடுநிருதித்திசைப்புனலுற்றனரே. (௧௧)

தருப்பைகையுறக்கோத்துச்சங்கற்பம்புரிவாரும்
விருப்பொடுபடிவாரும்வெண்பொடிபுனைவாரு
மொருப்படுபிதிர்க்கருமமொருங்கவட்புரிவாரு
மருப்புறச்சூழ்வாருமாயினர்பலரம்மா. (௧௨)

அதிசயமிகவிளையவன்னதுந்தெரிந்தாராய்
மதிமுனிவரரெல்லாமறைமுதற்கலையுரைக்கும்
விதிகொடுபடிந்தாடிவெள்ளியநீறணிந்து
துதிசெய்கண்மணிபூண்டைந்தெழுத்துமெண்ணினர்துணிந்தே. (௧௩)

நமதருட்குறிமுன்புநண்ணினர்தொழுதேத்தி
விமலமதுறநினையுமிகுவிருப்பொடும்போற்றி
யமுதகடேசத்துமணைந்தனர்சூழ்ந்திறைஞ்சிக்
குமுதமென்மலர்செறியப்புனற்கரைகுறுகினரால். (௧௪)

சாலைகள்பலவமைத்துத்தவவசிட்டன்பிருகு
மாலைபிரணவிந்துமார்க்கண்டன்மனுத்தக்கன்
காலவன்றீர்க்கபதன்கௌதமன்கற்கனறம்
போலமர்சதானந்தன்புலகன்கண்ணுவன்ருசுரு. (௧௫)

அத்திரியாங்கிரசன்றவுமியன்விசுவா
மித்திரன்வாதாசிவாயுபோசனன்மிளிர
கத்தியன்முதலானோர்கணக்கிலர்கலைகற்கும்
புத்திரர்தம்மோடும்பொருந்தினராவயினே. (௧௬)

கலைநவில்பாதாளகங்கையென்பெயர்த்தீர்த்த
மலைவறவன்றமுதன்மாமுனிதீர்த்தமெனத்
தலையமைபெயர்பெற்றதத்தடம்படிவார்க
டொலைவரும்பாவமெலாந்தொலைத்துயர்புறலுண்மை. (௧௭)

ஆயவத்தடப்புனலோய்ந்தமர்தருபெருஞ்சிறப்பாற்
பாயவைம்பொறியடக்கிப்பழமலவேர்களைந்து
தூயநமருள்வாய்ந்துசுந்தரப்பேரின்ப
மேயவராயுவந்தார்வேண்டுவதினியென்னே. (௧௮)

வணிகர்தங்குலத்துதித்தான்மடமுருக்கொண்டனையான்
கணிதமில்பெரும்பாதகக்கொருகுழிசியனு
னணியிழைமடவார்க்கேயாட்படும்பெருநோன்பிற்
றிணிமனத்தானொருவன்றேவலனெனும்பெயரான். (௧௯)

வேதநிந்தனைபுரிவானுகமம்விளம்பிடினும்
போதநிந்தனைபுரிவான்புன்மையில்லைதிகழொன்
றோதநிந்தனைபுரிவானுரைத்தவையன்றியும்பல்
பேதநிந்தனைபுரிவான்பித்தரினுழிதருவான். (௨௰)

நீறுகண்மணிபூண்டோர்வருந்திருவினைச்
சீறுபுமுடிக்கிடுவானிந்தையுஞ்செப்பிடுவான
பேறுசெய்நீராடல்பிறங்கநங்குறிகாண்டல்
காறுமொன்றருந்தாரைக்கலப்பவரையுங்கடிப்பான். (௨௧)

பரதிரவியங்கவர்வான்பழிபாவங்கருதான்
பரமடவார்ப்புணர்வான்பாதகம்புரிவாரோ
பரமெனப்புகழ்ந்திடுவான்பரிபிக்கண்படுதல்
பரவுறக்கண்டேகண்படைகொளுமியதியினான். (௨௨)

இழிகுலத்துதித்தாருமிழிதொழில்புரிவாரும்
பழிவரல்கருதாதான்பற்றினர்நுகர்வாரும்
பிழியுறக்குடிப்பாரும்பெண்கலைப்புணர்பவருங்
கழிமகிழ்கொளத்தழுவிக்கலந்தமர்வாழ்க்கையினான். (௨௩)

தண்மையும்பொறுமையுநற்றவமுடையார்க்குதவும்
வண்மையுங்கண்ணோட்டமாண்மையும்வருவதுணர்
நுண்மையுமறம்புரியுநோன்மையுமேலாய
வுண்மையுமவனிருந்தவூரினுமிலையாதே. (௨௪)

கொடியவனிவனோடுங்கூடுதற்கஞ்சினள்போ
னெடியசகுணமனைவிநீத்தனளுயிரப்பாற்
கடியமைபுதல்வர்களுங்கழிந்தனர்தனியாகிப்
படியுழிதரலுற்றான்பாதகத்தேயலனே. (௨௫)

தீயினும்வருத்துமிடிசெறிந்தலைந்திடப்புழுத்த
நாயினுங்கடைப்பட்டுநாட்டுழிதருகாலை
நோயினுங்கோட்பட்டுநோதகவொருங்குமிகப்
பேயினுமலைகின்றான்பேதைமைத்தொடக்குண்டான். (௨௬)

உடம்பிடைச்செய்த்தோர்சீயொழுகுறுபுண்ணினி
விடம்படுவாய்முழுதுமிகக்கிருமிகள்கெண்ட
விடம்படுகாசமுதலெத்தனையோபிணிகண்
மடம்படுமெவற்குறுறவருத்திடும்பசிப்பிணியும். (௨௭)

ஓவெனவலறிடுவானுளமுலைந்திரங்கிடுவா
னுவெனக்கரைதருவானடரும்வெம்பிணியென்பா
னேவெனவிரங்காமேநோக்கமுஞ்செய்யாமே
போவெனப்புகன்றனமையேபுலைப்பிணியாய்த்தென்பான். (௨௮)

உடம்பெழுமுடைநாற்றம்யோசனைவீசுதலா
லிடம்படுமறுகிடத்துமெதிர்ப்படினெதிர்கண்டோர்
இடம்படவாயாமஞ்செயலெனநாசிபுதைத்
தடம்படுகெயமகனேயகலகலெனக்கழிவான். (௨௯)

இன்னணமுழிதருவோனியன்றமுற்பவநலத்தாற்
கன்னவின்மதில்புடைசூழ்காமருகாரோணத்
தன்னருமுனிதீர்த்தத்துற்றனனொருநாளப்
பொன்னவிர்தடங்குடையும்புண்ணியர்பலருள்ளும். (௩0)

யாவரும்புகழ்மகதியாழ்முனிவரன்கண்டான்
மேவருமாபாவிமேவியதென்னையெனத்
தாவருஞ்சினங்கொண்டுதைகைநதிவணடைந்தனையா
ரோவரும்பழிபூண்டாயுரையெனத்தொழுதெழுந்து. (௩௧)

ஆயதனுற்பவமுமாற்றியதீவினையு
மேயவில்லொடுபுதல்வர்வீந்ததுமிலம்பாடு
பாயதும்பல்பிணிக்கோட்பட்டதுநோதகவாந்
தீயதுமெடுத்தோதித்தீனவழுதனனால். (௩௨)

முனிவரன்முனியானும்முயங்கிரக்கமும்பொருந்திப்
புனிதமில்பாவியிப்புனலிடைக்குடையென்றுன்
றனியுவப்படைந்தானுய்ச்சாற்றியபடிகுடைந்தா
னனியமைபுண்ணெலாநீர்நனைதலுங்காய்ந்தனவே. (௩௩)

மெய்யுறுநோய்முழுதும்வீந்ததுவியாத
பொய்யுறுபாதகமும்போயதாலுஞ்
செய்யுறுநிந்தையினாற்செறிபழிதீராத
தெய்யுறுமுனியிரங்கியஃதவற்குரைத்தனனே. (௩௪)

நெறியொழீஇயாவலாயுநிந்தித்தகீழ்மகனே
முறிவருமப்பாவமுருங்குதற்கெளிதேயோ
செறிதருமித்தீர்த்தந்தினந்தொறும்படிந்தெழுந்து
பறிபுனைசடையெம்மாற்பரவுதியெனப்பணித்தான். (௩௫)

பெருமுனிசொற்படியேபிறங்குமுனிதீர்த்த
மொருமையன்புறவாடியொள்ளியகாரோணத்
தருமருந்தனைநந்தமருட்குறிதொழுதேத்திப்
பொருவிலினையும்போற்றும்புலனெறிகைக்கொண்டான். (௩௬)

கேத்திரஞ்சூழ்தருவான்கேத்திரத்துள்ளாய
தீர்த்தங்கடோய்ந்தெழுவான்செறியுநம்மடியவரை
யார்த்தியிற்பணிந்தெழுவானரகரவெனநடிப்பா
னேர்த்தபுண்ணியம்பொலியவின்னணம்பயின்றிலோன். (௩௭)

முனிவரைவணங்கிடுவான்முதுகொடும்பாவியிவ
னனியமென்றெண்ணுமலருள்செயவேண்டுமென்பா
ரினியனவாயமொழியாவர்க்குமெடுத்துரைப்பான்
றனியமைபத்திமையிற்றலைமையனுயினனே. (௩௮)
கனிதருமனத்தமுதகடேசமும்போய்ப்பணிவான்
பனிமலர்செறிதேவதீர்த்தமும்போய்ப்படிவா
னனியருள்பெறலின்றிநாயினுங்கடைப்பட்டுத்
தனியமைந்துழன்றதெலாஞ்சூழ்ந்துகெட்டுயிர்த்திடுவான். (௩௯)
முழுவலன்புடையோனுய்ப்பதியுண்மூழ்கிடுவான்
செழுவியகாரோணத்திருத்தலத்திவ்வாறு
பழுதறவமர்ந்துடலம்பாண்மையிற்கழித்துடனே
வழுவினங்களைந்தலைமைமாண்புபெற்றினிதமர்ந்தான். (௪0)
வேறு.
பதியமையாதார்தங்கள்குலத்துற்பவமுற்று
றுதியமைவேலும்வாளுமருட்டுநோக்கதநான்
மதியெதிர்கூம்பாத்தாமரைபோலும்வதனத்தா
ளதிகலமிக்காள்சுண்டிலையென்பதவளுமம். (௪௧)
ஆயவனப்புப்பொழிமழைநேருமைம்பாலா
பேசுதைக்கும்பத்துணைபோனறசுவர்க்கத்தா
ணையமிகுத்தேயாரும்விரும்புந்தம்பத்தா
டேயமனைத்துஞ்செல்லுபுமீளுஞ்செயனெஞ்சாள். (௪௨)
மண்டிலைவெள்வேன்மைந்தர்கள்யாருமனமாழ்கிச்
சுண்டிலையென்னுநாமவணங்கேதொடரொம்மைக
கண்டிலரெஞ்சிற்கொண்டிலையாருங்கடனீதோ
வுண்டிலையும்பாகுங்கழிபோதிங்குமிழென்பார். (௪௩)
சொன்னமுடிப்பையவிழ்ந்திடுவாரோதொருவாரே
யன்னமுடிப்பையவிழ்ந்திடுதறகாமறமுள்ளார்
முன்னமுகந்திடுமுத்தம்மீயுமுறையோரே
தன்னமுகந்திடுமுத்தம்மேற்பார்தாமாவார். (௪௪)
பல்லுக்கொவ்வாமுல்லையரும்பும்பனியாநீஞ்
சொல்லுக்கொவ்வாதாரமுதும்பொற்சுடர்மேனி
யெல்லுக்கொவ்வாமின்னலனைத்துமெழிலன்றாள்
புல்லுக்கொவ்வாதாலயிராணிபுணர்ப்பம்மா. (௪௫)
கோடலினுன்மனநேரொனயாழ்கைக்கொண்டேறப்
பாடலினுன்முழவாதியசேரும்படிபண்ணி
யாடலினுன்மதஞ்சமநூல்வழுவாகாது
கூடலினுன்மிகுபொன்பறிசெய்துங்குறையோவாள், (௪௬

அன்னவளைக்கண்டானொருநாண்மிக்கதிமோகந்
தன்னமருண்டான்மாநகர்காவற்றொழில்பூண்டான்
மின்னகுவாளான்வீரரில்வீரன்விடர்கோமான்
பொன்னவிர்பூணன்பஞ்சசனப்பேர்பூண்டுள்ளான். (௪௭)

என்னோநாமினியென்றுறுவதென்றவளிற்புக்குத்
தன்னேரில்லாநித்திலமாலைதகச்சூட்டிப்
பொன்னேதேனேபூவாய்பாவாய்பொற்கொம்பே
மின்னேயென்னைக்காத்திடுகென்றான்மெலிகின்றான். (௪௮)

பஞ்சசனன்கொள்காமமுநல்கும்பரிசங்கண்
டஞ்சனவொண்கட்கண்டிலையெனபாவைமேலாற்
கஞ்சமுகத்தின்மலர்ச்சியுமாறக்கவவுஞ்செய்
தெஞ்சலிலாமலின்பம்விளைந்தாளினிதோங்க. (௪௯)

எண்ணியபோகந்துய்த்தகமகிழ்தலிலிணையில்லா
னண்ணியநாடொறுமீதலைமேற்கொளுமதனாலே
நண்ணியபொன்மணிப்பூண்விளைபூமிநலஞ்சாரில்
புண்ணியமாகியொழிந்தமழக்கைப்பொருளேபோல். (௫0)

கடனளிவாங்கியுநல்கினன்மேலுங்கடன்வாங்கற்
கிடமிலையாதலினுள்ளவர்தம்மிலிராப்புக்கு
மடனுடையான்பொருள்வெளவியுமீந்தான்மற்றஃதூர்
திடனமையாமையினென்செயலென்றுதிகைத்தானால். (௫௧)

செறிபெருவணிகர்குலத்திலுதித்தான்சீலத்தாற்
குறிசிவயோகியெனும்பெயர்பூண்டான்குணமிக்கா
னெறியுளிநம்மையருச்சனையாற்றிநியமத்தான்
முறிவில்சிறப்பினம்மடியனாராமெனமுனல்செய்வான். (௫௨)

கதிதொழுமுன்னமெழுந்துசெய்நித்தியகடனாற்றிப
பிதிர்தலினங்குறியன்பொடுபூசைபெறச்செய்து
முதிர்தருநண்பகனம்மடியாரொடுமுறையுண்பா
னதிர்கடல்சூழுலகத்திலவனைபொருவார்யாரோ. (௫௩)

மற்றவனொடொறுமீட்டுவையாவும்வளங்கூர்நூல்
சொற்றநம்மாலயமாற்றுபணிக்குநிதிசேவக்
கற்றநம்மடியவர்தஞ்செலவிற்குங்கனிந்தீவா
னற்றவர்யாவருமன்னையெனப்பொலியறமிக்கான். (௫௪)

அனையன்மனைத்தலையோரிரவுற்றனனணியாடை
வனைகலனாதியவெளவுபுசண்டிலைமனையுய்த்தான்
கனைகதிர்வந்தெழுகாலையுணர்ந்தங்கவலானாய்ப்
புனைபுகழ்வண்சிவயோகிநம்பூசைபுரிந்தானே. (௫௫)

பஞ்சசனன்செயன்மன்னனறிந்துபரிந்துள்ள
மஞ்சவொறுத்துயிர்போக்கமுயன்றிடுமக்காலை
நெஞ்சமையுஞ்சிவயோகியம்மன்னவனேருற்றுத்
தஞ்சமிவன்செயலென்றுகவர்ந்தவர்தாம்வேறுல், (ருக)

அன்னர்வெளிப்படினெண்ணியவாசெயலறமென்றுன்
மன்னன்விடுத்தான்கள்வன்சுண்டிலைமனைபுக்கான்
மின்னனையாண்முனிதீர்த்தமொர்நாண்மேவித்தோய்ந்தாள்
பின்னர்வரும்பஞ்சசனனுமுழுகினன்பேணுதே. (ருள)

பயன்விழையாதிவராடவுமோங்கியபதிஞான
மயலறுமாறிருவர்க்குமுதித்திடமாண்பெய்தித்
தயலுளபொன்முதலாயவெலாநந்தனிசேர்த்தா
ளியலுறவிருவருமீற்றினம்மடிகிழுலெய்ந்தாரே. (ருஅ)

பஞ்சசனன்சுண்டிலையிவர்முத்திபதிந்தாரேல்
வஞ்சமிலாச்சிவயோகியுமுத்திவளம்பெற்று
னெஞ்சமிலாதெனவேண்டுவதோவெல்லாமுதவு
மஞ்சமுலாவுமலர்த்திரண்முனிவரருந்தீர்த்தம். (ருக)

மலர்மகளுகியர்தம்பதமுந்தரவலதந்த
வலர்முனிதீர்த்தமெனப்பரனேதுவகங்கொண்டாள்
புலர்தலிலாப்பனைமுனிவரர்தீர்த்தப்புகழ்சொற்றும்
பலர்புகழ்காகதடபுகழுஞ்சிலபகர்கிற்பாம். (கூ0)

முனிவர்தீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கஉ௲ - திருவிருத்தம் - அஉச.

## காகதீர்த்தப்படலம்.

வண்மைச்சயிலாதிமலர்ப்பதமாணபிற்போற்றித்
தண்மைத்தவத்தானுயர்ந்தோங்குசனற்குமாரன்
கண்மைத்திடகீனமணிவீசலைக்காகதீர்த்தத்
தண்மைத்திறமோதெனவோதலுற்றுனுவந்தே. (க)

முத்திற்பொலிவெண்ணகையாள்கருமுற்றுமாமே
கத்திற்பொலிகண்டனைத்தாழ்ந்துகதித்தகாரோ
ணத்திற்பொலி * கீரினுமோதெனநாடியொன்று
பத்திற்பொலியண்ணலுவந்துபகரலுற்றுன். (உ)

சிந்தாமணிபுந்நிதியங்களுஞ்செல்விதோங்கி
நந்தாவொருதேனுவுந்தன்னருணாட்டநோக்கச்
சந்தானமாதித்தருவைந்துந்தழைந்துமல்க
முந்தாரமுதமுணவோர்க்குமுன்னர்மேவ. (ந)

* கீர் - விசேடம்.

பகர்தேவர்முப்பத்துமுக்கோடியர்பக்கமேவப்
புகர்மேவிரட்டித்திதிமைந்தர்புறங்கிடப்ப
நிகர்தீருமாதவராசிகிரம்பியோங்க
நகராவமுதிற்சிலரின்னிசைநூலிற்பாட. (ச)

அதிரூபவரம்பைதிலோத்தமையாடல்செய்ய
மதிநேர்வதனத்தயிராணிமருங்கிருப்பத்
துதிசேர்விருதாவளிமுன்புதுவன்றிநிற்ப
விதிசாலரியாதனமீதமர்வேள்விவேந்தன், (ரு)

கலைமாமதியம்புரைசாந்தன்கடுப்பொன்றில்லான்
கலையாதசமாதியனுகங்கலந்ததிக்குக்
கலையாணமையேமதிக்கின்றகௌதமப்பேர்க்
கலைமாமுனிவன்மனையாளகலிகையென்பாள். (சு)

மழைநேர்குழலும்பிறைநேர்நுதன்மாண்புமம்பொற்
குழைசேர்செவியும்புருவப்பெயர்க்கோடுவில்லு
முழையாவுமருட்டியகண்களுமொப்பின்மூக்குங்
கழையாமொழியும்பளிக்கொத்தகபோலச்சீரும். (எ)

செறிவண்டளவாநகையுநறுகிர்ச்செய்யவாயுங்
குறிவாண்முகமுங்கழைத்தோளுநகொழுங்கழுத்து
மறியாமூறுதண்டின்முன்கையுமங்காநதட்கையு
மறியாப்பவளக்கிளைபோல்விரல்வாய்ந்தசீரும். (அ)

கிளிமூக்கனையநகமுந்தனக்கிண்ணமாண்புங்
களியாவிடையுஞ்சுழிபுந்தியுங்காமர் + ஆறுபச்
சொளியாரிலையினவயிறும்வயிற்றெண்மடிப்பு
நெளிபாம்புபைத்தடம்போன்றநிதம்பச்சீரும். (கூ)

கதலிக்கவான்றெண்டுவாரால்கமடம்பொரூஉ ‡ முப்
பதமொய்த்தமஞ்சண்முளைநேர்விரல்பன்னகச்சீ
ரிதமுற்றயாவுநதவறுதளத்தெண்ணிலெண்ணி
விதனப்படுவொனழல்சார்ந்தமெழுகுபோன்றுன். (க0)

வேறு.

வரைபொடிபடுக்குந்தோலாவலிசதகோடிவேந்தன்
கரையறமதிமாழாக்குங்காலையிற்கழைகுழைத்து
விரைமலர்க்கணையனேகம்விடுத்தனன்மாரவேளு
திரைசெறிகடல்சூழ்வைப்பிலிழிநதனுயர்வுதேறுன். (கக)

பெற்றதைச்சிறிதுசெய்துபெறாததைப்பெரிதுபண்ணு
மற்றமில்வலியான்மிக்கவாணவமலக்கோட்பட்டோன்
கற்றவர்புகழுமேன்மைக்கௌதமமுனிவன்வைகுங்
குற்றமிலிருக்கைப்பாங்கர்க்குறுகினனெடுமால்கொண்டே. (கஉ)

---

+ ஆல்-ஆலமரம், ‡ முப்பாதம-முழங்கால்-கணைக்கால்-புறங்கால்.

தவமுனியிருக்கைநீங்கத்தக்கதோர்சூழ்ச்சியெண்ணிக்
கவன்மனத்தடைந்ததீயோன்காரியென்பெயருக்கேற்ப
வவமுறுங்காரியாகியடுத்துமுக்காற்கரைந்தான்
புவனமொன்றிருடீர்போதுபோந்ததென்றுள்ளங்கொண்டு. (க௩)

முனிவரனியதியாற்றமுடுகுபுநதிப்பாற்சென்றான்
றனிமைகண்டுவச்சுருங்கள்வன்றன்னுருவெடுத்துமங்கை
யினிதுறவிருந்தசாலையெய்தினனெய்தலோடும்
புனிதமாமுனியேவந்தான்போர்தியெனவிருந்தாள். (க௪)

வளமுறவமளிமேவிமார்புறவிறுகப்புல்லி
யிளமுலைவருடிமுத்தமிட்டுவாயூறன்மாந்தி
யுளநெகிழ்தாமருங்குலுறுகலைநெகிழ்த்தாங்கல்கு
லிளகுறக்கரணமெல்லாமியற்றினனின்பந்துய்த்தான். (க௫)

பொம்மல்வெம்முலையினாளும்புணர்ச்சியின்வேறுபாட்டா
லம்மநம்முனியனல்லனயலனெனவுணர்ந்துங்காதல்
விம்மநன்கிழைத்தலாலேவிலக்குதறவிர்ந்திருந்தாள்
செம்மலிந்திரனுமுற்றத்தினைத்தபினச்சம்பூண்டான். (க௬)

கண்டிடின்முனிவன்சாபங்கனலினுங்கொடிதாய்வந்து
மண்டுமேயெனமருண்டுவாசலன்கரந்துபோனான்
கொண்டலங்கூந்தற்கோதாய்குலமுனிநதிப்பாலெய்தி
யண்டுகள்ளிருளேயாயதறிந்துளத்தெண்ணலுற்றான். (க௭)

காகநள்ளிரவின்முக்காற்கரைவதற்கேதுவென்னென்
றாகமுப்புரிநூலாளனோதியாலாய்ந்தானாக
மேகவாகனனிவ்வாறோர்வினைசெய்தநமநுபன்னி
போகம்வேட்டடைந்தானென்றுதெரிந்தனன்பொங்கினானால். (க௮)

விரைதரக்கடுகிவந்துமெல்லியலாளைநோக்க
வுரைதடுமாறிநாணமுலைத்திடவொதுங்கிநிற்கும்
புரையுணர்ந்தழன்றுசீறிபொதுமகளானாய்போத
வுரைசெய்பேதைமையானற்றால் † உபலமாய்க்கிடத்தியென்றான். (க௯)

தடுப்பருஞ்சாபமேற்றுத்தாழ்குழல்கல்லாய்வீழ்ந்தாள்
விடுப்பருஞ்சீடர்தாழ்ந்துவீடுறைதருதியென்னக்
கடுப்பரும்பிருகுசொல்லாற்கரியவனிராமனாவான்
றொடுப்பருமவன்கழற்காற்றுகள்படத்தொலையுமென்றான். (௨0)

கள்ளருந்திருவின்வானநாடொருங்காளும்பேதை
யுள்ளருமயலான்பன்னியொருசிறும்பத்திற்பூண்ட
வெள்ளரும்பிழையவாவின்னேமெய்யடங்கலுமற்றலீதே
தள்ளருபிறண்டைஞ்ஞூறுசார்தரக்கடவனென்றான். (௨க)

† உபலம் - கல.

வீடருங்கொடியசாபம்விளைத்தபின்வெருளிநீங்கி
வாடருஞ்செயன்மாணுக்கர்புரிபணிமகிழ்விற்செய்ய
நாடருநம்மைப்போற்றிநயங்கிளர்சமாதியுற்றான்
கூடருந்தவத்தான்மிகருக்குலாங்கௌதமப்பேரோனே. (௨௨)

இவனிலையின்னதாகவிடுகொடுஞ்சாபமேற்ற
வவனுடம்படங்கயோனியாயிரஞ்செறிந்ததோர்ந்து
தவன்மனைவிழைந்தபாவந்தடித்திவ்வாருயதென்றுள்
குவனதிநாணங்கொள்வன்குணிப்பருந்துயரத்தாழ்வன். (௨௩)

இமையவரொருங்குதாழ்பேறெய்தினேன்கெட்டேனென்று
மனைபுலோமசைதெரிந்தாற்சிரிப்பளேயாவாவென்னுங்
கமைதவிரவுணரொல்லாங்கைகொட்டியிகழ்வாரொன்றுஞ்
சுமையுடம்பொழிவுமில்லையினியெவன்சூழ்ச்சியென்னும். (௨௪)

மருவொருகுறியுளாரும்வான்பெரும்புடைவைகொண்டு
பெருகுறச்சூழ்ந்துசூழ்ந்துபெருந்திரோதானஞ்செய்வா
ரொருவறவுடம்புமுற்றுமுளகுறியல்லவென்னி
லிருமைமிக்குடையேன்யாதாலெங்ஙனமறைத்தல்செய்வேன். (௨௫)

முடைபடுமுவர்நீருறுமுழுமையுமசும்புசெய்து
மிடைகுறிபல்லதாங்கியரியணைமேவமாட்டே
னுடைதிரைப்பரவைஞாலத்தொளிப்பனென்றெழுந்தானப்போ
தடைதருகுரவன்போக்குத்தடுத்திஃதறையலுற்றான். (௨௬)

செறிபெருந்தவத்திறற்குச்செய்ததிங்கெளிதுபோமோ
குறிபலவுடம்பினுகக்கூறியதருளேயன்றே
நெறியுறுதீர்த்தமெல்லாநெடும்புவியடைந்துமூழ்கி
யறிதரக்கங்கையாடியாங்கமொழியுமென்றான். (௨௭)

குருமொழிசென்னியேற்றுப்பணிந்தனன்விடையுங்கொண்டு
திருமலிபுடவிமேவித்தீர்த்தங்கள்பலவுந்தோய்ந்து
பொருவருங்காசிமேவிப்புண்ணியக்கங்கையாடிப்
பெருகொளிநம்மைப்போற்றியிருந்தனன்பேணிப்பன்னாள். (௨௮)

இன்னணமிருக்கும்வேந்தனீராயிரமாண்டுசென்றுந்
தன்னமுமுனிவன்சாபந்தந்ததன்பொழியக்காணான்
பன்னருங்கவலைகூர்ந்துபண்ணுவதினியென்னென்று
முன்னமேயாங்குமேயகண்ணுவமுனியைக்கண்டான். (௨௯)

கண்ணுவமுனியைக்கண்டுகதுமெனவவன்றாள்போற்றி
நண்ணுவமானமில்லாய்நஞ்சமுறென்றுரைத்தே
னெண்ணுவதினியென்னுறவிடும்பைநோய்க்கவதியில்லை
பண்ணுவதிதுவென்றே * பார்பதிதீர்த்தமனைத்துந்தோய்ந்தேன். (௩௦)

* பார்பத-பூமியிற்பதிந்த.

இராயிரவருடங்கங்கையிரும்புனறேய்ந்திங்குள்ள
பராபரலிங்கம்போற்றிப்பத்திசெய்தமர்ந்தேனின்னும்
விராவியதிமைதீர்ந்துமேதகவடைந்தேனல்லேன்
புராதனமுனிவயானென்புரிகுவதுரைத்தியென்றான். (௫௧

வரைப்பகைமாற்றக்கேட்டமுனிவனவாய்முறுவல்பூப்பத்
தரைத்தலைத்தீர்த்தமெல்லாந்தவாமலாடினனயானென்றே
யுரைத்தனைபொய்ம்மைகாயாரோகணத்துற்றாய்கொல்லோ
விரைத்தபன்மலர்சாறீர்த்தமேதகவொன்றுண்டாங்கே. (௫௨)

தூயபுண்டரீகன்றானென்சொற்படியாங்குமேவி
மேயபல்புனலுமாடிவிருப்பிற்காரோணலிங்க
நாயனைப்பூசையாற்றிநயப்பநாளாம்பதத்தி
லாயமெய்யொடும்புகுந்தானனந்தத்தவசனானன். (௫௩)

தெள்ளியபாடையாயதிராவிடம்வயங்குந்தேயத்
தொள்ளியதரக்குயர்த்தோனுயர்முறைசெலுத்துநாட்டி
னள்ளியகுளத்துவேலைக்கரைநகுபொன்னித்தென்பால்
வள்ளியபுகழ்சால்காயாரோகணமருவுமென்றும். (௫௪)

அந்தமாத்தலத்திலென்றுமடைபவர்பிறவிவெந்நோய்
சிந்தவும்பேரானந்தஞ்செறியவுங்கற்பகாலத்
தந்தமூர்த்திகளெலாம்வந்தொடுங்கவுமுளைத்ததம்மா
சந்தமார்ஞானானந்தத்தற்பரலிங்கமொன்று. (௫௫)

நேயவவ்விலிங்கத்திற்குநிருதியந்திசையின்முத்தி
யேயநற்புண்டரீகமுனியிலிங்கத்தின்முன்னந
தூயநன்முனிவர்வாவிக்குத்தரதிசையிறறேன்று
நாயகத்தீர்த்தமொன்றுநயந்திதின்மூன்றுபோதும். (௫௬)

விதிவழியாடிப்பின்னர்விளங்குகாரோணலிங்க
மதியுறப்போற்றலோடுவண்சுதைக்கடேசமேல்பாற்
பதிதருகாரோணப்பேரிலிங்கமும்பண்பிற்போற்றித்
துதிமுறைபுரிதல்வேண்டுஞ்சொல்வதொன்றின்னுங்கேட்டி. (௫௭)

கொடியுருவமைந்தபாவங்குயிற்றியதிறனலாங்குங்
கொடியுருவமைந்தேதீர்த்தங்குடைசிலநாளிற்செம்பொற்
கொடியெனவனையதீர்த்தங்குலவருள்செயுமப்போதே
கொடியிடைபாகர்காட்சிகொடுத்தருள்செய்வரன்றே. (௫௮)

நலமலிதருமாறின்றேநடமதிகடிதினென்று
ஞலமலிகுவவுத்தோளாளெய்யெனவெழுந்துதாழ்ந்து
புலமலிவிசுவநாதப்பெயர்புனைகையும்போற்றிக்
கலமலிகடல்சூழ்நாகைக்காரோணநகரம்புக்கான், (௫௯

ஆண்டநல்லோர்கள்பல்லோரமைதருபுராணநகைக்கொண்
டண்டவர்தடைந்தோரொல்லாமிருவினைப்பிறவித்துன்ப
மாண்டுகெட்டொழியப்போக்கிமனத்திடைக்குறித்தயாவும்
பூண்டுமிக்குயர்வரொன்றுபுகன்றிடக்கேட்டுவந்தான். (௪0)

இன்னுமப்புராணஞ்சொல்வோர்பரமடமாதரொன்பார்
மின்றுமொண்கலசக்கொங்கைவிழைபவர்கயவராவார்
பன்னுமற்றவருமெய்திற்பரனருள்செய்வாரென்ன
வுன்னுநஞ்செயறோர்ந்தாரொன்றுளத்தொருநாளுக்கொண்டான். (௪௧)

மீட்டுமப்புராணஞ்சொல்வார்வெய்யபாதகரேயேனு
நாட்டுமித்தலத்தைச்சார்ந்துநலமலியொருதீர்த்தத்திற்
காட்டுமற்போடுமூழ்கிற்கரிசறத்துயர்வாரொன்று
பூட்டுபஃறீர்த்தமேன்மைபுகல்வதுவிரும்பிக்கேட்டான். (௪௨)

ஒருகருந்தடங்கணம்மையுற்றவர்க்குவந்துசெய்யும்
பெருகருள்பெரிதென்கோசேர்பிறங்குகாரோணநாதர்
தருமருள்பெரிதென்கோவென்சாற்றுவதென்றுபல்லோ
ரருகமர்ந்துரைப்பக்கேட்டானளவிலாவுவகைபூத்தான். (௪௩)

வீதியிற்சரியாகிற்குமாடவர்மின்றுக்கான்ற
சோதியிற்பரமின்னார்தநதோற்றரவெதிரேகண்டு
நீதியிறபுடவிநோக்கிநேர்செலாதொதுங்கிச்செல்ல
வோதுயிற்பொலிமினன்றோயுத்தமரொன்றுவந்தான். (௪௪)

தலனமைவளனிவ்வாறுசார்தரக்கண்டுசெல்லும்
வலமுயிர்குடித்ததோன்றல்கண்ணுவன்வருதகவாறே
புலனமைகாகமாகிப்பொருக்கெனப்பரந்துசென்று
நலனமையனையதீர்த்தநாடுபுகூடினனே. (௪௫)

கண்ணுவன்சொன்னதீர்த்தமிதுவெனக்கருத்திறைாய்ந்
தெண்ணுபுவியந்துமூழ்கியேனையதீர்த்தமெல்லா
மண்ணுபுதோய்ந்துபின்னரத்தலத்தெல்லைசூழ்ந்து
கண்ணுவமானமில்லாநங்குறியடுத்தாழ்ந்து. (௪௬)

பொருவரும்புண்டரீகன்பொற்புறப்பதிட்டைசெய்து
மருவுமலப்பூசித்தமாண்பமரிலிங்கமுன்போய்ப்
பருவரலொழிப்பமாறுபரிந்தருள்செய்தியென்று
வெருவரலொழித்துலசெய்வான்வீழ்ந்துவீழ்ந்திறைஞ்சல்செய்து. (௪௭)

பாவருமறுவின்றுறும்பாற்கடலகத்துத்தோன்று
மூரவமையமுதமம்பதங்களுமுள்ளித்தீர்த்த
வரமெனுந்தடத்துமேல்பான்மாமுனிநிறீஇயவந்தத்
திருலிங்கத்தின்றென்பான்முதற்பிரகாரஞ்சேர்ந்து. (௪௮)

மனமொழியதீதமாயுமண்முதற்சிவமீறான
வினைமர்தொகுதியாவுமியற்றுவதாயுநேரு
மனகமதாயுமினைதிறவெனவளந்ததறகொண்ணுக்
கனவெளியாயுமோர்முத்தாபமுங்கழிப்பதாயும் (௪௯)

ஆதியோடந்தமின்றியனைத்திறுநதோய்ந்தோயாச்
சோதியதாயுமொல்காச்சுயம்பிரகாசமாயு
மோதிவினைக்குநீத்தவுறவர்தமுளத்துநீங்கா
நீதியதாயுஞ்சச்சிதானந்தநிலைமைத்தாயும். (௫0)

கட்டுவீடிரண்டுநீத்தகாட்சியதாயுமனையிற்
கிட்டுவதாயுமொன்றுபந்தெனக்கிளக்குமுண்மை
பொட்டுவிட்டோருக்கென்றுமொழிதராவின்பமாயு
மெட்டுமேவுருவதாயுமியைபரம்பிரமமாயும். (௫௧)

உளகமையிதயத்தெண்ணியுறுபொறியையர்துமாய்த்துப்
பளகமைகரணநான்குமொருவழிப்படரவைத்துத்
தளர்வறவிருந்தான்காகவுருக்கொண்டசைலகோபன்
புளகமுண்டாகாதீர்த்தவரத்தமுப்போதமூழ்கி. (௫௨)

ஓங்கயிலங்கிபமேவிச்சிலபகலுறையுங்காலை
வீங்குமைபுனலின்றோயந்தவிச்சைதகாதகருமைதீர்ந்து
பாகநதொளசெம்பொன்வண்ணம்படைத்துகாகமேனி
தாங்குமற்றதுமெய்ரிகததசாமசமுவனசுபசதானை. (௫௩)

பொன்னிறம்படைத்தகாகத்துவனமையபுகுதேருர்
முன்னிறமொழிந்ததெனபார்புநுநிறமுயங்கிறறென்பா
ரொங்கிறநதெவணுவிநவுருக்கொடிங்கிருநதானென்பார்
தன்னிறப்புனல்விசேடமாருசொலயபமோவென்பார். (௫௪)

கண்டவரிதயந்தனங்களாற்றிறம்பூறகொள்ள
வண்டராதியர்களகூடியரிட்டமுப்போறநதோய்நது
தண்டலில்சிறப்புப்பெற்றதன்னமையாற்காகதீர்த்த
மெண்டருமிதனாப்பேர்த்தமென்றெடுத்தியம்பிறுால். (௫௫)

பரவுநாங்கருணைபூத்துப்பங்குனியுத்திரத்தில்
விரவுமாகாட்சிநல்குமுன்னுருமேவச்செய்து
காவுதீர்யோனிமுற்றுங்கண்களாப்பொலியச்செய்தா
மாவல்குலாயன்றுதியாயிரங்கண்ணனானான். (௫௬)

முன்புபோலொருமுப்பத்துமுக்கோடிக்கடவுளாரை
வன்புசாலருளினோம்பியவுணரைவலிந்துமாட்டி
யன்புகூரரசசெய்தியாயிரங்கண்ணுமென்று
மின்புன்மையக்கூறிமறைந்தனககமடந்தாய். (௫௭)

புண்டரீகப்பேர்புனைந்தொளிர்மிக்கபுண்ணியச்சருவதீர்த்தத்தின்
றண்டவாக்கரையிற்பிதிரர்தம்பொருட்டுத்தருப்பணமாதிசெய்திவோ
ரொண்டவாவளற்றுழ்பவரைவண்சுவர்க்கத்தேற்றுவித்தவர்களேபுல்ல
கண்டமுமமுதங்கமழ்ந்தகோற்றேனுங்கைத்திடக்கரையுமின்மொழியாய்,
மேயகார்த்திகைகமார்கழிமதியிரண்டும்விளங்குவானவர்பெருந்தடத்துப்
பாயநீர்குடைந்துதருப்பணமோமம்பகர்செபந்தியானமாதிகளை
யாயவத்தீர்த்தக்கோட்டினன்காற்றியன்புறநம்மையுந்தொழுவார்
றூயபேறளவாதடைகுவர்குழையிற்றோய்ந்துமீள்வரிக்கயல்விழியாய். ()

வேறு.

மின்னியவாயசதீர்த்தமேடமதியிடபமதிவிடாதமூழ்கிப்
பன்னியநம்மையுநினையுங்காரோணத்தலம்புகுந்துபரவுவார்க்குத்
துன்னியபல்பாதகமுங்கவைத்தகொழுந்தழல்விழுந்ததுய்போலாகு [பே.
நன்னியமங்கொடுபுரிபுண்ணியங்களெலாமொருங்கெய்துநகுபூங்கொம்

மதிக்குமிழைபுனைகன்னிமதிமுழுதுமுனிதீர்த்தமருவியாடித்
துதிக்குமொருகாரோணத்தளிபுகுந்துநமையுமொளிர்தூயோருள்ளம்
பதிக்குமிருதாணிணையுநனைமலராதிகள்கொண்டுபரவுவோர்க்கு
விதிக்குமளப்பரிதாயபேறெலாமுறுங்கயலின்மிளிருங்கண்ணாய். (௧௭)

நிலாவணிநம்மருள்போலுஞ்சருவதீர்த்தத்தறமேநிரம்பாநிற்குந
துலாமதியிற்படிந்தாடலன்றியும்வண்மகரமதிதூயதாகிக் [கொ
குலாவுகுடமதியிவற்றில்விடாதுதோய்நதைமைப்பரவுகொள்கையார்
னிலாபமெடுத்துரைப்பவராரநமபதமெலாங்கலப்புற்றிருப்பாரன்றே. ()

எண்ணியமந்திரங்கள்பலவற்றினுமைந்தெழுத்தெனவுமெலைக்குமேலாக்
கண்ணியமாநதிகள்பலவற்றினும்வெண்டிரைசுருட்டுங்கங்கைபோலு
மண்ணியமாமணிநிகர்பன்முனிவருளுந்தவத்துயர்ந்த வசிட்டன்போலும்
புண்ணியமேம்படுபலமானிடருளுமறந்தணர்போலும்பொலம்பூங்கொம்
[பே. (௧௯)

சிறையுடையபுட்குலத்துட்டார்க்கியனேபோலுநலஞ்செறியுமானுட்
கறைதபுவான்பொலிகாமதேனுவேபோலுமரக் ‡ ககனத்துள்ளுங்
குறைவறவிட்பொலிககனம்போலும்வரைகளுட்கயிலைக்குவடுபோலு
மறைபலவற்றினுங்காயத்திரிபோலும்புருடருக்குண்மாயன்போலும். ()

பழிதபுபஃறேவருளுநமைப்போலும்பேருலகிற்பரவாநின்ற
மொழிகெழுமுபற்பலமூர்த்திகளுள்ளுங்காரோணமூர்த்திபோலு
மொழிவில்பலதலங்களுளுநதிப்பியமாநாலகக்காரோணம்போலு
மழிவில்பலபுனலுள்ளுஞ்சருவதீர்த்தஞ்சிறந்ததாயுங்காலே. (௨௧)

மதிமலியுங்காரோணத்தலம்வசித்தாரொத்தலத்தும்வசித்தோராவார்
கதிமலியுங்காரோணலிங்கங்கண்டேத்தினவர்கடல்சூழ்வைப்பிற்
றிதிமலியுமளவிலிங்கமுங்கண்டேத்தினராவார்செறியெண்ணில்லா
நதிமலியுஞ்சருவதீர்த்தம்படிந்தோரெப்புனலுநனைந்தோராவார். (௨௨)

---

‡ ககனம்—காடு.

தேவதீர்த்தங்காகதீர்த்தமுயர்முனிதீர்த்தஞ்செறியாநின்ற
பாவநாசம்புரியுமுயர்சநுவதீர்த்தமிவைபண்புநாளு
மேவவுயர்படித்துறையாதிகள்கருங்கலிட்டிகைகள்விரவக்கொண்டு
பூவமையப்பணிபுரிவோர்பெறும்பேறுமலரோற்கும்புகலொணுதால்,

உரைசெயுநாற்புனலகத்துந்தொள்ளிவிழாதெடுத்தெறிவோருவக்குமாறு
கரையகழந்தனம்புரிவோர்படித்துறையில் † அரான்முதலாங்கரிசுதீர்ப்
புரைதவிரவிளக்கிடுவோர்பல்பெரும்பாதகமுமறப்போக்கிநாளும் [போர
வரைவில்சுவர்க்காதிபுவனங்களெலாமனுபவித்துவாழ்வர்மாதோ. (உச)

இட்டிகையாதிகள்கொண்டுபணிபலசெய்யாவிடினுமின்பமேவ
வொட்டியாந்தனமாதியாவுமுளுற்றுவிடினுமுறைத்தகீரிற், கிட்டியவன்கு
லையிலனுசிதஞ்செய்யாரெனினுயர்ச்சிகெழுமப்பூண்பார், கட்டியகச்சினை
க்கிழித்துப்புடைத்தெழுந்துநிறங்கவர்கொங்கைப்பூங்கொம்பே. (உரு)

இந்தவளம்படைத்துயர்ந்தசநுவதீர்த்தத்திடைநன்கினையமூழ்கிச்
சந்தமிகுதமிழ்க்கும்பமுனிவன்முதற்பல்லோர்நந்தமைப்பூசித்தே
யந்தமில்பல்சிறப்புற்றாரருட்காயாரோகணமேயனவிலாற்றற்
பந்தமறுத்துயர்முத்திபாலிக்குமெவ்வுயிர்க்கும்பவளவாயாய். (உசு)

என்றுறுதல்கிழித்தெழுந்தவிழிப்பெருமானியம்புதலுமெண்ணிலாம
லொன்றுமகிழ்ச்சியிற்றுளைந்தாள்சிறிதும்வருந்தாதெல்லாவுலகுமீன்று
ணன்றுபரனுமைக்குரைத்ததிவ்வளவேயென்றுரைத்தானந்திப்புத்தேள்
வென்றுமிளிர்சநுவதீர்த்தம்பகர்ந்தாமகத்தீசம்விளம்புவாமால். (உஎ)

சநுவதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கச-இ-திருவிருத்தம்-கூஉக.

## அகத்தீசப்படலம்.

விளைத்தகடுக்கைச்சடைமுடியார்விமலவுமையாள்வினவவெடுத்
துரைத்தபடியேதலந்தீர்த்தப்பெருமையுரைத்தாயுறமகிழ்ந்தேன்
குரைத்தபுனல்சூழ்த்தலமான்மியமற்றுளவுங்கூறுகெனும்
புரைத்தசனற்குமாரனுக்குப்புகல்வானந்திப்புத்தேளே. (க)

விண்ணம்பொலியுமிமயவரைவேற்கனுமையாள்கடிமணத்திற்
றண்ணம்பொலியுந்தடந்திருக்கைச்சாமிதிருவாய்மொழிதலைக்கொண்
டெண்ணம்பொலியுந்தமிழ்முனிவனவனிசமன்செய்திடலெண்ணி
வண்ணம்பொலியும்பொதியவரைவதிவானவதிபினியங்கிடுவான். (உ)

சீரார்சுவைச்செந்தமிழ்மணக்குஞ்செவ்வாய்முனிவன்வருபோழ்தே
காரார்கடல்சூழ்காரோணக்கரையில்பெருமான்மியமனைத்து
மேரார்பலமானுக்கருக்குமியம்பிவருவான்கண்டுதொழு
நாரார்விருப்பமெழவந்துகுருக்கேத்திரத்தைநண்ணினான். (ங)

---

† அரால்-செத்தை.

ஆயகாலைவிந்தவரையடைந்தமகதியாழ்முனிவன்
பாயமேருவினைமதித்தல்பண்ணுதிகழ்ந்ததடாதென்று
சேயமிகுமென்றுரையினையுரைத்தெவரும்வெறுப்பவெனத்
தீயகலகஞ்செய்தகன்றான்சிலம்புசினந்ததுளங்கொதித்தே. (௪)

அந்தவமையந்தனக்கெதிரேயடையும்பரிதிமுகநோக்கி
விந்தமெனையேசூழ்ந்திடுதிமேருவரையைச்சூழ்குவையே
லிந்தநினதுபோக்கொழியநானேயெழுந்துதடுத்திடுவேன்
மூந்தவெனலுந்திமிராரிமுறுவல்புரிந்தீதுரைத்திடுவான். (௫)

திசைதேர்வதனுக்கறிகுறியாய்த்தேவர்பலர்க்குமாலயமாய்
வசைதீர்பொன்னாய்மாதேவன்வண்கைக்கொள்ளுஞ்சராசனமா
யசையாநிலையிற்பொலிதருவெற்பதைச்சூழாதுநினைச்சூழ
நசையாமரியாலடையயனைநரியாலடையப்பெறுமாயின். (௬)

பொங்குசுவையாரமுதுண்பார்புற்கையுணவும்பொருந்துவரோ
தங்குபெரும்பாற்கடலாடுந்தகையர்சிறுமான்குளப்படிநீர்
முங்குதிறமுமுணர்வர்கொலோமூழுமால்வரையின்பெருமையெலா
மிங்குமொழிந்தாயினிமொழியேலென்றனசெறிகச்சளப்பவன். (௭)

மேருவரைமிக்கிகழ்ந்ததெனவீணைமுனிவன்சொலக்கேட்டோ
மாருமதுபொய்யெனநேரேயஞ்சாதிகழ்ந்தான்மார்த்தாண்டன்
சேருநடைவைதகைந்தின்னேதிகைக்குமாறுபுரிவலெனப்
பாரும்விசும்புநடுங்கப்பறம்பாம்விந்தமுயர்ந்ததால். (௮)

சிறியகல்வியாளர்மனச்செருக்குப்போலுமறனியற்றார்
முறியவெழுதீவினைபோலுமொய்த்ததிருவம்பலபடைத்து
மறியவுலோபமகலாதார்பழியேபோலுமவிர்கோள்கண்
மறியவெழுந்துபுடைபரந்துவானுறடைந்ததொருவிந்தம். (௯)

விந்தமெழுந்திவ்வாறுவானடைவைதகைப்பவெய்யோன்முற
சந்தமலியுங்கோளியக்கந்தவிர்ந்ததனாலுலகநெறி
நந்தவுணர்ந்துவானோர்நளினமலர்த்தவனோடு
முந்தவுபருமொருகுருக்கேத்திரத்தினடைந்தார்முனிவனெதிர். (௧௦)

அடைந்தபலருமுனிவனடியடுத்துவணங்கமுகமனுரைத்
துடைந்தமனத்திரெல்லீருமொருங்கிங்கடைந்தகருமமெவன்
மிடைந்ததெவனுங்களுக்கென்றான்மீட்டும்பணிந்துவானோர்
தடைந்தபொறியாயுலகநெறிதவறச்சார்ந்ததொன்றுளதால். (௧௧)

மேருவரையிலோடிகலிவிந்தமெழுந்துகோளினைத்தஞ்
சாருநடைவதகைந்ததுசாற்றவடைந்தோமென்றிறுத்தா
சேருந்தமிழ்மாமுனிவரனெய்யொழிந்தகாலைச்சுடரோவருந்
தேரும்படிமேலெழுதிறமேசெய்கென்றுமுறுவலித்தான். (௧௨)

எல்லாவமரரொடும்விந்தமேவுமிடத்தையணுகுதலும்
வல்லாவொருவன்வல்லுநன்முன்குறுகும்விதம்போல்வரைகுறுகிப்
பொல்லாநடுக்கத்தொடுநிற்பப்புகலுங்காயாரோகணத்து
நல்லாவுகைக்கும்பெருமானைநாடியுளத்திற்குறிக்கொண்டு. (௧௩)

ஆயபொதியாசலத்தினைநாமடைந்துபுடவிசமன்செய்து
மேயகயிலையுறவிவ்வழிமீளுமளவும்பாதலத்து
நேயமருவவிருத்தியெனநிகரிலொருகைவரைத்தலைவைத்
தேயவிருத்தியுலகநெறியெல்லாநடக்கும்படிசெய்தான். (௧௪)

ஒழியாவோகைகனிமருவியுறவாரூடர்தோத்திரங்கண்
மொழியாமுனிவன்விடைகொண்டுமுநித்தத்தமிடம்புகுந்தார்
பழியாப்பலமாணுக்கரொடும்பரவுமெங்கடமிழ்முனிவன்
வழியாதரித்துநடந்துபுகழ்வளர்காரோணத்தலமடைந்தான். (௧௫)

அந்தத்தலத்துவளமுழுதுமமையநோக்கிநனிமகிழ்ந்து
முந்தப்பிரதக்கணஞ்செய்துதேவதீர்த்தமுனிதீர்த்தஞ்
சந்தத்துயர்வாயசதீர்த்தஞ்சரவதீர்த்தமிவற்றன்பு
நந்தப்படிந்துநீறணிந்துநவிலகண்மணிமாலிகைபூண்டு. (௧௬)

ஆராவன்பினருள்கொழிக்குமமுதகடேசம்போய்ப்பரவிப்
பாராதரிக்குமமரரோந்திரேசம்புகுந்துபணிந்தெழுந்து
தேராவுணர்வோர்க்கினிக்குமுனிதிருக்காரோணஞ்சென்றிறைஞ்சிப்
பேராவாய்மைத்தமிழ்முனிவன்பெருங்காரோணத்தளிபுகுந்தான். (௧௭)

உள்ளந் தளிரக்கைதலைமேலுற்றுக்குவியக்கண்ணருவி
வெள்ளம்பொழியப்பரவசமாய்மேனிமுழுதுமயிர்சிலிர்ப்பக்
கள்ளங்கருதாசெறிதிருமுற்கசிந்துபணிந்துபணிந்தெழுந்து
வள்ளம்பொருமாமுலைபாகபெருமான்முன்னமகிழ்ந்தடைந்தான், (௧௮)

தருக்காநின்றதிறனொழித்துச்சார்ந்தாருளத்தையழன்மெழுகி
னுருக்காநின்றபெருங்கருணையொளியைமீட்டுமானந்தம்
பெருக்காவினித்துத்தெவிட்டெடுப்பபிறங்காநின்றகோற்றேனைத்
திருக்காரோணத்தாரமுதைத்திகழ்கண்களிப்பக்கண்டனனே. (௧௯)

கண்டானயனுமரியுமினுங்காணுப்பெரியோனருட்குறியைக்
கொண்டானளவாபேருவகைகுடைந்தம்பட்டுநேர்நின்று
விண்டாலவேமென்றெண்ணுவதுமேலுமேலுமமுதள்ளி
யுண்டானபொருவத்துதிமொழியலுற்றான்மொழியக்கற்றானே. (௨0)

வேறு,

வெள்ளைநீர்மண்முழுதும்விரிபிலத்துட்கவிழாது
புள்ளைமாமுடியடங்கப்பொருத்தியவல்லவனைக்
கள்ளலைதேமலர்க்கொன்றையானைக்காரோண
வள்ளலையன்புறவெண்ணுமனமென்னமனமே
ரமதேவன்றனையெண்ணுமனமென்னமனமே. (௨௧)

பூவானைப்பாகுசெய்தபுரங்கொலவேவியமா
லேவானையென்னுயாரிதயத்தினரூர்
தாவானைச்சிவராசதானிவளர்நிகம
மாவானைநயந்தேத்தாவாயென்னவாயே
வானவர்தேவனையேத்தாவாயென்னவாயே. (உஉ)

பகையானையதள்போர்த்தபண்ணவனைப்புரங்கொ
ணகையானைத்திருவளையிருடோறுமுடிக்குந்
திகையானைக்கருந்தடங்கட்செல்வியொருபாகத்
தகையானைவணங்காததலையென்னதலையே
சங்கரனைவணங்காததலையென்னதலையே. (உ௩)

நடிப்பவனம்பலத்திவர்நாலங்கருதாவொருமான்
பிடிப்பவன்யாவருமகிழப்பிறையினொடுகங்கை
முடிப்பவன்சேத்திராசமுதல்வனுலகனைத்து
கொடிப்பவன்வெண்ணீறணியாநுதலென்னநுதலே
றுண்ணியன்வெண்ணீறணியாநுதலென்னநுதலே. (உ௪)

அண்டத்தானவற்றினுக்குமப்பாலானவிர்ந்த
முண்டத்தான்றிருநெடுமொன்முதுகெலும்பிற்கொண்ட
தண்டத்தான்வாளுடர்தங்களுயிர்காத்த
கண்டத்தானுருநோக்காக்கண்ணென்னகண்ணே
காரோணனுருநோக்காக்கண்ணென்னகண்ணே. (உ௫)

தவமருவுயிர்க்கருளுந்தத்துவனையுருவ
நவமுருவைந்தொழிலுநடத்திவருவானை
யவமிலாதென்றுமிளிராதிபுராணத்துச்
சிவபிரான்சீர்கேளாச்செவியென்னசெவியே
தேவர்பிரான்சீர்கேளாச்செவியென்னசெவியே. (உ௬)

திங்கள்வார்சடையபெருநதேவேசவுமையாள்
பங்களாவுறநயந்தபண்ணவவெண்ணில்லா
வங்கள்வார்மலர்த்தடஞ்சூழாதிபுராணத்து
நங்களுயகவென்னுநாவென்னநாவே
நமச்சிவாயாவென்னுநாவென்னநாவே. (உ௭)

பிறைக்கண்டமுடிக்கணிந்தபேராளன்கொடிய
துறைக்கண்டகளாவதைத்துத்தன்றுணைத்தாடொழுவான்
மறைக்கண்டவாவுநளைவாழ்விக்குங்கருணைக்
கறைக்கண்டன்பணிபுரியாக்கையென்னகையே
காரோணன்பணிபுரியாக்கையென்னகையே. (உ௮)

நண்ணல்குறித்திரவுபகலுற்கரணங்களுமொத்
தெண்ணல்பிறிதிலையாகமுயலுநர்க்கேயின்பம்
பண்ணல்பிறர்க்கிலையாகபபரவருள்செய்கருணை
யண்ணல்சினகரஞ்சூழாவடியென்னவடியே
யாதிபுராணனைச்சூழாவடியென்னவடியே. (௨௯)

இருநான்குமூன்றுன்குமீரொட்டுங்கடந்தா
னுருநான்குமருநான்குமுபயமொன்றுமமைந்தான்
றிருநான்குபதமுமெனுந்தெய்வநீராதி
யொருநான்குந்தோயாதவுடம்பென்னவுடம்பே
யொளிகிளர்கண்மணிபூணாவுடம்பென்னவுடம்பே. (௩௦)

அற்றமறுத்தெம்மைவழியடிமைகொடுபுரப்பாள்
கற்றவர்கள்புகழ்ந்தேத்துங்கருந்தடங்கணம்மை
யுற்றமறையொருநான்குமுவந்துபுகழ்ந்தேத்தப்
பெற்றபதங்கருதாதார்பிறப்பென்னபிறப்பே
பிறங்குமலர்சீர்பேசார்பிறப்பென்னபிறப்பே. (௩௧)

வேறு.

என்றுதுதித்தேத்தி, நன்றுவலஞ்சூழ்ந்து
துன்றுமகிழ்பூத்தான், குன்றுபிலம்வீழ்த்தான். (௩௨)

அம்மைதிருமுன்னர்ச், செம்மையுறச்சார்ந்து
வெம்மைகொடுதுதிப்பான், மும்மைத்தமிழ்க்குரவன், (௩௩)

வேறு.

தூயகருந்தடங்கணம்மைதிருப்பாதம்
பாயபிறவிப்பரவைகடப்பதற்கு
நேயமலியுநெடுங்கலமேபோலும்
ஆன்றகருந்தடங்கணம்மைதிருப்பாத
மேன்றபிறவியிருங்காடுமாய்ப்பதற்குக்
கான்றசுடர்வைக்கணிச்சியேபோலும்
அன்பார்கருந்தடங்கணம்மைதிருப்பாதம்
வன்பார்பிறவித்துணங்கறன்மாய்த்திடுதற்
கின்பாருதயவிரவியேபோலும். (௩௪)

அளிக்குங்கருந்தடங்கணம்மைதிருநாமம்
விளிக்குங்கருமலமாம்வீடாதநோய்க்குத்
தெளிக்கும்வளாயிற்செறியகதம்போலும்
அரியகருந்தடங்கணம்மைதிருநாமங்

கரியமலமாங்கடியபறம்பிற்குச்
சரியவடர்க்குஞ்சதகோடிபோலும்
ஆண்டகருந்தடங்கணம்மைதிருநாமம்
பூண்டகருமலமாம்பொல்லாவரவிற்கு
நீண்டசிறையினிலாங்கலுழன்போலும். (௩௫)

வேறு.

இம்மைப்பயன்முழுதமீயுங்கருந்தடங்கணம்மைதாளே
யம்மைப்பயனுமொருங்களிக்குங்காரோணத்தம்மைதாளே
செம்மைப்பதமுத்திநல்குந்திருநாகையம்மைதாளே
மும்மைப்பொருளுணர்ச்சிமுற்றின்புநல்குநவிலம்மைதாளே. (௩௬)

வேறு.

என்றுநெஞ்சநெக்குருகிடக்கண்கணீரிறைத்திடத்துதிசெய்து
வென்றுமேமபடுசெந்தமிழ்முனிவரன்விடைகொடுவெளிவந்து
நன்றுசால்கருந்தடங்கண்ணிமேவியநற்றளிவடமேற்கி
லொன்றுமாலயஞ்சூழ்தருபெருமதிற்குத்தரதிசைக்கண்ணே. (௩௭)

வேறு.

தேடருஞ்சறுவதீர்த்தத்தீசானதிசைவயிற்சிறந்ததேயாகி
வீடருஞ்சிறப்பின்மேயதுநாளும்விளக்கஞ்சார்தீர்த்தியகங்கை
நாடருநதலத்தோடமைந்தவத்தீர்த்தநண்ணுபுகுறுமுனிபடிந்து
கோடருங்காயாரோகணவிலிங்கங்குலவுகாலந்தொறுங்கண்டே, (௩௮)

அதுதனைப்பூசித்தருந்தவம்புரிவானதற்குதலகன்றிசையணித்திற்
கதுமெனவடைந்துதன்பெயர்விளங்கக்காட்டுமோரிலிங்கந்தாபித்து
மதுமலராதிகொண்டுபூசித்துமாண்புசாலகத்தியமுனிவன்
சதுமுகனுலும்புரிவதற்கரியதவஞ்செய்வான்பின்னுமீதியற்றும். (௩௯)

அருமையிற்றன்பேர்புனைந்துதானிறுவுமருளிலிங்கத்தினையாட்ட
வொருமையிற்பலருங்குடைந்தினிதுய்யவுன்னியாவயினொருதீர்த்தம்
பெருமையிற்றொட்டுத்தன்கடப்புனலும்பெய்துறப்படிந்தெடுத்தாட்டித்
திருமயிற்சாயல்பாகனைப்பூசைசெய்தருந்தவம்புரிகாலை. (௪௦)

வேறு.

நாடுதிறல்வாளவுணர்நமுசிமுதலானோர்
கோடுசிலைவாள்பலகைகுந்தமுறுகையர்
நீடுபுவனங்களினெருப்பெழவிழிப்பார்
கூடுபலசேனையொடுகோளமர்குறித்தார். (௪௧)

பாயமுகிலும்பரவையுங்குலைகுலைந்து
சாயநனியார்த்தனர்தடஞ்சிலைவளைத்தார்
மாயமிகுவென்கொலெனவாசவனளிக்கு
நேயமலிமாநகர்வளைந்தடனினைந்தார். (௪௨)

காவலரையோட்டியுயர்கற்பகமுறித்தார்
பாவலர்சொறேனுவையும்பற்றினர்பிணித்தார்
மாவலர்கதுப்பின்மடமாதரையலைத்தா
ரேவலரிவ்வாறலையியற்றியடர்காலை. (௪௩)

வானவரதிர்ந்தருமுவட்கநனியார்த்தார்
தானவரடங்கவலிசாய்ந்துமுனைதேய்ந்து
போனவர்களாகவுபோர்புரிதுமென்று
வானவர்களாயமர்விளைத்தனரடர்ந்தே. (௪௪)

கோடுசிலைவாங்கிநெடுநாண்கொளுவிகோ
யாடுகணைபூட்டினரளப்பிலவிடுத்தார்
நாடுவடிவாளுருவிவெட்டினர்நடுங்கச்
சேடுபடுதண்டுகொடுமோதினர்சினந்தே. (௪௫)

வெட்டினருரப்பினர்வெடித்தனர்பிடித்துக்
கட்டினரிறுக்கினர்கதித்தனர்வயத்தோள்
கொட்டினர்மிதித்தனர்குதித்தனர்கொல்வாமென்
றொட்டினர்நெருக்கினருருக்கினரிலேகர். (௪௬)

வாளொடுமிழந்தனர்பிடித்தகைவயப்பொற்
றோளொடுமிழந்தனர்துரோணமிகன்மேய
கோளொடுமிழந்தனர்குலாவும்வலிமான
நாளொடுமிழந்தனர்கணைந்துதிதிமைந்தர். (௪௭)

அற்றனமுடித்தலைகளாடினகவந்த
முற்றனவிரத்தமிகவோடினபராந்து
செற்றனபிணக்குவைசிதைந்தனபெரும்போ
ரிற்றனர்தயித்தியரிகற்றிறமடங்கி. (௪௮)

கரிபலசிதைந்தனகடுத்துவருவேகப்
பரிபலசிதைந்தனபரப்பினொடுபொற்றேர்க்
கிரிபலசிதைந்தனகிடைத்தவுணரொன்னு
மரிபலசிதைந்தனபறந்தலையினம்மா. (௪௯)

வானவரெதிர்ந்துவடிவாளிகடொடுத்துத்
தானவருடைந்திடவியற்றுசமர்கண்டு
கானவழலென்னவெரிகண்ணினரெதிர்ந்தா
ரானதிறல்காண்டுமெனவாங்கவுணர்தலைவர். (௫௦)

வேறு.

சிலைவாங்குபுநாணேற்றினர்திதிமைந்தருட்டலைவ
ருலைவாங்கியசுடுதீக்கணையொன்றல்லனவுய்த்தா
ரலைவாங்கியகடலேழுமுள்ளச்சுற்றிடவார்த்தார்
நிலைவாங்கினரிமையோரெனநினைவுற்றனர்பலரும். (௫௧)

உலையிற்பொலிகனலிற்சினமுற்றூர்விடுபகழி
தலையிற்சிலமுகத்திற்சிலதாளிற்சிலதிண்டோண்
மலையிற்சிலதுடையிற்சிலமார்பிற்சிலவாக
நிலையிற்றளர்தரத்தைத்திடகெடிதோய்ந்தனரமரர். (ருஉ)

சாய்ந்தார்சிலர்மெலிந்தார்சிலர்தளர்ந்தார்சிலர்வெகுளி
யோய்ந்தார்சிலர்களைத்தார்சிலருளைத்தார்சிலரொளித்தே
மாய்ந்தார்சிலர்பெயர்ந்தார்சிலர்மயர்ந்தார்சிலர்கிடக்கை
யெய்ந்தார்சிலர்தவித்தார்சிலரிளையாவலியிமையார். (ருங)

தேரிற்புகும்பரியிற்புகுஞ்செங்கட்களிறென்னுங்
காரிற்புகும்பார்ப்பாரிருகண்ணிற்புகுக்கடல்சூழ்
பாரிற்புகும்பிலத்திற்புகும்பறம்பிற்புகும்பல்லோ
ரூரிற்புகுங்கொடுந்தானவருய்க்குங்கடும்பகழி, (ருச)

இவ்வாறமராடும்பொழுதிமையோர்படையுடைய
வெவ்வாய்வடவையிற்சிறுபுவிழியாயிரமுடையான்
றெவ்வானவர்முடிதேய்த்திடுந்திறன்மாக்களித்தேறி
யொவ்வாவொருசதகோடிகொண்டுருமேறெனவார்த்தான். (ருரு)

கொடுங்கார்முகம்புருவத்தொடுகுனித்தான்முழக்கெழுப்பி
யடுங்காருமிழுருமேறெனவடல்வாளிகள்சொரிந்தான்
கடுங்காரவுணர்கண்மார்பகங்கலக்கிப்புறப்படுவ
படுங்காரினுமனையார்பொழிபகழிக்குலநூறி. (ருசு)

கோலாற்சிலருயிர்மாய்த்தனன்கூற்றத்தினுங்கொடிய
வேலாற்சிலருயிர்மாய்த்தனன்மிளிர்வாண்முதற்படையின்
பாலாற்சிலருயிர்மாய்த்தனனயிராவதப்பகட்டின்
காலாற்சிலருயிர்மாய்த்தனன்கண்ணாயிரமுடையான். (ருஎ)

பழுதார்செயல்புரிந்தோமெனப்பதைத்தார்சிலர்கையாற்
றொழுதார்சிலர்வீழ்ந்தார்சிலர்சோர்ந்தார்சிலர்துயர்மிக்
கழுதார்சிலரொழிந்தார்சிலரழிந்தார்சிலரார்த்துக்
கழுதார்பறந்தலைநீத்துயிர்காத்தார்சிலரவுணர். (ருஅ)

திறன்மிக்கவரிவ்வாறுறவெந்நிட்டமைகாணா
மறமிக்கமுசியென்பெயர்வாகைத்திறலவுணன்
றிறன்மிக்கவெங்கணைமாமழைசோரப்பொழிந்தார்த்தா
னுறன்மிக்கவிந்திரன்மாற்றினனுறுபல்கணைதூவி. (ருகூ)

காற்றின்படைகனலின்படைகனலஞ்சுறுகொடிய
கூற்றின்படைமுதலாயினதொடுத்தான்கொலையவுண
னேற்றும்படையெல்லாமொருங்கிறத்தக்கனவாகி
மாற்றும்படைதொடுத்தான்பெருவயிரப்படையுடையான். (சுo)

அடுவேலெடுத்தெதிர்தார்த்தனனவுணன்சுராஞ்சக்
தொடுவேலதுவரல்காணுபுகுலிசத்தினைவிட்டான்
படுவேலுடனவனுவியும்பருகிப்பெருங்குலிசம்
வடுவேல்விழியயிராணிமணாளன்கையுற்றன்றே. (௬௧)

வேறு.

காய்தொழினமுசிமாயத்தயித்தியர்கலங்கியோடி
யாய்வலிமிக்ககாலப்பிரயனுக்கறியக்கூறப்
பாய்கனனயனங்காலப்படையொடுமவனெழுந்தே
வாய்வுசிவயிரவொள்வேன்மன்னனைவளைத்தானன்றே. (௬௨)

ஒருசிலைகுனிபக்கோட்டியுடற்றுபல்கணைகள்பூட்டிப்
பொருகடைக்காலமாரிபொழிவதிற்பொழிந்தானாக
வெருவரவிடுத்தவாளிக்குலமெலாம்வீயமாற்றி
மருவுடன்முழுந்தைப்பவாட்டமுற்றிளைத்தானன்றே. (௬௩)

விழிமலர்மேனிமுற்றுமெய்யெனவெய்யவாளி
கழிதரத்தைப்பவாற்றுங்கருமமொன்றில்லாவேந்தன்
பொழிதிரைக்கடலினுப்பட்புயல்பலகமலம்பூத்துப்
பழிதபக்கிடந்தாலென்னக்கண்வளர்பவனைபுள்வான். (௬௪)

பெருந்திறல்படைத்தகாலப்பிரபனுலிளைத்தேனுண்ட
மருந்தினுலிருந்தேனின்னேவந்தமராடிவென்று
திருந்தவானவருக்குற்றசெல்லலைககளையவேண்டுங்
கருந்துழாய்த்தொடையாயென்றுகருத்துறவெண்ணினானே. (௬௫)

எண்ணியபொழுதேமாயோனெழுந்துதார்க்கியன்மேலேறி
யண்ணியபடைகளோடுமமர்க்களங்குறுகியார்த்துக்
கண்ணியதிகிரியேவிக்கருதலனுயிரைமாய்த்து
நண்ணியபடையுங்கொன்றுவானவர்நடுக்கநீர்த்தான். (௬௬)

எஞ்சியவவுணரோடியிற்றமையுரைப்பக்கூற்று
மஞ்சியகாலவேகனடுபடையொடுமெழுந்து
துஞ்சியவவுணர்க்கண்டுதுடிதுடித்தலரினமேய
வஞ்சியமார்பினுனேர்வந்துபோர்புரியாயென்றான். (௬௭)

அடுசமர்புரியெனுமுன்னமூன்றுகைத்திகிரிவிட்டான்
கொடுவலிக்காலவேகன்றுருநகைவாயிற்றேறி
நெடுவலித்திகிரிதன்னைநில்லெனநிகழ்த்தலோடும்
படுமனுத்தகைக்கப்பட்டபாம்பெனலாயிற்றன்றே. (௬௮)

நில்லெனவுரைத்தலோடுந்நகையுண்டுநேயிநின்ற
தொல்லெனவினிநாஞ்செய்வதொன்றுமின்றென்னவெண்ணி
யல்லெனவிருண்டகண்டத்தண்ணலைத்தியானஞ்செய்தான்
கல்லெனப்பொலிதிண்டோளிற்கருந்துழாய்கமழப்பூண்டோன். (௬௯)

காலனைவென்றாற்போலக்காலவேகனையும்வென்று
சீலவிண்ணவரைக்காக்கத்திருவுளஞ்செய்யவேண்டு
மாலரன்னிழலின்மேயவண்ணலேகாமற்காய்ந்த
பாலநேத்திரத்தாவென்றுபராவுபுதியானஞ்செய்தான். (௭௰)

மாயவனிவ்வாறெண்ணவனிதையோர்பாகத்தெம்மா
னாயவக்களத்துத்தோன்றியங்கையிற்சூலமேவித்
தீயவெங்காலவேகற்செகுத்தவன்படையுமாய்த்துத்
தூயவெண்கயிலையுற்றான்சுரரெலாந்தொழுதுவாழ்த்த. (௭௧)

இறந்தவரொழியமற்றுமெஞ்சியவவுணரெல்லாம்
பறந்தலையகன்றுசென்றுபரவைபுக்கொளித்துக்கொண்டு
சிறந்தகவிருளிற்றோன்றிவிரம்பவூறிழைத்துமென்மேன
மறந்தலையெடுப்பச்செய்தார்வலாரியாதியர்துன்புற்றார். (௭௨)

என்செய்வாமிதற்கென்றெண்ணியெழுகடற்புனலுமுண்ணு
மின்செய்வார்சடிலத்தண்ணன்மெய்யருணிரம்பப்பெற்ற
தென்செய்மாதவத்தனாயசெந்தமிழ்முனியேவல்லோன்
முன்செய்வானிஃதென்றெண்ணியாவருமுடிவுசெய்தார். (௭௩)

அந்தமாமுனிவனுலகக்காரோணத்தமலன்பூசை
சந்தமாமலர்கொண்டாற்றுந்தவடபுரிநதமர்வதோர்ந்து
முந்தவானாடர்யாருமொய்த்துவந்தவனைத்தாழ்ந்து
நந்தவாதரவுபொங்கநயந்திதுநவிலலுற்றார். (௭௪)

அருட்பெருங்கடலேபொல்லாவவுணர்வாரிதியொளித்துக்
கருட்பொழுதெழுவாருறுகண்ணறப்புரியாநிற்பார்
மருட்படுமவரைக்கொல்லும்வகையுணர்ந்திலமாலென்று
தெருட்பெருவானோர்கூறச்செந்தமிழ்முனிவன்சொல்லும். (௭௫)

பகன்மறைந்திருளிற்றோன்றிப்பயிலறக்கூறுசெய்யு
மிகல்வலியவுணர்தோற்றமெய்திடப்புரிவாமின்னுந்
தகவுறயாதுவேண்டுஞ்சாற்றுமினென்றனன்று
ரகல்களிப்பினராயீதேயோதுமென்றஞ்சலித்தார். (௭௬)

வந்தவானாடரோடும்வயங்குகாரோணமேய
சந்தமார்முலையோர்பாகத்தம்பிரான்றாள்கள்போற்றி
நந்தவாதரவுபொங்கநல்லருணிரம்பப்பெற்றுப்
பந்தவாளவுணர்மேயபடுகடற்கரையுற்றானே. (௭௭)

மேயகும்பசனைக்கண்டுவெருவரலடைந்துகார்கோ
ளாயசெந்துகிர்முத்தாதியடியுறையாகவைத்துப்
பாயபல்கரமுகீட்டிப்பணிதருதன்மைமானுந்
துய்பன்மணிகளோரேந்திரைபதந்தோயுந்தோற்றம். (௭௮)

குறுமுனிவரனீர்முற்றுங்குடிப்பதற்கென்றுதேர்ந்து
கறுவுடையவுணர்வாரிகைவிட்டுப்போவதொக்கு
முறுபெருவயிறுவீங்கவுவர்ப்புனல்வாய்வைத்துண்டு
மறுவறுவிசும்பினேகுமழைக்குலமுழுதுமம்மா. (எகூ)

மறிதிரைக்கடலினூவாய்வல்லிளைந்தோடுங்காட்சி
குறியவிம்முனிநீர்முற்றுங்குடித்திடமதற்குமுன்னே
செறிபலசரக்கினோடுஞ்சிதைதராதொருங்குவாமென்
றறிதரக்கரைச்சார்பெண்ணியவாய்விரைந்தோடன்மானும். (அ0)

அடர்கின்றபவளக்காட்டோடெழுமலையானைவத்தன்
படர்வென்றமுனிவன்பாதபத்மத்தினைவீழ்ந்தேற்றுங்
கடலொன்றுவெள்ளமுற்றுங்கணத்திலுண்டமைபம்மிஞ்சை
மடவின்றுகற்பானைணணிவடவைவைநத்தைந்சலம்போலும். (அக)

முன்னைநாண்மாலைப்போதின்முழுமலையானைத்தம்பூத்த
புன்னைமேல்விரித்துக்காயப்போகட்டதுளையெல்லாம்
பின்னைநாள்வெயிலுந்தோயப்பெறாமதந்தெடுத்திடாமை
யென்னைநாமிதுகைக்கோடலென்றிகழ்ந்திருந்தன்மானும். (அஉ)

உறுதுயரொருங்குபின்னுறுவதுசற்றுநேருச்
சிறுமதியாளர்தன்னுஞ்செயலெனச்சிறுமீனெல்லாம்
வெறுவியதுள்ளாநின்றமேல்வரானைத்துநேறப்
பெறுபெருமதியார்போலவியந்துவபெருமீனெல்லாம். (அங)

கொடிமுதற்பறவையெல்லாங்கொழுங்கயலாதிவெளவிச்
செடிபடுகுடம்பைதோறும்வினையுபசங்கலுங்காட்சி
வடிவறியாதவாரிவறத்தலோரந்தென்றமட்டுங்
குடிகொளுமிடத்துணுக்கள்கூட்டிவைத்திடுதல்போலும். (அச)

இன்னணமிகழுங்காலையெங்கள்காரோணநாதர்
பொன்னடியிதயத்தெண்ணிப்புனைணியமுனைவேயற்
றுன்னருங்கடனீர்முற்றுமோருழுதள்வைத்தாசி
யன்னவன்கரத்துநாப்பணமாகதியாவரும்வியப்ப. (அரு)

முண்டகமலருண்மேயமுத்தெளவங்கைமேய
வண்டைத்திவலையொன்றைவாயினுட்பெய்தான்பெய்யக்
கண்டவரதிசயித்தார்காயாரோகணப்பிரானூர்
தண்டவாவருள்பெற்றோர்க்குஞ்சாறறிதோர்பாரமாமோ. (அசா)

பரவைநீர்வறத்தலோடும்பாதகவவுணரெல்லாம
விரவுபேரிருடீர்காலைவெளிப்படுகள்வர்போல
வுரவிலராய்வெளிப்பட்டோடுதற்குள்ளங்கொண்டார்
கரவிலாவமரர்கோமான்கைக்குலிசத்தாற்கொன்றான். (அஎ)

புனல்வறங்கூர்கடற்குப்புறப்புனல்விடுப்பான்போல
மனமொகாவவுணர்செந்நீர்பாய்த்திறன்வானவேந்த
னனகவாருடர்யாருமருந்தமிழ்முனியைப்போற்றி
முனைகர்செய்திங்குதீர்ந்தோமுனைவநின்னருளாலென்றார். (அ௬)

தானவரொன்னார்தாவந்தவாதுறத்தித்தலாலே
வானவரொன்னும்பாதவம்புலர்ந்திடுதலென்னி
யீனமில்கருணையாயபெருமழைபிரங்கிப்பெய்தக்
கானகந்தழையச்செய்தாயகைம்மாறென்றிதற்குண்டாங்கொல். (அ௯)

என்றுபன்முனிவர்க்கும்பமுனிவனையேத்துங்காலைக்
கன்றுநின்றுவந்தவேந்தன்முனிவனைக்கசிந்துதாழ்ந்து
தொன்றுபோலுறவுட்கொண்டதோயத்தைவிடுகவென்று
னன்றமைதரவிடுத்தானுர்த்ததபுணரிமாதோ. (௯0)

முனிவிடைபெற்றுவானோர்முழங்குதம்முலகம்புக்கார்
கனிமனத்துறவனபோகதுகாயாரோகணமுன்னுக
வனிதையோர்பாகத்தண்ணல்வைப்பெலாஞ்சென்றுபோற்றி
யனியமிலாதமேன்மையகத்தீசமிறைஞ்சுங்காலை. (௯௧)

அந்தமாவிலிக்கநின்றுமற்புதன்றோன்றிவேட்ட
சந்தமார்வரங்கணல்கத்தவாதபேருவபிற்பெற்று
முந்தமாமலயநண்ணிமுனிவர்தங்குழாங்கள்சூழப்
பந்தமோவுறவமர்ந்துபாரினைச்சமன்செய்தானல். (௯௨)

நித்தியகங்கைதன்னோடகத்தியநீருமூழ்கிச்
சத்தியவகத்தீசன்பொற்றுளினைதொழுதுறைந்த
கத்தியதுதியுஞ்சொல்வார்கருதியபோகந்துய்த்து
மெத்தியசிவலோகத்தேவீற்றினிதிருப்பாரொன்றும். (௯௩)

கலையுணர்ஞானம்வேட்டோர்கசிந்தனரடைந்துதென்பான்
மலைமுனிபதிட்டைசெய்தவகத்தீசவள்ளல்பாதந்
தலையுறப்பணிநதுபோற்றிற்றாழ்விலாதடைவாரொன்று
முலைவிறாற்கவியும்பாடுமவலிமையுமுறுவரன்றே. (௯௪)

அகத்தியன்பூசைசெய்தவகத்தீசந்தனக்குண்டாய
மகத்துவம்யாதுசொற்றுமாமலராளிவந்து
நகத்திகழ்நடுத்தலேசஞ்சமைத்தரும்பூசையாற்றி
யிகத்தவில்பேறுபெற்றசரிதமுமெடுத்துச்சொல்வாம். (௯௫)

அகத்தீசப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௧௫-கூ - திருவிருத்தம் - ௬0௪௬.

## நடுத்தலேசப்படலம்.

பந்தமறுத்தயர்சனற்குமாரமுனிபல்கலையு
நந்தவுணர்சயிலாதிபதர்தொழுதுநம்பெருமான்
சந்தமுறவமருநடுத்தலேசங்காரோணத்து
வந்ததிறனுரைத்தியெனமனமகிழ்ந்துகூறுவான். (க)

முன்னமொருகற்பத்தின்முழுவதுமாக்குதல்கருதி
யன்னமுகைப்பவன்முயன்றுமாகாமேமனம்வருந்தி
யென்னபுரிகுவமினியென்றெண்ணியெழுந்தனன்வடப்பைம்
பன்னமிசைவிழிவளரும்பச்சைமாறனையடுத்தான். (உ)

அடுத்தமலரவன்வணங்கியண்ணலேபடைப்பதனுக்
கெடுத்தபலதிறன்முயன்றுமெய்திலனென்செய்வலென
வுடுத்தபொலந்துகிலானுமுமாபதியார்திருவருளா
மடுத்ததிஃதெனத்தெளிந்தம்மறையவனுக்குணர்த்துவான். (ங)

தூயமலர்மிசையமருந்தோன்றல்கேளட்பெருமா
னேயமிகுசத்திகணன்னிவிர்த்திமுதலோரைவ
ராயவருணிவிர்த்திநினையடையாதகாரணத்தாற்
பாயபடைப்புறமுயன்றும்பலித்திலதோரொட்டினையும். (ச)

அண்ணலவன்சத்திகளேயாக்கன்முதலைந்தொழிலும்
பண்ணல்பிறிதிலையுணர்திபகர்தருமச்சத்தியுறி
லெண்ணலெவனொருதுரும்புமிரும்படைப்பாதிகளியற்று
மொண்ணலத்திறொருபசுமுன்னுஞற்றியதோர்ந்திலைகொல்லோ. (ரு)

உன்னைமகனாப்பெறுவேனொருகான்மற்றொருகானீ
யென்னைமகனாப்பெறுவையிருவருமற்றவனுடம்பின்
முன்னையிருபாலுதித்தோமொழிதவிவையத்தனையு
மன்னையனையானவன்செய்யாடலெனவுணர்மைந்த. (சு)

வேறுதவஞ்செய்வதினும்வெய்யபொறிசெகுத்தைந்தாக்
கூறுபொறியுளத்தெண்ணிக்குழகனருட்குறிப்பூசை
மாறுதயப்புரிதவமேவாய்த்தபெருந்தவமாகு
மூறுபலவுறுப்பினுளுமுத்தமாங்கம்பொருவ. (எ)

பேறுபலவற்றினுளும்பெறற்கரியபெரும்பேறு
மாறுதவிர்சிவபெருமான்மகத்துவஞ்சாலருட்பேறே
யூறுதவிரப்பேறோராறுத்துணைநீயுற்றனையேற்
றேறுபெரும்படைப்பொன்றோசெய்வையெலாஞ்செய்குவையால். (அ)

ஆதலினச்சிவபெருமானடிக்கமலமருச்சித்துக்
காதலின்மற்றவனருளைக்கோடியெனவுரைத்தா
னோதலின்மிக்குவப்புற்றோனெண்பூசைபுரிதானம்
வீதலின்மற்றெதுவென்றான்விண்டுமனத்துணர்ந்துரைப்பான். (கூ)

எண்ணரியதலங்களுளுமேற்றமாம்பெரியதலங்
கண்ணரியகடனாகைக்காயாரோகணத்தலமே
நண்ணரியவதுசார்ந்துநன்றுசிவக்குறிநிறுவிப்
பண்ணரியபூசைபுரிபனவபோவெனவிடுத்தான். (௧௦

பச்சைமுகிலெடுத்துரைத்தபடிகாயாரோகணத்து
விச்சைதெரிமுனிவரொடுமேவிமிளிர்புனனான்கு
மிச்சைதிரம்புறமுழுகியாதிபுராணனையிறைஞ்சி
யச்சையருள்கருந்தடங்கணம்மைமலர்ப்பதம்பணிந்து. (௧௧)

மேயசுதைக்கடத்துதித்தவித்தகனையொருமுனியா
லாயகாரோணனைமேவமரரோந்திரேசனைநற்
றூயவகத்தீசனையன்புள்ளுருகச்சென்றுதொழு
தேயமலரவன்மீட்டுமெய்த்தினான்காரோணம். (௧௨)

ஆதிபுராணப்பெருமாற்கவாசியாசையினருள்சா
னீதியமைநகர்நடுவினிலவுதளியொன்றமைத்துப்
பாதிமதிபுனைசடிலப்பரனகுறிதாபித்தாங்கட்
போதிகவாத்தீர்த்தமொன்றுதனபெயரினாற்புரிந்து. (௧௩)

களிகிளரப்புனலகத்திற்காலமூன்றினுமுழுகி
யளிகிளர்பூசனைபுரிதற்காயபாத்திரஞ்சாந்த
மொளிகிளர்பன்மலராதியுபகரணமுறக்கொண்டு
தெளிகிளராவாகனமுற்செய்துபூசனைபுரிவான். (௧௪)

கண்ணாடுமருமணியைக்காரோணத்தரும்பொருளை
விண்ணாடுமுழுதுய்யநஞ்சுண்டுவிளங்கமுதைப்
பெண்ணாடுமொருபாகப்பெருந்தகையைத்தினந்தோறு
முண்ணாடுமென்புருகப்போற்றுதலுமொருவுகிலான். (௧௫)

பொழிமதுத்தாமரைமேயபுங்கவன்செய்தவநோக்கிப்
பழிகபுவானவராதிபற்பலருமதிசயித்துச்
செழிமறையோன்சிவபூசைசெய்வதுபோலெவர்செய்வா
ரழிவில்கருத்தியாதோவென்றுடியகமிகமகிழ்ந்தார். (௧௬)

இந்தவிதம்பூசைபுரிந்திருக்குநாள்களிலொருநா
ளந்தமிலான்காட்சிகொடுத்தருளுவதென்றவனருள்யாஞ்
சந்தமுறப்பெறுவதுமென்றென்றுள்ளநதகநினைந்து
முந்தநினைந்துள்ளுருகிமுளரிமேலவனிருந்தான். (௧௭)

அப்போதுகருணைபுரிந்தவ்விலிங்கத்திடைநின்று
மெப்போதுமொருதன்மையானாயவெம்பெருமான்
செப்போதுமுலைபாகத்தெய்வநாயகன்றோன்றி
முப்போதும்பூசிக்குமுண்டகத்தோன்முன்னின்றான். (௧௮)

கண்டமலரவன்விரைந்துகைகள்குவித்தனனெழுந்து
தண்டமெனக்கூற்றினுயிர்குடித்ததாண்மிசைவிழுந்து
கொண்டவுவப்பினனாகிக்குறித்தொருமுக்காற்சூழ்ந்து
விண்டமொழிநாக்குளறமுன்னின்றுதுதிவிளம்பும். (௧௯)

விண்ணிலந்தீயிரும்புவெங்கதிரோனொண்கிரணங்
கண்ணருக்கனீருவர்ப்புமலர்மணங்காய்கதிர்சுக்கை
வண்ணமணியொளிநாரந்தண்மையழல்வதிவெம்மை
பண்ணமையுமிசைபோன்றபரம்பரநிற்பணிகின்றேன், (௨௦)

ஒன்றாகிப்பலவாகியுருவாகியருவாகி
நன்றாகித்தீதாகிநான்மறைச்சென்னியுந்தீண்டாத்
தொன்றாகிப்புதிதாகிச்சுடராகியிருளாகி
யின்றாகிநாளையுமாமிறைவநினையிறைஞ்சிடுவேன். (௨௧)

வானாகிவளியாகிவயங்கழனீர்மண்ணாகி
யூனாகியுயிராகியுயிர்க்குயிராய்நிறைந்தபெரு
மானாகியிரவியொடுமதியாகிப்பதியாகித்
தானாகிநின்றபெருந்தலைவநினைச்சார்தருவேன், (௨௨)

பாலாகிச்சுவையாகிப்பாதங்களொடுபயனு
நாலாகியுருவமிருநாலாயொன்பதுமாகி
மாலாகிநானாகிமற்றெவையுமாயெவைக்கு
மேலாகிநின்றாய்நின்மென்மலர்த்தாளிணைதொழுவேன். (௨௩)

உடையாய்நின்னடிபோற்றியொள்ளியமூவிலைச்சூலப்
படையாய்நின்னடிபோற்றிபச்சிளவெண்மதிமிளிர்செஞ்
சடையாய்நின்னடிபோற்றிசாந்தமடையாதமனத்
தடையாய்நின்னடிபோற்றியண்ணாநின்னடிபோற்றி. (௨௪)

என்றுதுதிபுரிபவனுக்கெம்பிரானருள்சுரந்து
நன்றுனக்குவேண்டும்வரநவிறியெனவாய்மலரத்
துன்றுமுவகையின்மீட்டுந்தொழுதெழுந்துகைகள்குவித்
தொன்றுவிதமெதிருறநின்றோதியிவைவேண்டினான். (௨௫)

தேனூறுமலர்க்கொன்றைச்சிவனேநின்திருக்காட்சி
மேனாளுமறையுரைக்கும்பெரும்பேறுவேறில்லை
யானாலுநின்னடிக்கேயன்புநனிதரல்வேண்டு
மூனாலுநசையனைத்துமொழிஞானமுறல்வேண்டும். (௨௬)

தரைமுதல்யாவையுஞ்செயநின்சத்திபதிதரல்வேண்டும்
புரைதவிரிந்நகரநடிப்பொலிதலினாற்சிற்றடியேன்
கரையுமுளநடிப்பொலியுங்காரணத்தாலினையதலம்
விரைசெய்நடித்ததேசமெனுமொருபெயர்மேவுதல்வேண்டும். (௨௭)

தெரியவமைபுனல்பிரமதீர்த்தமெனவொருபெயர்பெற்
றரியபயன்குடைவாருக்கமையவளித்திடல்வேண்டு
முரியவினைத்தரு சிப்பாருறுபோகம்பலதுய்த்துத்
துரியநிலைகடந்தின்பந்துய்க்கும்வீடுறல்வேண்டும். (உஅ)

இந்தவரமளித்தியெனவிரந்தனனான்முகனையான்
பந்தமறப்பரம்பரன்சாம்பவதீக்கையினிதாற்றி
யந்தமிலாமுப்பொருளுமறியுஞானமுமருளி
யெந்தவரங்களுந்தந்தோமென்றருளியுருச்கரந்தான். (உகூ)

அன்றுமுதலத்தலமுமப்புனலுமாருளே
யொன்றுநடுத்தலேசமெனவுயர்பிரமதீர்த்தமென
நன்றுபெயராபுனைந்தனநன்ஞானமருளியதிறத்தாற்
கன்றுதலின்ஞானதலமென்றுமொருபெயர்களைவார். (ஙo)

பிரமதீர்த்தம்படிந்துபிரமனுற்றுபித்த
பரமநாயகற்பணிவார்பரமநாயகற்பிழைத்த
சரமமார்வினையொன்றுதவிர்தரயாவையுமொழிவார்
கிரமமாமுத்தியினைபங்கிடைத்துவாழ்நவர்மெய்யே. (ஙக)

விடைகொடுதன்னுலகடைந்துமெயபடைப்பினிதியற்றி
நடைசெழுநான்முகனிருநதானடுத்தலேசம்புகன்றும்
புடைகதைக்கைக்கூற்றுவன்முனபுரிநதபாதகமொழிவான்
றடையறவந்தருச்சித்தகாதையினிச்சாற்றுவாம். (ஙஉ)

நடுத்தலேசப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கசு-இ-திருவிருத்தம்-க0சஅ.

## இயமன்பூசித்தபடலம்.

மருவியசனற்குமரமாமுனிவரன்மலமா
சொருவியசயிலாதியொளமலர்த்தாள்போற்றி
வெருவியநமன்புரிந்தபாவமென்விளைத்ததெவன்
பெருவியப்புறவதனைப்பேசெனப்பேசிடுவான். (க)

இளமுனிமார்க்கண்டற்ககைவயெய்திடுமீரொட்
டளவையினத்தனெடுமன்னையுங்கவலுற்றுத்
தளர்தரவெவனென்றம்மழமுனிதான்வினவ
வுளம்வெருவுறநமன்வந்துறுமெனவுரைத்தமூதார். (உ)

பரசிவனுளனன்றன்பாதபங்கயமுள்ள
வரமலர்பலவுள்ளவண்புனலுளதெங்கும்
விரவதிர்வொடுமுள்ளம்வெருவலிரொனவிளம்பிச்
சேவதுசனிப்போடுங்கைதொழுதெழுந்தன்றால் (ங)

ஒருபரசிவக்குறியையுன்னிடமனமுண்டு
பொருவருமரியதுதிபுரிதரவாயுண்டு
மருவருச்சனைபுரியவளவியகையுண்டு
திருவுருநோக்கிடுவான்சிறப்புறுவிழியுண்டு. (௪)

மற்றவன்புகழ்கேட்கவார்தருசெவியுண்டா
லற்றமதறப்பழகவவனடியவருண்டு
சொற்றபத்திமைபுரிந்துதொழுதிடத்தலையுண்டு
கொற்றமென்பாலன்றிக்கொடுநமற்கெவனென்பான். (௫)

பண்ணவனடிப்பத்திபசுமரத்தறையாணி
வண்ணமென்றிடவுளத்துமருவிடக்காசிமுத
லண்ணலந்தலமனைத்துமடைந்தடைந்துறப்போற்றிக்
கண்ணகன்கடலூரைக்குறுகினன்காதலொடும். (௬)

தலையமைகடலூரிற்றற்பரசிவலிங்க
மலைவறப்பூசைபுரிந்தன்புறவமர்காலைக்
கொலையமைபிணர்க்கோட்டுக்கோட்டுவெம்பகடேர்ந்து
மலைகருமலைபோலவந்தனன்கூற்றுவனே. (௭)

கூற்றுவன்வரல்கண்டுங்கொண்டகொள்கையிற்சிதையா
னாற்றுவதருச்சனையேயன்றிமற்றொன்றுமிலான்
மாற்றுவதிலையாகவந்தெனைத்தன்னுலகத்
தேற்றுவதறிவாமென்றிருந்தனன்மார்க்கண்டன். (௮)

கண்டகண்மிகப்புலிங்கங்கான்றிடக்கடுங்கோபங்
கொண்டவனுருமிற்குளிறுபுகொதித்துறப்பி
யெண்டகநான்வந்ததெண்ணலைசிறுபிள்ளாய்
வண்டமர்குழல்பாகற்போற்றுபுவதிகின்றாய். (௯)

அரியயன்முதலாயவமரர்முற்பல்லோரும்
விரிதருமெனதாணைகடந்திலர்மெய்ம்மையிது
புரிதருபூசையைக்கண்டஞ்சுபுபோதுவலோ
தெரிவிளாதரவம்மோவென்றனன்சினமறலி. (௧௦)

பரசிவனடிப்பூசைபண்ணிடுபெருநோன்பி
னுரவமைநெறியினன்யானுனக்கெளியவனல்லேன்
புரவமையாதபிறர்போலெனைநினையற்க
திரமுறவந்தவழிச்செல்லெனமுனியுரைத்தான். (௧௧)

என்னுடைவலிசிறிதுமெண்ணலைசிறுபிள்ளா
யுன்னுடையெழுத்தொழிந்ததுணவொணநமன்சொற்றான்
முன்னுடைத்தலையெழுத்தேமுன்னிலையுளத்தமைத்த
மன்னுடையயற்கெழுத்துமதித்திலைபோலுமென்றான். (௧௨)

எனமுறையிகொலத்தெரிவிழிகமனுய
முன்கன்வெங்கொடும்பாசமுனியுடன்மிசைவீச
வனகனும்வெளித்தோன்றியடியெடுத்துதைத்திடலுங்
கனவனாயெனவீழ்ந்தான்கடுஞ்சினக்கூற்றுவனே. (உஉ)

அஞ்சுதலிலனுகிப்பூசனையினிதாற்று
மஞ்சனைமுகநோக்கிநிதியமுறவழங்கி
யெஞ்சியகூற்றுவனையெழுப்பிநம்மடியாரைத்
தஞ்சமென்றடையென்றுசாற்றுபுவிடுத்தனனே. (உஙு)

பூசனைபுரிகாலைப்போற்றுதல்செய்யாது
பாசம்வன்புறவீசிபடர்புரிபாதகத்தாற்
காய்சினவலியிழந்தகவலையுண்மிகத்துளைந்து
தோய்சலதிப்புடவித்தலம்பலதொழுனினைந்தான். (உச)

ஆனந்தவனமாதியலகில்பதிநலஞ்சென்று
தானந்தமில்லாதசயம்புவைப்பூசித்து
மூனந்தற்கொழியானுயொருகரும்பகட்டூர்தி
கானந்தப்பெருகுபுனல்யமுனையங்கரையுற்றான். (உரு)

வளிதடவினும்பாம்மகதிகல்யாழ்முனிவ
னொளிகிளராங்கெதிரவுவந்தவனடிதாழ்ந்து
களிகிளர்செருக்கின்முனநிகழ்ந்தவெலாங்கரைந்து
தெளிதலமொன்றறியச்செபபுதியெனக்கென்றான். (உசு)

வேறு.

புன்னையங்கானல்சூழும்பொருகுணகடற்றீரத்தி
னன்னையோர்பாகத்தெம்மானமர்தருதலமொன்றுண்டாற்
றன்னையேநிகர்வதென்றுந்தணவருஞ்சிறப்பிறேங்கும்
பொன்னையேபொருவயாரும்பொதிதருந்திருக்காரோணம். (உஎ)

கேத்திரம்பலவற்றிற்கும்விசேடமாங்கிளர்ச்சியாலே
கேத்திரராசமென்றுங்கேத்திரவரமேயெனறுங்
கேத்திரத்தியல்புணர்ந்தகிழமையருரைப்பரநதக்
கேத்திரமருவியுள்ளபுனலெலாங்கெழுமவாடி. (உஅ)

கருந்தடங்கண்ணியோடுகருணைசால்காரோணத்தா
ரிருந்தநற்றளிமுன்போற்றியிணையதளிகளெல்லாம்
பொருந்துறப்போற்றிக்கஞ்சப்பூவினுன்பூசைசெய்த
பெருந்தகைகடுத்தலேசமெனும்பெருந்தளியைச்சார்ந்து. (உகு)

அந்தணனமைத்ததீர்த்தத்தாடியங்கடுத்தலேசச்
சுந்தரன்பாதம்போற்றித்தொழூஉப்பலபணியுஞ்செய்யி
னெந்தவல்வினையுந்தீருமெய்துவைவலிபோவென்றான்
சிந்தமிக்குய்ந்தேனென்றுதாழ்ந்தனன்விடைகொண்டாருல். (ஙo)

விடைகொண்டுகேடாவுகைக்கும்வெந்திறற்செய்யகோலான்
தடைகொண்டுவெல்லலாகாக்காரோணநகரமேவி
யடைகொண்டுமலருங்கொண்டவமரர்தந்தீர்த்தமாதி
யிடைகொண்டுமிளிரும்பல்லதீர்த்தமும்விரவிமூழ்கி. (௩௧)

கறைதபுநீறுபூசிக்கண்மணிமாலைபூண்டு
முறையினைந்தெழுத்துமெண்ணிக்கருந்தடங்கண்ணுண்மோகத்
திறையவர்முன்னமேகியிறைஞ்சுபுசுதைககடேசப்
பிறைமுடியவர்முற்கும்பமுனியீசரிருப்பேணி, (௩௨)

வணங்குபுநடுத்தலேசமருவிநன்பிரமதீர்த்தத்
திணங்குறமூழ்கியண்ணலெதிர்சென்றுபணிந்துபோற்றிக்
குணங்கிளர்மலர்முன்னாயகொண்டுறப்பூசையாற்றி
மணங்கமழன்புபொங்கமற்றுமின்னனசெய்வானால். (௩௩)

ஏறுகள்பலவிராவியெழில்செய்வானெழுந்தவொச்சி
பாறுதலில்லாப்பல்காற்பன்மணிமண்டபங்கள்
வேறுமோர்மேருவென்னவிளங்குகோபுரமுனாக
வாறுசேர்சடையார்கோயிலமருறவியற்றினானே. (௩௪)

ஆயவானவர்முற்பல்லோரொருங்குவந்தடையக்கூட்டி
மேயசீர்மாகமாதமிளிர்மருத்துவநன்னாளிற
பாயவேறெழுதப்பட்டபடத்தையாரோகணஞ்செய்
தேயவேழாநாளண்ணலிரதமூர்விழாநடத்தி. (௩௫)

திருமகமுறுபத்தாநாட்டிருமலர்ப்பிரமதீர்த்தத்
தொருவிலத்திரனையாட்டியும்பராதியர்களோடு
மருவுறத்தானுமூழ்கிவயங்கவரோகணஞ்செய்
திருமருப்பெருமைப்பாகனிலிங்கமுன்னிறைஞ்சிநின்று. (௩௬)

மறைமுடிவாசபோற்றிவயங்கருட்டேசபோற்றி
கறைமலராசபோற்றிகணிப்பருநேசபோற்றி
யுறைகயிலாசபோற்றியூர்கடியாசபோற்றி
யறைகடிபாசபோற்றியருணைடுத்தலேசபோற்றி. (௩௭)

கூடுதோலுடையாய்போற்றிகூர்த்தசூற்படையாய்போற்றி
நீடுநீர்ச்சடையாய்போற்றிநேரிழைபுடையாய்போற்றி
யாடுபாம்பிடையாய்போற்றியறுகணிதொடையாய்போற்றி
நாடுமால்விடையாய்போற்றிநடுத்தலமுடையாய்போற்றி. (௩௮)

எனத்துதிபுகலுவானுக்கிரங்கியவ்விலிங்கநின்றுங்
கனத்திலுங்கரியகண்டன்றோன்றுபுகாட்சிநல்கி
மனத்திலுநினையாத்தீமைமாய்த்தனைவலியுந்தநதாஞ்
சினத்துநம்மடியார்மாட்டுச்சேறலையென்றுமென்று. (௩௯)

ஆழிகடைந்தமுதின்னண்டேவர்க்கடியேமடைந்தமுய்யுங்காலை
யூழியனலுங்குளிருமாறேயுடன்றெழுவெய்யவிடங்கனற்ற
வாழியுயிர்பிழைத்தோடிவந்தோமற்றுமொருகணந்தாழ்த்தல்செய்யிற்
பாழியுலகமுழுதுந்தீக்கும்பற்றின்றிவாடியவெங்களோடும். (௭)

உருகுமெய்யன்பருளத்துவாழ்வேயோவாக்கருணைப்பெருங்கடலே
கருகுவிடத்தின்வலிதொலைத்துக்காத்தருளென்றுகசிந்துவேண்ட
வருகமர்சுந்தரமூர்த்தியைப்பார்த்தாலாலம்பற்றித்தருகவென்னப்
பெருகுவிருப்பினைந்ததனைப்பிடித்துத்திரட்டிக்கைமீதுவைக்க. (அ)

தாமலாமேலமர்வண்டுபோலத்தன்கையமரும்விடத்தைநோக்கிக்
காமர்மருவுசெவ்வாயிற்பெய்துகண்டநிறீஇநீலகண்டனானான்
பூமலிவேணியன்சொற்படியேபோந்துசொடியவாலாலம்பற்றி
யாமவனுப்த்தலினுயனுருமாலாலசுந்தரராயினரோ. (௯)

கொடுவிடமாய்ந்தபின்மாயன்றாழ்ந்துகோமளமேனிவனப்பழிந்து
படுபழிமேவக்கரியனானேன்பண்டைவனப்புறப்பாலியென்னக்
கடுவமர்கண்டன்முறுவலித்துக்காரோணமேவியிலிங்கந்தாபித்
திடுமலரால்வனப்பெய்துவாயென்றியம்பப்பணிந்துவிடைபெற்றனே. ()

வேறு.

மதும்டையுடைத்துப்பாய்பசுந்துளபமாலையான்வயங்குகாரோண
முதுநகரடைந்துமுகிழ்த்தபல்வளமுமோகித்துநோக்குபுமகிழ்ந்து
சதுமுகன்படைத்ததராதலப்பயனாய்த்தழைந்ததிந்நகரொனக்கருதி
விறமுடிப்பெருமான்றிருவருணினைந்துவிண்ணவர்வாவியையடைந்தான்.

அந்தநற்றீர்த்தம்படிந்தபின்முனிவராவியின்புறத்தோய்ந்து
பந்தமுற்றொழிக்குங்காகதீர்த்தத்தும்பாய்புகழ்ச்சறுவதீர்த்தத்துஞ்
சந்தமுறறமையமுழுகுபுபுனிதசாந்தமாநதெய்வநீறணிந்து
முந்தவற்புதமாங்கண்மணிபூண்டுமொழியுமைமரதெழுத்துளங்கணித்து. ()

இருந்தியகாயாரோகணம்புகுந்துதெய்வநாயகன்முனம்பணிந்து
பொருந்தியவுள்ளநெக்குநெக்குருகப்பொழிமழைத்தாரைகண்வார
வருந்தியக்கங்களனைத்தையுந்தவிர்த்தற்காயவாவரணத்தைச்சூழ்ந்து
வருந்தியவருநஞ்சமுதுசெய்தருளும்வள்ளலார்திருமுனமடைந்தான். ()

குறிகுணங்கடந்ததனிப்பெருமுதலைக்கோதிலாதவர்பெருவாழ்வைச்
செறியருட்பிழம்பாஞ்சிற்பரவெளியைச்சின்மயானந்தபூரணத்தை
யறிதருமறிஞருள்ளத்துள்ளூறியழிதராதினிக்குமாரமுதை
மறிவருஞ்சச்சிதானந்தப்பொருளைமலர்விழிகளிப்புறக்கண்டான். (௧௪)

பன்முறைபணிந்துபணிந்தெழுந்தாடிப்பாடிப்புபரவசமாகிச்
சின்மயவிந்தச்சிவக்குறிகாணச்செய்தமாதவமெவனிந்த
நன்மைகொள்குறியைத்தரிசியார்பிறப்புநவிலுமெப்பிறப்பெனயந்து
சொன்மனங்கடந்ததனிச்சிவக்கொழுந்தைத்தரிசறுத்துதிப்பவனானான். ()

ஒளிவளர்சுடரேயுளாக்கொளுமொன்றேயுவமனிலாத்தனிமுதலே
தெளிவளரமுதேமூன்றுகட்கரும்பேசிந்திக்கத்தித்திக்குந்தேனே
யளிவளர்கனியேயானந்தப்பிழம்பேயற்புதம்விளைக்குமாரமுதே
களிவளர்மறைசூழ்ந்தேத்துகாரோணநற்றலத்தமர்சிவக்கொழுந்தே.(௧௬)

என்றுநற்றுதிசெய்தெண்ணிலாவுயிருமீன்றினிதளித்திடுமிறைவி
யன்றுதலில்லாவொருகருந்தடங்கணம்மையைக்கண்டுளங்களித்து
நன்றுறத்துதித்துமற்றுமாவரணநயந்தமர்வாரையும்போற்றி
வென்றுமிக்கொளிருஞ்சக்கரப்படைமால்விடைகொடியந்தனன்வெளியே.

அருட்டருமமுதகட்டேசமும்போற்றியமரரோர்ந்திரேசமும்பணிந்து
மருட்டபுமுனிகாரோணமுந்தொழுதுவயங்ககத்திசமுமேத்தி
யிருண்மணிமிடற்றுரிணிதுவீற்றிருக்குமெழினடுத்தலேசத்திற்புகுந்து
தெருண்மலிபிரமதீர்த்தத்தின்மூழ்கிச்சேவித்துப்பெருமகிழ்சிறந்தான். ()

நாடுகாரோணநாயகனென்றென்பானடுத்தலேச்சுரன்வளித்திசையிற்
கூடுமச்சுதபுட்கரணியென்றுரைக்குக்குலவியவமுதபுட்கரணி
பாடுமூவுலகும்படிந்துய்யவமைத்துப்பண்புறமற்றதின்மூழ்கி
நீடுவெண்ணீறுகண்டிகைபுனைந்தினமலவைந்தெழுத்தெண்ணி. (௧௯)

அன்னபுட்கரணிக்கலங்கழற்றிசையினவிர்நடுத்தலேசத்தின்றென்பா
னன்னர்வண்டளியொன்றியறுபுவிண்டுநாதனென்றுரைத்திடுபெயரின்
மன்னவோரிலிங்கந்தாபித்துநறியமஞ்சனமாதிகள்கொண்டு
பின்னமொன்றில்லாவனபுமேறவொங்கப்பிறங்குநற்பூசனைபுரிவான்.(௨௦)

தானினிதமைந்தவமுதபுட்கரணிதன்னின்முக்காலமும்படிந்து
தேனினிதுயிர்க்குமலர்முதற்பல்வுநதெவ்வியத்தடத்துமஞ்சனமே
நானினிவேறுகவர்தரோனெனநுநயமுறககவர்ந்துபூசிப்பான்
மானினியமருந்தளிவிளக்கென்னமணிகிடந்திமைக்குமார்புடையான். ()

செக்கரஞ்சடையானருட்குறிப்பதிட்டைசிறந்தகாரோணத்தினுற்றிச்
சக்கரப்படையான்பூசனைபுரிவான்றவாதருளபெறுவனவ்வருளே
மிக்கரநாமாயிரும்பினுக்கென்றுவெருவுபுதானவர்கரந்தா
ரக்கரவுணர்நதுமிகமனங்களித்தாரமரர்முன்னுயபல்லோரும். (௨௨)

சூடுவனிருநகைமலருநதன்றலைமேற்சூழுவன்விண்டுநாயகனை
யாடுவனுரோமஞ்சிலிர்த்திடவாடியரகரகரவெனமுழங்கிப்
பாடுவனபல்காற்சூழ்ந்துதாழ்ந்தெழுவன்பரனருள்பெறுவதென்றென்று
வாடுவன்மகிழ்வனென்சொலக்கடவேமாயவன்செய்யுமன்பினையே.(௨௩)

எனைவிடையுருச்செய்தியக்குலைகளைசெய்தெய்குலைதிரிபுரங்குலைய
நனைமலர்க்குழல்செய்தொருபுறத்தமைப்பைநால்வகைச்சத்திகடம்முட்
புனையிழைமுலையோர்சத்தினானலகேளுபொற்பிழந்துயங்குதனன்றேு
வினைமுழுதொழிக்கும்விண்டுநாதத்தின்மேவியபரசிவக்கொழுந்தே(௨௪)

கண்மலர்சாத்தக்கான்மலரணிந்தாய்கடையனேனுரப்புபவீத
மெண்மலர்கிறத்திற்புனைந்தனைமெய்த்தோலியைதரக்கஞ்சுகஞ்செய்தாய்
திண்மலர்வெரிசென்பொருகரங்கொண்டாய்சீரிழந்தயங்குதனன்றோ
விண்மலர்சுரர்சூழ்விண்டுநாதத்துமேவியபரசிவக்கொழுந்தே. (உகு)

அருட்பெருங்கடலேநின்னடியடைந்தேனண்ணலேநின்னடியடைந்தேன்
மருட்பகைதுமித்துவணங்குநர்ப்புரக்குதம்வள்ளலேநின்னடியடைந்தேன்
றெருட்கிடருபவிண்டுநாதத்திற்செம்மையோய்நின்னடியடைந்தே
னிருட்கமிடற்றாய்நின்னடியடைந்தேனென்றுதோத்திரம்பலபுரிந்தான்.

துதியுளமுருகியின்னணம்புரியச்சுந்தரநாயகனிடப
மதிவிசாகத்தினவ்விலிங்கத்தினின்றுமாண்புறவெளிவந்து
பதிபெருவனப்புக்கரசனீயாகும்படிவரங்கொடுத்தனமின்னும்
விதியுறவேண்டும்வரமெவனுரைத்திவிரிதுழாய்க்கண்ணியவென்றான். ()

என்றலும்வணங்கியிவ்விலிங்கத்திலென்றநீபொலிதரல்வேண்டு
நன்றமைதரநானமைத்தநீர்த்தத்தினலமுறத்தோய்ந்துநிற்றொழுவார்
பொன்றலில்வினையும் போக்குதல்வேண்டும் போகமும்பொருந்திடல்வே
ண்டு, மன்றநான்வசித்ததேத்தினெஞ்ஞான்றம் வசிக்கவும்வேண்டுமென்
[றிரந்தான். (உஅ)

மாயவன்மொழிந்தபடியெலாமுதவிமறைந்தனனவ்விலிங்கத்துத்
தூயவனேயனருளியவரத்தாற்சுந்தரராசனென்றொருபேர்
மேயவனாகிமுன்னையிற்சிறந்துவிளங்கினன்றிருநெடுமானன்
காயவனமுகைக்கண்டுவண்கமலையகமகிழ்ந்துறத்தழீஇயினளால். (உக)

அண்ணலெம்பெருமான்பூசைநன்காற்றற் கமைத்ததீர்த்தத்திற்குமேல்பா
லண்ணலம்பொலியமுன்புதானமர்ந்துமாதவம்புரிந்தவத்தேத்தே [ல்
பொண்ணலம்பொலியவாலயமமைத்திட்டொளிர்திருமகள்சிறைக்கலுழ
ண், கண்ணலவிடுவச்சேனருதியருங்கலப்பமேவுவன்சவுந்தரமால். (ஙo)

அனையனைத்தொழுவோர்வைகுந்தமடைவாரழகியவிண்டுநாதனைத்தாழ்
வினையினொல்லாப்போகமுமடைவார்மேதகுமுத்தியும்பெறுவார்
நனைமலர்க்கடுக்கைவிண்டுநாதச்சீர்நவின்றனநலமெலாம்பொருந்துங்
கனையருணாகநாதனொன்றுரைக்குநங்கண்ணுதலார்வரவுரைப்பாம். (ஙக)

விண்டுநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கஅ இ-திருவிருத்தம்-ககஉo.

## நாகநாதப்படலம்.

பொழியருணந்திப்புத்தேள்பொன்னடிக்கமலம்போற்றி
யழிவருந்தவத்தான்மிக்கோனுகியசனற்குமாரன்
பழிதபுநாகநாதர்மான்மியம்பகர்தியென்னக்
கழிமகிழ்சிறப்பவன்னுன்கட்டுரைத்திடலுற்றுனல், (க)

பூதலத்தமர்கின்றூர்வாய்ப்புகழொடும்பெருன்றூடாய
மீதலத்தமர்கின்றூர்வாய்ப்புகழுமிக்கணியாப்பூண்டு
பாதலத்தமர்வோனெல்லாப்பயிற்குமரசுசெய்வோன் ௱
மாதலத்திகவாதயக்கும்வாஞ்சையனுகிவாழ்வான். (௨)

ணமலிமனைவியோடுங்கூடிவாழ்கின்றநாளிற்
புணமலிசேடனென்பான்பற்பனுனென்புழந்த
மணமலிகுதலைச்செவ்வாய்மகவுதோன்றுமையாலே
கணமலிதுயருஞ்சூழ்கிக்கவன்றிதகையாயலுற்றான் (௩)

கொடையுயர்முகமணின்றேற்கொழுமலர்நாற்றமின்றே
லிடைநிசிமதியமின்றேலருந்தவங்கருணையின்றேன்
மிடைகலைஞானமின்றேல்விளங்குறுமறமன்பின்றேற்
கடைபடுதிறமேபோலுமில்லறம் * காலின்றெனனில். (௪)

பண்ணிலாப்பாடல்போலும்பற்றிலாநட்புப்போலும்
பெண்ணிலாச்சயனம்போலும்பெயரிலாவாழ்க்கைபோலு
முண்ணிலாநெய்யிலாமனூட்டுமினனடிசில்போலுங்
கண்ணிலாவதனம்போலுங்கானமுளையிலலாவில்லம். (௫)

என்றுளத்தமையவெண்ணியிருங்கடற்புடவிமேவி
நன்றுநம்பானைப்போறறிநந்தனனடைவனென்று
ருன்றுதலில்லாத்தூயகுணங்கெழுமனைவியோடு
மொன்றுபஃறலையனுயவுரகன்மண்மிசைவந்தானுல். (௬)

வந்தபாப்பரசன்றூயவசிட்டமாமுனிவற்கண்டு
நந்தநான்மகவுவேண்டிநண்ணினனஃதுமேவுஞ்
சந்தமாதவமீதென்றுசாற்றுதியென்றுதாழ்நதா
னந்தமாதவனுமுள்ளத்தாய்ந்தினிதுரைகசலுறறான். (௭)

பரம்பரனிலிங்கபூசைபண்ணலேசிறநதநோன்பா
திரம்புறமகவுநல்குநினைத்தவையனைத்துமேவும்
வரம்பறுமறுமைபபேறுவாய்ப்பதுமேலாமுந்தி
யுரம்படப்பெறலுமநதப்பூசையாலாகவேநதே. (௮)

ஓராயிரங்கமலமேனியொருங்குபூத்திடக்களிப்பார்
பராவொருகமலமேவிப்பணைபுறவாழ்வாருநதி
விராவொருகமலம்பூப்பவிளங்குவார்சடிலமோலி
யராவணிபவனிலிங்கத்தலங்தொருகமலமிட்டார். (௯)

ஆதலாலிலிங்கபூசையனைத்தையுங்கொடுக்கவல்ல
தீதலான்மறைகள்வேறுண்டென்றெடுத்தியம்பாவென்றுங்
காதலாலதனையின்னேகடைப்பிடித்தாற்றினுள்ள
நோதலாற்கவலாயெண்ணைநொடிவனாமுற்றுமென்றான். (௰)

* கால் - சந்ததி.

முன்புநாணினைந்தவாறேமொழிந்தனன்பன்னூற்கேள்வி
வன்புசான்முனிவனென்றுமகிழ்ந்தனனாகர்கோமா
னன்புமேவிலிங்கபூசையாற்றுதற்கிடமீதேயென்
றின்புகூர்கும்பகோணத்திருநகரெய்தினானே. (௧௧)

பொருவருங்கும்பகோணப்பொன்னகர்மரீஇக்கிழக்கோட்டத்
தொருவருமன்பிற்புக்காரொளிர்சிவக்குறியைக்கண்டான்
வெருவருங்களிப்பிற்றாழ்ந்துமேதகுதீர்த்தமூழ்கி
மருவருமலர்முற்கொண்டுமாண்புறப்பூசைசெய்தான். (௧௨)

ஈசனைமடந்தைபாகத்திறைவனையன்பர்மாட்டே
நேசனையொளிர்கீழ்க்கோட்டநிமலனையளக்கவொண்ணாத்
தேசனைச்சிவபிரானைச்சிற்சபையாடுவானைப்
பூசனையிந்தவாறுபுரிந்தனன்சின்னாட்சேடன். (௧௩)

மலவிருடுமித்துநாளும்வழுத்திடுவாரையாளு
நிலவணிசடிலப்பெம்மானெறியினேத்திடுதனக்குப்
பலமெளிதருளிச்செய்யாப்பானமையைநினைந்துவேறு
தலமுறல்கருதிச்சேடன்சண்பகாரணியஞ்சார்ந்தான. (௧௪)

சண்பகவனத்தைமேவித்தற்பரவிலிங்கங்கண்டு
நண்பகமருவவாங்கோர்தீர்த்தத்தினயந்துமூழ்கி
யெண்பகமலர்களாதியாவுநன்கமையக்கொண்டு
பண்பகந்தரித்தாயென்றுபரவினன்பூசித்தானால். (௧௫)

சத்தனையளவாமேன்மைச்சண்பகாடவியனாதி
முத்தனையென்றுமூவாமுதல்வனைக்குன்றாகொங்கை
யத்தனைமூன்றுபத்தோடாறறகும்பபாலானைச்
சுத்தனையிடையறாதுசொன்முறைபூசித்தானங்கே. (௧௬)

பூசையிவ்வாறுசெய்யும்புழையெயிற்றரவவேந்த
னாசையுள்ளுணர்ந்துமென்மையருள்செய்யாத்திறமுணர்ந்தா
னீசையோர்பாகத்தேமமானருள்விளைந்தெய்தலெண்ணிப்
பாசையோவாதகாச்சூழ்பாம்புரமணுகினானே. (௧௭

காலெலாங்கமலக்குப்பைகளமெலாமுயர்ந்தநெற்போர்
மேலெலாங்கமஞ்சூறகொண்டல்வெளியெலாங்கருப்பங்காடு
சாலெலாம்பவளமுத்தந்தடமெலாம்பொழிபாண்மேதி
பாலெலாஞ்செம்பொனுயபாம்புரக்கோயில்புக்கான். (௧௮)

எண்ணியவனைத்துநல்குமிலிங்கமொன்றங்குக்கண்டு
புண்ணியதீர்த்தமாடிப்பொலிமலராதிகொண்டு
கண்ணியவன்புபொங்கக்கசிந்துபூசித்தான்சின்னா
ளண்ணியவானோராதியாவருமதிசயித்தார். (௧௯)

புள்ளைமலர்நீர்வாவிப்பாம்புரம்பெயர்ந்திவரூம்
வள்ளலையருச்சித்தேத்தும்வாளரக்குலத்துவேந்தன்
விள்ளலையமையாவாங்கும்விளைந்தருளாமைமெயண்ணிக்
கள்ளலைமலர்ப்புன்னாகக்காரோணங்கருதிவந்தான். (௨0)

எறிதிரைக்கடனுவாய்நின்றிழியும் * புன்னாகமெங்கும்
வெறிமணங்கமழநாளும்வீசுபுன்னாகமெங்கும்
செறிமனையெனும்பேர்பூண்டுதிருவம் ‡ புன்னாகமெங்கு
மறிவுமிக்குறலாலண்ணலருள் 0 வம்புன்னாகமெங்கும். (௨௧)

ஆரணவோதையெங்குமலங்கலங்கோதையெங்கும்
பூரணகும்பமெங்கும்பொன்மணித்தம்பமெங்குங்
காரணமாடமெங்குங்காமருகூடமெங்கு
மேரணமனறமெங்குமிலங்குசெயகுன்றமெங்கும். (௨௨)

இன்னபல்வளமுநோக்கிக்கேத்திரராசமென்னு
மன்னகரிதுபோலெங்குநாங்கண்டதில்லையென்று
பன்னகவேந்தனுள்ளத்தளக்கொணுமகிழ்ச்சிபம்ப
முன்னருந்தேவதீர்த்தமுதலியவனைத்துந்தோய்ந்து. (௨௩)

இழிதொழிலொருப்பாடுற்றவேமையுமோர்பொருளாவெண்ணி
வழிவழியடிமைகொண்டுவாழ்விக்குங்கருணைச்செல்வி
பழிதபுகருநதடங்கட்பாவையோர்பாகத்தெம்மான்
செழிபெருங்கோயில்புகுந்துத்திருநதுநெஞ்சுருகப்போற்றி. (௨௪)

ஆயவான்சுதைக்கடேசந்துகளில்பச்சிமகாரோண
மாயதோரிரதிரோசமகத்தீசநடுத்தலேசம்
பாயசீர்விண்டுவீசம்பராய்த்தொழுதொருகாரோண
மேயமேற்றிசையினுள்ளசறுவதீர்த்தத்தின்மேல்பான். (௨௫)

சிற்பநூல்விதிவழாதுசிறகருமாலயமொன்றுாற்றிப்
பொறபவோரிலிங்கந்தாபித்ததற்குத்தன்பெயர்புனைந்து
கற்பநீறணிவான்சொற்றவிதிகடைப்பிடித்துப்பூசை
யற்பமேவாதுசெய்தானாயிரம்பணங்கொள்சேடன். (௨௬)

காலையிற்குடந்தைமேயகடவுளைக்கருதுமுச்சி
வேலையிற்சண்பகக்காட்டண்ணலைவிருப்பங்கூரு
மாலையிற்பாம்புரத்துவள்ளலையத்தயாமஞ்
சோலையிற்பொலிகாரோணச்சோதியைப்பூசைசெய்வான். (௨௭)

பூசையிவ்வாறுசெய்துவருமொருபுயங்கவேந்தற்
கீசைபங்குடையவெம்மானின்னருள்செய்தாளுக
வோசைகொளனையான்பன்னியுதரத்துக்கருப்பமுற்று
மாசைகொளளையான்செய்தாளுாருளென்றுசேடன். (௨௮)

---

* புனனாகம் - சிறருனை. ‡ புன்னாகம்-புல்லியமலை, 0 வம்புன்னாகம்
வம்புடன்ஆகம் - எனப்பிரித்து - மணத்தைக்கருத மனமெனக்கொள்க.

சொற்றநாற்றலத்துங்காலைதொடங்கியோர்காற்காலத்து
மற்றமில்பூசையாற்றியன்பதிகரிப்பத்தாழ்ந்து
செற்றமில்விடையும்பெற்றுத்திகழ்மனைக்கிழத்தியோடுங்
கற்றவர்புகழுஞ்சேடன்கருதுதன்னிருக்கைபுக்கான். (௨௯)

இங்களங்கொருபான்செல்லத்திருமகடனையுயிர்த்தாங்
கங்களவில்லாமாமையமைதருமொருபெண்பெற்றுண்
மங்களம்பொலியுந்தேவியதுகண்டுமெகிழ்ச்சிபூத்தான்
கங்களாயிரத்தானெல்லாக்கடும்புமிக்குவந்தமாதோ. (௩௦)

முலையொருமூன்றுமார்பின்முகிழ்த்ததுகண்டுதேவி
யலைபெருந்துயரத்தாழ்ந்தாளதுசொலக்கேட்டசேடன்
மலைவருமமுதமுண்டார்நஞ்சுண்டுமாழாநதென்னத்
தொலைவருங்கவலையாயதொடுகடறகிடங்கின்வீழ்நதான். (௩௧)

இருவருநெஞ்சமாழாந்தின்னணங்கவலுங்காலைப்
பொருவருங்காரோணத்தெம்புண்ணியரருளினாலே
பருவரும்பயிர்ப்பால்வீழும்பசுமழைத்தாரைபோல
வெருவருமனையார்தேறவிளைந்ததாகாயவாக்கு. (௩௨)

முலையொருமூன்றுதாங்குமுற்றிழைதனைச்சின்னாளி
லலைகடற்கரைக்காரோணத்தண்ணலாரொருபான்மேய
கலையுணர்வரியமேன்மைக்கருந்தடங்கண்ணிபாத
நிலையுறப்பூசைசெய்துநேர்தொழுதிறைஞ்சச்செய்தால். (௩௩)

அனையமாதேவிசெய்யுமாருணிரம்பப்பெற்றுத்
தனைநிகர்பெருமைவாய்ந்தசறுவபுட்கரணிப்பாங்கர்ப்
புனையிழையுலவுங்காலைப்புரவலனொருவன்றோன்று
நினைதருமலற்காண்போதேநிறத்திலொன்றழுந்தாநிற்கும். (௩௪)

பின்னர்மற்றவனேவந்துபிறங்குறமணப்பானென்று
நன்னலம்பயப்பக்கூறநாகர்கோன்மனைவியோடும்
பன்னருமகிழ்ச்சியுற்றான்பவளமென்கொடியோதெய்வப்
பொன்னவிர்கொம்போவென்னவளர்ந்தனள்புதல்வியம்மா. (௩௫)

பிறையெனவளராநின்றபெண்ணணங்கரசைநோக்கி
நிறைமகிழ்பூத்தசேடனிகழ்ந்தமையனைத்துங்கூறி
முறைபணிபுரியத்தக்கமுற்றிழைமடவாரோடுங்
கறையிலப்புதல்விதன்னைக்காரோணநகரத்துய்த்தான். (௩௬)

முன்னுகாரோணத்துற்றமும்முலையொருத்தியாங்கு
மன்னுபஃறீர்த்தமெல்லாமாண்புறத்தோய்ந்துதோய்ந்து
பன்னுகாரோணநாதர்பைம்பொனாலயம்புகுந்து
மன்னுவான்கருந்தடங்கண்மாதேவிமுன்னணுற்றாள். (௩௭)

தழுவிலாத்தயிலமாதிரயக்கும்பாலையுங்கொண்டாட்டி
மறுவில்சுத்தோதநறுதிமாண்புசால்மலைமூட்டித்
தெறுகதிரவனுநாணுந்தீபங்கள்பலவுங்காட்டி
யுறுமகிழ்சிறப்பப்போற்றியுருகுபுபரசலுற்றாள். (௧௮)

கருமுகில்விளர்க்குமாறுகறுத்தறலெய்த்தெதிர்ந்தாரெஞ்ச
மருவிருளனைத்தும்வாரிவாய்ப்பெய்யுங்கூந்தல்போற்றி
யொருகருங்கடலிற்பணுதயஞ்செய்கதிரோன்மானப்
பருமணித்தகடுமுன்றுப்பதிபலவணியும்போற்றி. (௧௯)

மூலகாரணனுமெந்தைமுடிப்பிறையடியிற்றழு
ஞாலமின்பமையச்சற்றேசுளிக்குநனனெற்றிபோற்றி
யாலமுண்டவன்றன்கையாலமைதரப்புனைதல்செய்த
கோலமுண்டமையும்பொட்டுங்குலவிலம்பகமும்போற்றி. (௨௦)

வரிசிலைமதனைச்செற்றார்மனமிருந்தாடாநிற்கு
மெரிமணியம்பொனூசலெனப்பொலிகாதுபோற்றி
விரிகதிர்மதிபோல்வேணிமிசைக்கொளப்பதிக்கோதென்று
பரிபுறவுரைத்துமேவும்படிமிளிர்தோடுபோற்றி. (௨௧)

ஒருவரைக்குழையக்கோட்டியுரகநாண்பொருந்தக்கூட்டிக்
கருதிறப்பகழிபூட்டிக்கடும்புரமவியமாட்டிப
பெருவலிதோற்றிநின்றபிரான்முடிகோட்டியோடு
பொருவறக்கோட்டாநி[illegible]ம்வெ.ருகி[illegible]ருவம்போற்றி. (௨௨)

குழைகிழிதரகடந்துகுமிழமிசைமறிந்துதொடர்
பிழைசிறுமையுநோக்காதுபிறழ்கருங்கடங்கண்போற்றி
மழைபொருகளத்தார்தீட்டுமையலங்காரம்போற்றி
விழைகனென்பெயருநேகற்பமிக்கமார்கருணை[illegible]ற்றி, (௨௩)

விழியனியொன்றோடொன்றுசமர்செயாவிதநல்கிட்ட
பழியில்சண்பகவரும்பின்புடியெனுநாசிபோற்றி
செழிமுகப்பதுமத்தோனறுந்துயவொளிமுத்தமென்னக்
கொழிவனப்பொழுகக்கோத்துக்குலவுவெண்டாளம்போற்றி. (௨௪)

பரம்பரனழகுபார்க்கப்பதித்தகண்ணாடிபோலு
நிரம்பியவனப்புவாய்ந்துநிலவியகபோலம்போற்றி
வரம்பெறுபவளத்தண்டமாண்புசாலதரம்போற்றி
இரம்பெறவசற்குநாப்பட்செறியுமூன்றிரேகைபோற்றி. (௨௫)

நில்வுவண்கபோலமென்னுநீர்நிலைநாப்பட்பூத்த
குலவுசெங்கழுநீரென்னக்கோலமார்செவ்வாய்போற்றி
கலவுமம்மலருட்பூத்தகாமருதளவம்போல
வலவுபேரழகுவாய்ப்புற்றெளிகிளர்வெண்பல்போற்றி. (௨௬)

செங்கழுநீருட்கொண்டசிறுவிலக்கிரணமென்னச்
சங்கரன்மனமுருக்குந்தகையவெண்முறுவல்போற்றி
யங்கதினறுந்தேனென்னவமைதருமின்சொல்போற்றி
பங்கமொன்றேனுமின்றிப்பண்புசால்சுபுகம்போற்றி. (௪௭)

இருவிழியென்னும்பொன்னுமிரசிதம்புனைமெய்மின்னு
மருவிநீக்காமலென்றும்வாழ்பசுங்கமலமாகிய
பொருவிலாணிதயவாவிபூத்திடுபூவுமாகி
யொருவுருவனப்புவாய்ப்புற்றொளிர்தருவதனம்போற்றி. (௪௮)

பதுமநன்னிதியமென்னப்பகர்திருமுகத்தின்கீழாற்
புதுமைகொடெய்வச்சங்கநிதியமும்பொருந்தியாங்குக்
கதுவெழிற்கண்டம்போற்றிகணவனஞ்சருந்திறலுஞ்
சதுமுகன்முன்னோர்வீந்தாலுந்தழையுமங்கலநாண்போற்றி. (௪௯)

முலையெனுங்குன்றமேலான்முளைத்தெழுபசுவேயென்னக்
கலையொருபுறத்திற்போர்த்தநக்கவின்பொழிதருதோள்போற்றி
தலையமையணையகுன்றஞ்சார்நறுநித்தனவேயென்ன
விலையில்பன்மணிகால்யாத்துமிளிர்தொடியாதிபோற்றி. (௫௰)

சிவபரன்றோடநீஇவெள்வளையொலிசிறப்பச்செய்யு
மவமில்யாழ்த்தண்டமேயென்றறைதருமுன்கைபோற்றி
குவலயமாதிகாணுங்குறியிலார்க்கஃதமைத்த
நவவளைகடகஞ்செம்பொனயந்தருடகங்கள்போற்றி. (௫௧)

நரம்பெலும்புரோமந்தோன்றாநலங்கிளர்புறங்கைபோற்றி
நிரம்புவமேயங்காந்தளெனநிலவகங்கைபோற்றி
பரம்புநீர்க்களிறுவட்கும்பலவிரல்போற்றிகிள்ளை
வரம்பெய்மூக்குகிர்கள்போற்றிமாமணியாழிபோற்றி. (௫௨)

ஒருமலைகுழைத்தவீரனுரங்குழைத்தணைந்துவிம்மு
மிருமுலைபோற்றிமேலிட்டெழில்செயுஞ்சுணங்குபோற்றி
பொருமலிற்புணர்வார்போற்றிபுனைமணிக்கோவைபோற்றி
யருமைசாலுண்மைஞானமாகியவருட்பால்போற்றி. (௫௩)

புவனங்களனைத்தும்வைகப்பொறுத்தசிற்றுதரம்போற்றி
தவலினறிமூவரைத்தநதமைதெரித்தாங்குமூன்று
நவமொன்றுமடிப்புப்போற்றிநாரந்திற்சுழியும்வட்கத்
திவள்கின்றவுந்திபோற்றிசெழுமயிரொழுங்குபோற்றி. (௫௪)

அறிவதற்கரியதாயவண்ணறனுண்மைபோல
வறிவதற்கரியதாகியமைந்தநுண்மருங்குல்போற்றி
செறிமணிக்கடலிற்றோற்றஞ்செய்யிளங்கதிர்சமழ்க்கச்
செறிதருசெம்பட்டோடுதிகழுமொட்டியாணம்போற்றி. (௫௫)

சாயலர்தோகைக்கச்சஞ்சற்றுங்கொள்ளாதபாம்பாய்
மேயபேரல்குல்போற்றிமேகலையாதிபோற்றி
யாயமென்பிடியின்கையுமரம்பையுமிணையொவ்வாமற்
றூயநற்கரபம்போன்றுதுளும்பெழிற்குறங்குபோற்றி. (௫௬)

அலவனொள்வரால்யாமையஞ்சியமுத்தாள்போற்றி
நலனுயர்சிறுதராசினையம்படுபோடுபோற்றி
பலவரிசனமுளைத்தபடியெனும்விரல்கள்போற்றி
கலவுவெண்மதிபத்தாகக்கடைந்தனநகங்கள்போற்றி. (௫௭)

நல்லவருளம்போனுயேனுள்ளமுநயந்துநீங்காப்
பல்லவமருட்டாநின்றபங்கயபாதம்போற்றி
சொல்லருமறைகளென்னச்சூழ்ந்தபொற்சிலம்புதண்டை
வில்லமைபாதசாலம்விரலணியாதிபோற்றி. (௫௮)

மயிலிளஞ்சாயல்போற்றிமானதவாவிபூடு
பயிலிளவன்னமெனனும்படியியங்கியக்கம்போற்றி
வெயிலவிரிகோடைநாளில்வெதும்பியபயிர்க்குமுகக்க
குயின்முகிலெனப்பசந்தகோமளமேனிபோற்றி. (௫௯)

பொருள்பெறக்கருதுவார்தம்புநதியிற்சிலநதாய்கல்வி
யருள்பெறச்சிந்திப்பார்தமகத்துறவிளர்த்தாய்தெவ்வ
ரிருடபமுயலுவார்தமிதயத்துக்கறுத்தாயமூல
மருடபுங்காரோணத்துவயங்குமாதேவிபோற்றி. (௬௰)

பளாயாதிசத்தியாகிப்படைப்பாதிபுரிவாய்போற்றி
தளாயாதியளைத்துமாகித்தலைலறநிறைந்தாய்போற்றி
யுளாயாதிமறைகட்கெட்டாவொருபெருமுதல்விபோற்றி
களாயாதிபுராணர்பாகக்காரோணவிமலைபோற்றி. (௬௧)

பிறைமுடியவன்றுயானுய்பின்பிறந்தவளுமானுய்
முறைமையின்மகளுமானுய்முயங்கிடுமனையுமானுய்
மறைமுதலனைத்துந்தேறுவளங்கெழுசெல்விபோற்றி
கறைதபுதிருக்காரோணக்கருநதடங்கணுய்போற்றி. (௬௨)

என்றுரைநந்தருகிக்கண்ணீரிழிதரத்தாழ்ந்துதாழ்ந்து
சென்றுதன்னிருக்கைமேவிச்சிநதையிற்குறிததிருப்பா
ளொன்றுபன்னுளிவ்வாறேபூசனையுஞற்றுவாள்பா
னன்றுபேரருள்சுரந்தாணங்குலதெய்வமானுள். (௬௩)

அவாமுதலறுத்துளார்க்கேயமைநருந்தடங்கணம்மை
தவாவருளொருங்குபெற்றுள்சறுவபுட்கரணிப்பாங்க
ருவாமதியுடுக்கணத்தோடுலாவியகாட்சிபோலோர்
இவுசவிகுளையர்தம்மோடுமுலாவினுள்சேடன்செல்வி. (௬௪)

படுகடன்வெட்டோன்றும்பரிதிதன்குலத்துதித்தோன்
வடுவறுகலைகளெல்லாமயக்கறத்தெளிந்தவல்லா
னுடுபதிக்குடையினுனுமுட்குறும்வனப்பின்மிக்கான்
ஒருங்கெழற்காலான்சாலிசுகனெனுநாமவேந்தன். (௬௫)

மேயகாரோணம்புக்குவிண்ணவர்தீர்த்தமாடிப்
பாயகாரோணநாதன்பங்கயப்பாதம்போற்றி
நேயமார்துணைவரோடுசிலவியசறுவதீர்த்தத்
தாயவான்கரையைநாடியடைந்தனனங்குகண்டாள். (௬௬)

காண்டலுமுலையோர்மூன்றுட்கரந்தநடுவெனுள்ள
தாண்டகையிலையன்மண்மேலாயகந்தருவன்கொல்லோ
மூண்டவிற்காமன்கொல்லோமுதிரொழிற்குமரன்கொல்லோ
வீண்டடைந்தவன்யாரென்றுவேந்திழைதிகைத்துநின்றாள். (௬௭)

முலையொன்றுமறையக்கண்டமுற்றிழைமடவார்யாருந்
தலையொன்றுபெருமைவாய்ந்ததடாதகைபோன்றாளின்ன
ணிலையொன்றுமறியேமென்றுநெடிதிறும்பூதுமேவிக்
கலையொன்றுமுதல்விபூசைப்பயனுளங்கருதிநின்றார். (௬௮)

தந்தையாகாயவாணிசாற்றியபடியனைத்து
முந்தைநாளுரைத்தவாறுமுலையொன்றுமறைந்தவாறு
நிந்தையில்வனப்புவாய்ந்தபுரவலனிறகுமாறுஞ்
சிந்தையினுணர்ந்தாணாணஞ்செறிதரநங்கைநின்றாள். (௬௯)

மருவலருடலம்போழ்ந்துவார்குடர்மாலைசூடி
வெருவரக்கொழுவேலோடருள்விடக்குவாய்குதட்டிப்பின்னர்
பெருகுநெய்த்தோருமாந்திப்பெரும்பசியடங்குறுமே
யிருகடைவாயுநக்குமெரிதவழிலைவேல்வேந்தன. (௭௦)

விதிகடைக்கூட்டலாலேமிளிர்தருபொலங்கொம்பொன்று
மதியமொன்றுறமுன்றுங்கிமழைமுகில்பின்னொன்றேந்திப்
பொதிசுவையமுதகும்பம்பொலிதரவிரண்டுகொண்டு
துதிசெயநின்றாலென்னநிற்குந்தோகையைக்கண்ணுற்றான். (௭௧)

காதலங்கடலுண்டாக்குங்காரிகைபாதந்தோய
வாதலங்கமையுமாநோன்பாற்றியதரவவேந்தன்
பாதலங்கொல்லோமேலாப்பகர்தலங்கொல்லோவிந்தப்
பூதலங்கொல்லோவென்றுப்புந்தியுளையங்கொண்டான். (௭௨)

அணிமலர்வாடிற்றில்லைகண்ணிமையாடிற்றில்லை
மணிமுகமதியகத்துவருவெயர்கூடிற்றில்லை
தணிவிலிவ்வேறுவாலித்தவாமகளல்லளென்று
கணிபுனைதடந்தோளண்ணல்கருத்துறத்தெளிந்தானன்றே. (௭௩)

இறையவன்முகத்தாரட்டயிரண்டனுளொன்றுவெப்ப
நிறைதரச்செயுமற்றொன்றுதட்பமேநிகழ்த்தாநிற்கு
மறைவிழியிரண்டுங்கூடியன்னவையியற்றுமென்று
குறையறுகாதல்பொங்கக்குறிப்பறிந்தனன்கோமானே. (எச)

இறையிலைமதிக்குங்காலையெழுந்தவெங்காமவேட்கைப்
பொறையுடையவளாயீங்குப்புகுந்தமைதந்தைக்கோத
நறைமலர்க்குழலாரோடுநாகர்கோன்மகண்மறைந்தாண்
மறைதலுமதிமாழாந்துமன்னனுமிருக்கைபுக்கான். (எரு)

துங்கமிருந்தவொருசாலீசுகனென்பவனங்குலத்துதித்தான்
சங்கநிகருங்களத்தொருபெண்டநதகாமநதலைக்கொண்டா
னங்கமுழுதும்வெப்படைவானதுகாணேனென்றகல்வான்போற்
பங்கமருவுமேல்கடற்போய்ப்படிநதான்பரியேழுடைத்தேரோன். (எகு)

பரந்தகாமத்தழற்கடலுட்படிந்துவருந்திவாழ்வதினுஞ்
சுரந்தகொடுநதீப்பெருங்கடலுட்டுளைநதுவாழ்தலமையுமென
விரந்தசுடுவெநதழலெழுப்பிநேரோமுழுகிக்காட்டலபொருஉங்
கரநதவெதுப்பினினன்செவ்வானெழுப்பிக்கடுகெப்புகுநததே. (எஎ)

கொழுநர்பிரிவோராறுளதுகுறித்தபோதுமனங்கலங்கும்
வழுவில்குலமங்கையர்மனமுமவண்டாமரைபபூக்களுமொத்த
பழுதிலவர்தங்குழலவிழ்ந்துபடியிற்படிந்துகிடப்பதெனக்
கழுதுமுறங்குமிருட்டிரண்மண்கருமபொன்னிறமெனறிடத்தோய்ந்த. ()

பட்டநிறைபுள்ளொலியடங்கப்பள்ளிக்கணக்கர்வாயடங்கத்
தொட்டதொழிலிற்குறைகிடப்பதொக்கபறவைகுடம்பைபுக
விட்டமருவுபிணுததழுவியெல்லாவிலங்குஞ்சேக்கைபுகப்
பெட்டமதவேடணநதாருட்பிறங்கிப்புகலல்லிறுத்தன்றே. (எகூ)

செந்தாமரைகண்முகமலரத்தேரிற்றோன்றுஞ்செங்கதிரா
நநதாமேலைக்கடலூரகநடுங்கப்பிடித்துவிழுங்குதலு
மந்தாரணியினுயிரனைத்துமநதகாரபபுனல்படிந்த
சந்தாபக்கார்கோட்குளித்தான்சாலீசுகனென்றிடுமிறைவன். (அ0)

கூகைகளிப்பக்கொடிகவலக்கூட்டங்குலைதலாற்சிறிது
மோகைதுளும்பாகேமிப்புளுணவுகருதியுழிதரமிக்
காகையமைந்தவிருளிரியவாங்காங்கெடுத்தார்பல்விளக்கம்
வாகையளாயனுவளகத்தமளிசேர்ந்துளமாழாந்துளைப்பான். (அக)

சறுவதீர்த்தத்தடங்கரையிற்சார்ந்தகாலையினிலவின்
முறுவல்பூத்தபொற்கொம்புமுன்னின்றொளித்ததெங்கென்று
மறுவில்காட்சியுற்றுடனேமறைந்துபோயகாரணத்தாற்
பெரும்தொன்றிலொருமின்னற்கொடியோவென்றுபேசுமாள். (அஉ)

பொன்னங்கொடிபோலெதிர்நின்றுபோனாளாம்பாற்றுணங்கறலென்
முன்னம்பரந்துபுவனமெலாமுற்றியதுவேறிலையென்னு
மன்னம்பொருவுநடையார்மெய்யமைந்தவொளிகண்டுளங்கூசி
யென்னங்குலத்துமுதன்மறைந்ததியல்பாய்மறைந்ததிலையென்னும். (௮௩)

முத்தம்பொருவுமுறுவலெனுமுறுவல்பொருவுமுத்தமெனும்
வித்தம்பொருவுமேனியெனுமேனிபொருவும்வித்தமெனு
மத்தம்பொருவுங்காந்தளெனுங்காந்தள்பொருவுமத்தமென்றன்
சித்தம்பொருவுமருங்குலெனுமருங்குல்பொருஉமென்சித்தமெனும். (௮௪)

கூற்றமிரண்டுண்டெனில்விழிக்குக்கூறலாகுமுவமையெனு ம
மாற்றமுணரோமாறூலும்வடித்ததேனினினிக்குமெனு
நாற்றங்கமழுந்திருமேனிநலந்தையாவர்புகழ்வரெனு
மேற்றமெனக்குமுண்டாகுமினியோர்காற்கண்ணுறினென்னும். (௮௫)

ஒழியாவமுதகடமிரண்டுமுற்றூலுய்யலாமென்னுங்
கழியாவெப்பமிரண்டாயகதலிவருடக்கழியுமெனும்
பழியாவெனதுவிறன்மடங்கல்பாறிற்றெருமாறலென்னு
மழியாவாசைநோய்க்குமருந்தகிலபுவனத்தினுமிலையால். (௮௬)

என்றுயிசற்றும்பொழுதாழியிளையுமோதைசெவிமடுத்தான்
கன்றுகனறேப்சலாவையிருகாதூட்புகுத்தாரெவரென்பா
னன்றுமுனிவன்குடிக்கவிறலழிந்தாயமரர்கலக்குதலால்
வென்றுமினிரும்பொருளனைத்துமிழந்தும்விம்மயினாகின்றாய். (௮௭)

நின்னையமைத்தோரெங்கள்குலநிருபராவும்போதாது
பின்னையளவாப்புனிதமுறப்பெருவானதியைமண்ணிழித்துக்
கொன்னைமருவக்கலப்பித்தார்கூறுமிவையுட்குறியாயா
யென்னைவருத்தியென்பெறுவாயென்றுபெருவாரிமையுமுனிந்தான். (௮௮)

ஆயபொழுதாசந்தனக்காட்டளைந்துபொதியாசலநின்று
மேயகுளிர்வாவியினறும்பூவினைதோய்ந்தெழுந்துகள்ளுண்டு
சாயவருவார்திறமென்னத்தடஞ்சாளரம்புக்குலவியது
பாயவிளங்காலதுகண்டுபதைத்தானின்னபகருவான். (௮௯)

கொல்லவெழுவெம்புலிபோன்றகொடியமந்தமாருதமே
நல்லதமிழினுடன்பிறந்தாய்நதுகண்ணேட்டஞ்சற்றுமிலாய்
சொல்லவினியவமுதினொருங்தோற்றமுடையதானாலும்
வல்லவிடங்கொல்லாதொழி[illegible]டோவினையவழங்கலெவன். (௯0)

உற்றபொதியவரையென்னுமொருபாம்புயிர்த்தவெவ்வுயிர்ப்பிற்
செற்றமந்தமாருதமேசெறிந்தசாந்தமுனிவர்குழாம்
பற்றவமர்ந்தமருவிடத்துப்பயின்றுஞ்சாந்தஞ்சிறிதுமிலாய்
பொற்றநறுநீர்க்கிடந்தாலுங்கிடையுளீரம்பொருந்தாதே. (௯௧)

இந்தவண்ணஞ்சிறுகாலோடெதிர்ந்துசினந்துபிணங்குங்காற்
சந்தநறியதேமாவின்றலையிற்குயிலோர்காற்கூவ
வந்தமுழக்கங்குயின்முழக்கினைரசர்கோணஞ்செவிவெதுப்ப
வெந்தவிரும்புபுண்ணுணழற்சவிதம்போற்கனன்றுவிளம்புவான். (௧௨)

பூவிற்பொலியுந்திருமேனிபொன்னிற்பொலிவாண்மொழிக்குடைந்து
மாவிற்கரந்தகருங்குயிலேவாளாவின்றுயாய்திறப்பாய்
நாவிற்சிறந்தவல்லாமுதலொருமாத்திரைநாட்டாதுனைச்சொல்
பாவிற்கியையக்களகண்டமென்றார்கொடுமைபார்த்தன்றே. (௧௩)

இனையவிதமாங்குயிலைவெறுத்தினையுங்காலைநல்லாரு
ளனையதடத்துளரக்காம்பலரும்பரனைத்துமுறுக்குடைய
நினையவரியவிண்மீனுநிரம்புமகிழ்ச்சிதலைக்கொள்ளத்
துனையவொருபுள்ளுணன்முயலத்தூயமதியந்தோன்றியதால். (௧௪)

ஆயதேவதீர்த்தத்துத்தொக்கபலவொண்மலர்நாப்ப
ணாயவிண்ணோர்வாயூறவருளினெழுந்தசுதைக்கடம்போற்
பாயநெடியவானத்திற்பரந்துசெறிதாரகைநாப்பண்
மேயசகோரம்வாயூறவெழுந்ததொருவெண்டிங்களே. (௧௫)

ஊழிமுதல்வன்வெள்ளியநீறொருங்குபரந்தகாட்சியெனத்
தாழியமைந்தபால்பொங்கிவழியாநின்றதன்மையென
வாழியுதித்தவெண்டிங்கட்கிரணம்பரந்துவழிந்தனவா
லாழியரசனதுகண்டானழன்றுபுகலத்தொடங்கினான். (௧௬)

நல்லாவுதித்தபாற்கடலுணயக்குமமுதத்தொடுபிறந்தாய்
சொல்லாநினறவமார்வயிற்றெழுந்தபசியுந்தொலைத்திடுவாய்
பொல்லாவிருளின்பொம்மலறப்பொலியுங்கிரணம்வீசிடுவா
யெல்லாநயமுமுடையாய்மற்றென்னைவருத்தலென்றிங்காள் (௧௭)

கஞ்சமனைத்துங்குவித்திடுவாய்கழுநீரனைத்தும்விரித்திடுவாய்
நஞ்சநிகர்ப்பாய்தணந்தாருக்கமுதனையப்பாய்மணந்தார்க்குத்
தஞ்சமனைவியருட்சிலரைவெறுப்பாய்சிலரைச்சார்குவாய்
மஞ்சநடுவின்மையினன்றேவளர்வாய்தேய்வாயாயினாய். (௧௮)

மறைமுற்றுணர்ந்துசிருட்டிபுரிமராளமுயன்றுங்காணரிய
நிறைவிற்பொலியுமுடியமர்வாய்நிலத்துளுயர்ந்தோர்ச்சார்ந்தவருங்
குறைவிற்படுமோர்தொழிலியற்றார்குறியொட்புரவாற்றுவருணர்ந்துங்
கறையிற்றவிராயிஃதியற்றல்கடனேமடனேயாமதியே. (௧௯)

என்றுமதியைமுனிதருகாலெழுந்துகருப்புச்சிலைகோட்டித்
துன்றுசுருப்புநாண்பூட்டித்தோலாக்குணத்தினொலிகாட்டி
யன்றுமலர்கள்பலகூட்டியனங்கனியுய்த்திடுவதுகண்
டின்றுசெயலின்பிவன்செயலுக்கென்றுவெதும்பியிவையிசைப்பான். ()

வேறு.

ஒலிகடலுலகின்கண்ணேயொள்ளறிவுடையார்தம்மின்
வலியர்மேற்செல்லுங்காற்றுமாவதுமனத்தினெண்ணி
மெலியர்மேற்செல்லார்முக்கண்விமலன்மேற்செல்லாதென்பாற்
பொலிதரப்புகுந்தாய்வேணின்வீரந்தான்புகலற்பாற்றே. (௧௦௧)

கழைகுழைத்தளிநாண்பூட்டிக்கணையெனச்சிலபூக்கூட்டி
விழைசெருப்புரிவாய்வெற்பும்வெந்நிடும்வலியாண்மிக்க
குழைசிலைவாங்கிப்பல்லகொடுங்கணைதொடுக்கவல்லே
லுழையருவமைந்தாயீதுநோக்கியோறுவதிவேளே. (௧௦௨)

இருந்தவமுனூற்றியீன்றவிருமுதுகுரவர்மாட்டும்
பொருந்தவெம்பகழிதூண்டிப்புல்லியகாமமேற்றும்
பெருந்தகைநினக்கியாரூர்பேரமாபுரிவாரதம்முட்
டிருந்தனன்கெதிருறுருஞ்சீர்மையிற்சிறந்தாரன்றே. (௧௦௩)

ஒருகவியெய்யுங்காலத்தொளித்துநின்றெய்தாறுந்தை
வருபழிநோக்காயமீயுமறைந்துநின்றெனையெய்வாய்
பொருதொழில்வன்மையெய்யும்புன்றொழிற்கிராதன்போன்று
மிருநிலத்தனையுந்தேவனென்மருந்திறந்துளாரோ. (௧௦௪)

என்றுவெய்துயிர்க்குங்காலையிலங்குநங்குலத்துதித்தான்
கன்றுதலொழிப்பேனென்றுகடிகவர்ந்தெழுவான்போல
வொன்றுபல்விளக்கமெல்லாமொளியிழந்தகலக்கீழைக்
குன்றினின்றுதயஞ்செய்தானகுலவெழுபரித்தேரானே. (௧௦௫)

பரசிவந்தோன்றலேம்படுமலவிருள்கெட்டாங்கு
வரமிகுபரிதிதோன்றமாய்ந்ததாலிருளின்பொம்மல்
விரவுபுன்றெய்வமெல்லாம்வீறுதேய்ந்தொளித்தன்மானக்
கரவறப்பயில்வீபத்தாதியசுடர்கழிந்தவன்றே. (௧௦௬)

அருமறையொலியெழுந்தவந்தணரிருக்கையெங்கும்
கருவிலங்கொலியெழுந்ததருச்செறிகானமெங்கு
மொருவில்புள்ளொலியெழுந்தவோடைநீர்வாவியெங்கும்
பெருகுசங்கொலியெழுந்தபிரானமர்தளிகளெங்கும். (௧௦௭)

அரவின்வாய்வீடுபெற்றவண்ணலம்பரிதிபோல
விரவின்வாய்வீடுபெற்றவிலங்கிலையலங்கல்வேலான்
புரவின்வாய்த்தேவதீர்த்தம்புகுந்தினிதாடியாரும்
பரவின்வாய்திருக்காரோணப்பெருந்தளிபண்பிற்புக்கான். (௧௦௮)

கருந்தடங்கண்ணியோடுகலந்தினிதமரநின்ற
பெருந்தகைபாதம்போற்றிப்பேணுபுநின்றானாகத்
திருந்தமுன்னிற்கின்றானைத்தெய்வநாயகனேர்நோக்கி
வருந்தனஞ்சவுந்தரபேர்மாவிடஞ்சேறியென்றான். (௧௦௯)

தனையடைந்தவரையாருந்தாழ்தரவுயர்த்தாநின்ற
தனைநிகர்கருணைமூர்த்திசாற்றியதுணர்ந்துகஞ்சா
தனைபுணர்மார்பனுயசவுந்தரமாலைச்சார்ந்தான்
றனையரும்புகழ்சால்சாலீசுகனெனுநகராயாள்வேந்தன். (கக௦)

மந்தாரம்பொருவுதோளான்மாமணிக்கோயின்மேவிச்
சுந்தரராசமாலைத்தொழுதெதிர்நிற்றலோடு
மந்தரநாடருணையவமுதுமுன்னளித்ததெய்வக்
கந்தரமேனிமாலக்கரபலனுமுன்னர்தோன்றி. (ககக)

புரவலவஞ்சேலாதிபுராணாகருவடபாலுள்ள
[illegible]னுடைகபாரிகாபயதோங்கியத[illegible]ருபத்
திரமருவியதவாகசுரோசக்கி[illegible]மழை[illegible]று
மரவநாட்டெளிதுசெல்லற்காயதோர்பிலமொன்றம்மா. (ககஉ)

ஆயவப்பிலத்தூடேயினரவநாட்டடைவையாங்கு
மேயபனுவாவேந்தனமேதகுமுகமன்செய்து
ஆயதன்மகளைமனறறுளே[illegible]யதளிப்பனெனருன்
மாயனைவனா[illegible]பருவிடைகொண்டான்வள்ளற்கோமான். (ககங)

அறிதுயிலமர்ந்தமூர்த்தியருளியவாறேசென்று
மறிமழுக்காக்காரோணவள்ளலார்வடதிசைக்கட்
செறியமைக்குரோசதநெல்லைசிவணியபிலத்துட்புக்கான்
குறிகெழுநாகர்நாடுகுறுகினனரசர்கோமான். (ககச)

இலவிலையினைதாகவிழைமுலையொன்றுகாணு
டவனிவனென்னககண்டாடநதைவணங்கியைய
சிவனமர்காரோணத்துத்திகழ்பெருஞ்சநவதீர்த்தத்
தவனிவனென்னதேற்றனைடநசனெருவனுங்கே. (ககரு)

அனையவாகாண்டலோடுமணிமுலையொன்றுகாணே
னின்னானின்பாற்கூறவெய்தினேனென்னலோடும்
பனையகவேந்தனுமுளம்பணபுறமிகமகிழ்ந்து
நன்னலத்தவனேநிற்குநாயகனுவனென்றான். (ககசு)

அந்தரவாகரத்துள்ளாரனைவருமறியக்கூறிச்
சந்தநன்மணியாற்பொன்னூற்றகவலங்காரஞ்செய்து
கந்தமென்றொடையனமார்பக்காவலன்வரவுநோக்கி
நந்தலிதுவகைபூப்பவிருநதனனுகர்வேந்தன். (ககஎ)

ஆயவப்பொழுதேசாலீசுகனவனெதிரேசென்றான்
பாயபொற்பிவனேயந்தப்பார்த்திபனெனத்தேர்ந்திங்கு
மேயநீயாவன்வந்தகருமமென்விளம்புகென்று
ளேயமாரரவவேந்தனரபதிநிகழ்த்தலுற்றான். (ககஅ)

ஏற்றமாரொருமார்த்தாண்டனியலமைபெருங்குலத்திற்
றோற்றமேவினன்யான்சாலீசுகனெனுநாமமுள்ளே
னாற்றநின்பாங்கரொன்றுகருதிவந்தடைந்தேனென்றான்
மாற்றமொன்றுரையான்சேடன்மகிழ்ச்சியிற்றிளைப்புற்றானே. (௧௧௯)

ஒருமுலைமறையக்காட்சியுதவினானிவனேகொல்லென்
றருமகடன்னைநோக்கவனையளுமினையனேநின்
மருமகனெனச்சொல்லாதுசொற்றிடமகிழ்ச்சிகூர்ந்த
பொருவருநாகர்கோமான்யானையும்பொருந்தக்கூட்டி. (௧௨0)

மணமகன்றனக்கெண்ணில்லாமணிப்பணியெடுத்துச்சூட்டிப்
பணவரவல்குன்மாதர்பவளவாய்வாழ்த்துமல்கத்
தணவருமியமுழங்கத்தவாதமங்கலங்கூத்தாடக்
குணமுயர்மகளையந்தக்கொற்றவற்குதவினானே. (௧௨௧)

மேவருமகிழ்ச்சிபொங்கவேனெடுங்கண்ணாளோடு
பூவருமுவளகத்துப்புகுந்துசந்தாபந்தீரத்
தாவரும்புகழ்சால்வேந்தனல்குலந்தடத்துண்மூழ்கித்
தேவருநறுமுறுக்கச்செறிந்தபேரின்பத்துய்த்தான். (௧௨௨)

தன்னரசுரிமையெல்லாமருமகன்றனக்கேயாக்கிப்
பன்னகவேந்தன்வல்லேபாதலநின்றுபோந்து
மன்னலநணிவிராயமருந்துவிருதியைச்சார்ந்து
தொன்னலமமைந்தமுக்கட்சோதியையாங்குப்போற்றி. (௧௨௩)

முந்துதான்பதிட்டைசெய்தலிங்கத்தின்முன்புமேவி
நந்துபேரன்பிற்போற்றிநாடுமவ்விலிங்கமேல்பா
லுந்துமோர்தீர்த்தந்தொட்டுமேற்றதினுவந்துமூழ்கி
* வந்துதேருணவாக்கொள்வோன்வைகலும்பூசிப்பானால். (௧௨௪)

குடந்தையேயாதியாகக்குறிக்கொளுந்தலங்களுன்றுந்
தடந்தைதாமரைமுன்னாயதண்மலராதிகொண்டு
விடந்தைவாளெயிற்றுநாகர்வேந்தனோர்காலநான்கு
மடந்தையோர்பாகத்தானைப்பூசனைவழாதுசெய்வான். (௧௨௫)

குடமதியபரபக்கஞ்சதுர்த்தசிகூடுநாளி
னடநவில்பரனைப்பூசைசெய்தற்குநயந்தான்போல
மடனிகுகதிரோன்மேலைவார்கடற்புனல்படிந்தான்
விடனமரெயிற்றுநாகர்வேந்தனுநன்னீர்தோய்ந்தான். (௧௨௬)

நிலவியமுதல்யாமத்துநிறைமலராதிகொண்டு
கலவியவன்பர்நெஞ்சங்கழன்றிடாக்கருணைவாழ்வை
யுலவியகயற்கண்ணாளையொருபுறங்கொண்டகோவைக்
குலவியகுடந்தைக்கீழைக்கோட்டத்திற்பூசித்தானே. (௧௨௭)

---

* வந்து - காற்று.

அடுத்தவோரிரண்டாம்யாமத்தமையுபகரணங்கொண்டு
மடுத்தபேரன்புபொங்கமலவிருளறுக்குந்தெய்வக்
கெடுத்தவைம்பொறியார்வாழ்வைக்கேடிலாமுதலைவிண்ணங்
கடுத்தபல்வளஞ்சால்சண்பகவனத்திற்பூசித்தானே. (கஉஅ)

உறவருமூன்றும்யாமத்துபகரணங்கைக்கொண்டு
மறவருமனமினெங்கண்மாசிலாமணியைப்பாசந்
தெறவருமுதலைமேலாஞ்சின்மயப்பொருளைவானத்
தறவரும்புகழ்திருப்பாம்புரத்திடையருச்சித்தானே. (கஉக)

எண்ணியநாலாம்யாமத்தியைபலபொருளுங்கொண்டு
தண்ணியநேயம்பொங்கச்சார்ந்தவர்தமைவாழ்விக்கும்
புண்ணியமுதலைமேலாம்பூரணப்பொருளையாருங்
கண்ணியவரங்கனல்குங்காரோணத்தருச்சித்தானே, (கங0)

பூசையிவ்வாறுசெய்யும்புண்ணியச்சேடன்காண
வாசைகொளனைவெம்பெம்மானவ்விலிங்கத்தினின்று
மோசைகொள்கருவியைந்துமுயர்ந்தவானகந்தயமைய
வீசையுமொருபான்மேவவிடபவாகனனாய்த்தோன்றி. (கஙக)

கந்தருநாப்பண்மேவக்கபிலைமால்வரையோடெய்து
மந்தமில்காட்சியீதென்றமரர்பூமாரிதூர்ப்பப்
பந்தமின்முனிவர்பெய்கட்பனிபபுனலவற்றையீர்ப்ப
வந்தமிலடியர்மற்றோரரகரகரவெனலார்ப்ப. (கஙஉ)

நந்திமுற்கணங்களெல்லாநகுகரந்தலைமேற்கூப்பி
முந்தினின்றிறைஞ்சல்செய்யமுடிமிசைப்பிறைவிளங்க
வந்தியர்புகழ்ந்துநிற்பயாமறையனைத்தும்வாழ்த்தத்
தந்தியாழ்வல்லோர்பாடத்தவாப்பெருங்காட்சிதந்தான். (கஙங)

காட்சிதந்தருளலோடுங்கட்செவிநாகர்கோமான்
மீட்சியினேயம்பொங்கவிரைந்தெழுந்துவந்துசூழ்ந்து
மாட்சியிற்பணிந்தெழுந்துவள்ளறனெதிரேநின்று
ஞாட்சியிற்சிறந்தவம்மான்வேண்டுவவுரைதியென்றான், (கஙச)

கன்றுமான்மழுக்கையாய்நின்காட்சியின்விசேடமாய
தோன்றுமின்றேனும்வேட்கையுளாக்குவலவையாவென்னி
லென்றுமிந்நகரமென்பேரினிதுறப்பூணல்வேண்டு
நன்றுபஃறிருவுநாட்குநாளுயர்ந்திடவும்வேண்டும். (கஙரு)

இந்தமாவிலிங்கநீங்காதென்றுநீபொலிதல்வேண்டுஞ்
சந்தவிவ்விலிங்கத்தோடுதீர்த்தமுமென்பேர்தாங்கிப்
பந்தமதொழித்தலோடுவேண்டுவபயத்தல்வேண்டு
மந்தமில்புனல்யாறொன்றீங்கிலைந்தாழிகலத்தல்வேண்டும். கஙசு)

இத்துணைவரங்களன்றியின்னுமொன்றிரப்பதுண்டான்
முத்துணைமுறுவல்பாகவுடம்பொடுமுயங்கும்வாழ்வி
லத்துணையாசையிலதியடியனைறகென்றுமானத்
தத்துணையாகநின்பொற்றுட்கலப்புறுத்தல்வேண்டும். (கஙஎ)

இவையருளென்றுதாழவிமையவர்மயலைக்கொண்டு
சிலையொருபாகத்தம்மான்றிருநகர்பெரிதாக்கண்டு
குலைவமணிசெம்பொனுதிப்பொருளெலாங்குவியச்செய்து
நவையறயாருநாகநகரொனப்புகல்கவென்று. (கஙஅ)

கண்மலர்ப்பொழில்சூழ்நாகைக்காரோணநகர்க்குமேல்பா
லெண்மலரளவைகூறினிரண்டியோசனையினின்றும்
விண்மலர்நதியுநாணவிளங்கொருகுடிஞைதோற்றித்
தண்மலர்திருக்காவேரிக்காதியிற்சமைததவாற்றுல். (கஙக)

விருத்தகாவேரியென்றுவிளங்கவோர்நாமஞ்சாற்றித்
திருத்தவாதியிற்சுருக்கிவரவரவிரியச்செய்து
மருத்தபூம்பொழில்சூழாரூர்நதென்றிசைவழியியக்கிப்
பொருத்தமாம்புணரிமேவிப்புனிதஞ்செய்திடச்செய்தானே. (கசo)

மற்றவையனைத்துநல்கிமறைந்தனனிறைந்தசோதி
பற்றறுநாகர்வேநதனபரனடிகலந்துவாழ்நதான்
கொற்றவிண்ணவர்களெல்லாங்குவிமலர்மாரிதூர்த்தா
ரற்றமிலனையதானமடுத்தவாக்கனைத்துநல்கும். (கசக)

பன்னாகவேந்தன்பெற்றபண்புசால்பேறுநோக்கி
நன்னர்வாசுகியடைந்தநாகதீர்த்தத்தின்மூழ்கிப்
பொன்னவிராதற்கிழ்பாறியெலிங்கநிறுவிப்போற்றித்
தன்னமர்நாமஞ்சூட்டிச்சாலோகமெய்திவாழ்ந்தான். (கசஉ)

கறைபணச்சங்கபாலனத்தடங்கலந்துமூழ்கி
நிறையுமததடத்துமேல்பாற்சிவலிங்கநிறுவிப்போற்றி
முறைமையிற்றனைப்பர்நாட்டிவாசுகிமுயனடுபெற்ற
மறைதலில்பேறுபெற்றுவாயந்தினிதிருந்தான்மன்றே. (கசங)

குளிகனென்பவனுமந்நீர்க்குறுநடுமூழ்கிநீடி
யளிகிளரனையதீர்த்தத்தமைவடகரையின்கண்ணே
தெளிதரத்தன்பேராலோர்சிவக்குறிநிறுவிப்போற்றி
யிளிவறச்சங்கபாலனபெறறபேறெய்திவாழ்ந்தான். (கசச)

இன்னுமத்தீர்த்தமூழ்கியிருஞ்சிவக்குறிபூசித்து
மன்னும்வண்சிவசாலோகமுதலியமருவிவாழ்ந்த
பன்னுபன்னகங்கள்பல்லபாரினும்விசும்பின்கண்ணுந்
துன்னுபல்லோர்கண்மூழ்கித்துயரொழிந்தின்புற்றூரால். (கசரு)

நாகமாநகரநண்ணிநாகதீர்த்தத்தின்மூழ்கி
நாகநாதனைக்கண்டேத்திநல்லவராளுர்மண்மே
லாகவாய்விடஞ்செய்துன்பநண்ணிடார்சிறிதுமென்று
நாகநாட்டவர்கொண்டாடநலம்பொலிந்தமர்வரன்றே. (கசசு)

பணியரசிறைஞ்சநாலாம்பதமினிதருளிச்செய்த
மணிமருள்கண்டநாகநாதர்தம்வரவுசொற்றாங்
கணிதமிலருளான்மிக்குக்கலந்தவர்க்கின்பஞ்செய்ய
மணிகிளர்கார்முகேசர்வரவினியறைவாமன்றே. (கசஎ)

நாகநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கக ஙு - திருவிருத்தம் - கஉசஎ.

## கார்முகேசப்படலம்.

சாதுநந்திதாடொழாக், கோதுதீர்குமாரன்றே
மோதுகார்முகேசன்சீ, ரோதுகென்னவோதுவான். (க)

மிக்கமாதவச்சம, தக்கினிப்பெயரிளான்
றக்ககாதன்மனைவிசொல், விக்கவாவிரோணுகை. (உ)

திருகுதீரிருவர்க்கும், பிருகுவார்த்தைபேணிய
கருகுமேனிமாயவ, னுருகுமைந்தனாயினான். (ந)

பரசிராமனென்றுபேர், விரசுமாறுமேவுநா
ளரசுகாத்தவீரியன், வரசுமார்க்கமாற்றினான். (ச)

கற்புமேவிரோணுகை, பொற்புநேர்தெரிந்துகொண்
டற்புநெஞ்சமைத்தனன், வற்புமேயமன்னவன். (ரு)

அனையடன்னைநோக்குமோர், வினையமுள்ளத்தெண்ணுபு
நனையுநீர்கொளுந்தடத், தினையுநெஞ்சனெய்தினான். (சு)

கூடுசாயைகொள்ளுநீ, ரூடுதோன்றவானின்றான்
பாடுசால்பெரும்பழி, வீடுதீர்ந்தவெய்யனே. (எ)

அன்னசாயைநோக்கினு, ளின்னசாயைமேனியா
ளென்னசாயலானெனாத், தன்னமுள்ளத்துள்ளினாள். (அ)

வந்ததிக்குநாடியே, பந்தமேதுமில்லவன்
முந்தநீயிவளுயிர், சிந்தமாட்டுகென்றனன். (கூ)

தந்தைசொற்றலைக்கொடு, சிந்தைவந்துநேர்ந்தது
முந்தையூழ்முறையெனச், சிந்தைநொந்துசெய்தனன். (கo)

வனிதைமாயமாய்த்ததூ, மினியசெய்திலானெனாக்
கனிவினைத்தமன்னவன், முனிவுஞுவிபோக்கினான். (கக)

பெற்றதாயரிருவரு, மிற்றதன்மையெண்ணிநா
ளற்றமன்னன்மேற்பெருஞ், செற்றமேவினான்மகன். (௧௨)

விரசுபாவம்வீக்கவு, முரசுகண்படாமுன்றி
லரசெலாமழிக்கவும், பரசிராமனெண்ணினான். (௧௩)

நாணமேருப்பூட்டுதிண், டோணமாதிமேவுகா
ரோணனூனையுற்றன, னூணமேவகத்தினான். (௧௪)

பாவநாசம்பண்ணிடுந், தேவதீர்த்தந்தோய்ந்துபச்
சோவமோர்புறத்துமுக், கோவனோர்குறுகினான். (௧௫)

முனியுடம்புதன்னுடம், பிணிதினேற்றுமன்னருள்
கனிவிறபோற்றிக்கைதொழாத், தனியவன்றனக்கரோ. (௧௬)

கிருதியாசையிற்புகா, வொருவிருத்தகாவிரி
யருகினோர்சிவக்குறி, பெருகுமன்பிற்றாபித்தான். (௧௭)

அருகுநாற்சதுரத்தி, னொருதடமுண்டாக்குபு
மருமலர்முன்னாயகொணா, டுருகியன்பிற்பூசிப்பான். (௧௮)

மழுவிராமனின்னணம், பழுதில்பூசைபண்ணுநாள்
வழுவில்கார்முகமொன்று, தொழுமந்நீருட்டோன்றிற்றே. (௧௯)

ஈதுதோன்றலண்ணற, னாதுபோருளானாக்
கோதுதீர்குணங்கெழு, சாதுவாளனெண்ணுழி. (௨௦)

அலிங்களமர்ந்ததென்களப், புலிங்கவாரழனுதற்
கலிங்கவாசையானுமவ், விலிங்கநின்றுதோன்றினான். (௨௧)

கண்டிராமன்கைதொழாத், தண்டுபோற்றரைவிழா
மண்டுமோகையின்னெழாத், தொண்டுபூண்டுநின்றனன். (௨௨)

உற்றகாதலன்னனைச், செற்றபாதகந்தவிர்த்
தற்றமேதுமில்லதோர், கொற்றமுங்கொடுத்தனன். (௨௩)

தோன்றுகார்முகம்மெடுத், தான்றமன்னராருயி
ரொன்றுமாய்த்திடென்றுகண், மூன்றுளான்மறைந்தனன். (௨௪)

சொற்றவாறுகார்முகம், பெற்றகையனாயவன்
கொற்றமன்னராருயிர், முற்றமாய்த்துவாழ்ந்தனன். (௨௫)

மருவுகார்முகப்பெயர்ப், பொருவிலாததீர்த்தமும்
பெருகுசீரிலிங்கமு, மொருவுறாமனுற்றன. (௨௬)

ஏர்த்தமேன்மைக்கார்முகத், தீர்த்தந்தோய்ந்தெழுபவர்
பார்த்ததிக்கினும்புகா, வார்த்தபாதகங்களே. (௨௭)

அரியகார்முகேசன்ருள், பிரியமாகப்போற்றுவார்
கரியமாலுமெய்தரும், பெரியபேறுபெறுவரே. (௨௰)

வந்தகார்முகேசர்சீர், நாதநார்முறைத்தனஞ்
சுந்தரவிடங்கர்சீ, ருந்தகத்தெரித்துமால், (௨௧)

கார்முகேசப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௰ ௵-திருவிருத்தம்-௧௨௧௬.

## சுந்தரவிடங்கப்படலம்.

அந்திவெண்பிறைமிலேச்சியபெருமானருளிலுமுழுதுநான்குணர்ந்த
நந்தியெம்பிரான்றிருவடிவணங்கிநலங்கெழுஞ் சனற்குமாரமாமுனிவன்
சுந்தெதன்னையினுயர்ந்தகாரோணக்கடிநகர்ப்பெருஞ்சுந்தரவிடங்கர்
புந்திசெய்யுநன்மான்மியமுணரப்புகலுவாயெனப்புகலுவதானுன். (௧)

ஆதியாகியசிருட்டியின்மாயோனழகிதாவொருமகப்பெறவேண்டிப்
பாதிமாமதிசூடியபரமன்பண்புசான்றமூர்த்தமகளுட்கரிசு
காதிநன்மகவளித்திடுசோமாக்கநதமூாததததையமரர்கம்பியனூற்
சோதிமேவுறப்புரிநதுபூசித்துச்சுந்தரந்திகழ்காமனைப்பெறருன். (௨)

அன்னகாலேயினவுணர்கள்பல்லோரமரர்நாட்டினைவனோந்தமராடப் [அ
பொன்னகர்க்கிறைவச்சிரமேந்திப்பொருதும்வென்றிலன்பாற்கடலடைந்
பன்னகத்திடைத்துயில்பவற்குணர்த்தப்பைந்துழாய்த்தொடையனையனு
மெண்ணி, நன்னரத்தகுமூர்த்தியைக்கொடுத்துன்னகரிற்பூசனைபுரியென
[விடுத்தான்.

அந்தமூர்த்தியைத்தன்னகரிருத்தியான்றபூசனைபுரிந்துபல்லவுணர் [மாக்
சிந்தவென்றனன்வலனெனுமவுணன்செயிர்த்தெழுந்தனன் றிகழுமச்சோ
கந்தநம்பிரான்றிருவருள்பெற்றுக்கதிர்க்குலத்திகன்முசுகுந்தற்கொண்டு
மூர்தவென்றனன்மகிழ்ந்தம்மூர்த்தியையம்முசுகுந்தன்கொளக்கொடுத்த
[னன்மகவான்.

மேயமூர்த்தியைமிகுபெருஞ்சிறப்பின் விமானத்தேற்றுபுமுசுகுந்தனென்
பான்,பாயவைவகையியங்களுமியம்பப்பாலொலாங்களிசிறநதிடக்கொடுவ
ந,தேயபல்வளப்பெருந்திருவாரூரினையிலாலயஞ்செய்துதாபித்து
நேயமிக்குறப்பூசனைபுரிந்துநிகரிலாதபேரின்பத்திற்றிளைத்தான். (௫)

அடுத்ததாகியசிருட்டியிலிறையாருறுதத்துவத்திரண்மலங்கவரப்
படுத்ததாகியவறிவொழித்துயிர்கள் பலவுநன்கெடுத்தாளுதற்பொருட்டே
மடுத்ததாகியகருணையின்மலர்மேல்வைகுவான்முதல்யாவையும்படைத்தா
னெடுத்ததாகியவச்சிருட்டியினுமிலகமுன்புபோற்றேன்றியமாயோன். ()

பொறியொடுங்கலப்புற்றுவாழ்நாளிற்புதல்வனின்மையைமனத்துறக்
குறித்து,நெறிதரும்பிறங்கடையிலாவாழ்க்கைநீசவாழ்க்கையினிழிந்ததெ
ன்றிழித்துக், குறிகொணன்மகப்பெறுவதூஉருநிக்கூடுமாதவம்புரிந்துப
ன்முனிவர்,செறிதரும்பெருமைமிசத்தடைந்தான்செய்யதாமரைத்திருமக
ளோடும். (எ)

அந்தமாவனத்தொருசிவகோசமன்புமேவுறப்பிரதிட்டைசெய்து
சந்தமாமலராதிகள்கொண்டுதவாமலாயிரமாண்டுபூசிக்க
நந்தமாரருட்கடலுளமிரங்கிநாடுமாயவுன்விழியெதிர்சோமாக்
கந்தமூர்த்தத்திற்காட்சிதந்தருளக்கண்டுமாயவனெழுந்தடிபணிந்தான்.()

பணிந்தமாயனைப்பரம்பரனோக்கிப் பசுந்துழாய்நறும்படலைமார்புடையா
ய், துணிந்தநின்கருத்தெவனுரையென்னத்தூயமான்மறுவலும்பணிந்தெ
ழுந்து, தணிந்தயோகியருளத்தொளியாயசம்புவேநினதருளினூற்புலவ
ரணிந்தசெல்வமிக்குடையவனேனுயினுங்குறையொன்றளதைய. (கூ)

அருளிலாப்பெருந்தவமுநின்னடிக்கணன்பிலாப்பெரும்பூசையும்போ
லாம், † பொருளிலாமனைவாழ்க்கையெனநேருதிப்புனத்துழாயணிநாரண
னிரப்பத், தெருளிலாமனத்தடைதராப்பெருமானனைதாகெனத்திருவுள
ஞ்செய்தான், வெருளிலாமனத்துவப்படைந்தனமால்விமலனாயகிசிறி
துகண்சிவந்தாள். (க0)

முனைவலத்துயர்சக்கரப்படையாய்முக்கண்மூர்த்தியைவணங்கினையன்றி
யெனைமதித்திலைவணங்கிலையதனாலெய்துகமாதன மற்றவனெரிவிழியாற்
கனைகடறபுவியிழிபநீருகிக்கழிகவென்றுரையாடுபுமறைந்தா
னனைமலர்ப்பசுங்கடுக்கையானோடுநவின்றசொற்செவிப்புகுதலுநடுங்கி.()

யாதுசெய்குவதினியிதற்கந்தோவெழின்மகப்பயந்திகழ்ந்திடுவதினு
மோதுமற்றஃதிலாதிருப்பதுவேயோங்குமுத்தமமாருமாயிடினு
மீதுசெய்தருள்பெறுவனென்றுள்ளதெணனீஇச்சுவகன்மனைக்கூவின்,
மாதுபாகனமுன்காட்சிதநதளித்தவண்ணமோருருத்தருகெனபுகன்று

சொற்றவாறமைப்பேனெனவெழுந்துதூயவிச்சுவகன்மனோரிடத்துக்
கற்றகேள்வியர்சிலரொடுமமர்ந்துகரிசில்பன்மணிப் பீடமொன்றமைத்து
க்,கொற்றமாருமப்பீடத்தின்மேலாற்கொன்றைமாலிகைப்பிரானுலகீன்ற
வற்றமேதுமிலகந்தரிமூவரமையுமாறுநன்காய்ந்தினிதமைப்பான். (கங)

குணகடற்றலையெழுமிளங்கதிருங்குறிக்கொணுச்சமழ்ப்புளக்கொடுவட்க
த், தணவருங்கதிர்பரப்புபொன்மோலிசமைத்து மறறதுகதிரொன மருண்
டே, யணவுசநதிரகலையெனப்பிறையுமமைத்துமறறதனுருவடிவொத்து
நணவமைநதிடுபுனன்மகளொருபானுடுகண்கவர்வருந்திறனமைத்து. ()

ஆயவாகமப்படியருச்சிக்கத்தொடங்கியோர்மலரொடுத்திடும்போதே
மேயநின்கருத்தெவனுரையென்றுவெள்ளிதாஞ்சிறுமுறுவலுந்தோற்றி
நேயவாய்மலர்ந்திடுவதுமானநிலவுகண்கவர்திருமுகமமைத்துப் [லாவ.
பாயபேரிருள்சவட்டுவெங்கதிரோன்பறம்பிற்றேற்றமுமொடுக்க முமுற

† பொருள் - சந்ததி.

என்றுமற்றவையில்லவாய்விளங்குமிரண்டுசெங்கதிர்படைத்துவிட்டன்ன
நன்றுசெம்மணிக்குண்டலமிரண்டுநயக்குமாறிருசெவியினும்பொருந்தி
யொன்றுநீண்முடியுறவிறையமுதமொழுக்கமற்றதுமுழுக்கநன்மார்ப
நின்றுஇழிந்திடுவதுகடுப்பநிகரிலாவுபவீதமுமமைத்து. (கசு)

தருமமாதியநான்குநன்களிக்கச்சமைந்தவேயெனத்தயங்குபொன்னுக[ல்
வருமையாமலர்த்தொருநிறந்தசமைந்தவங்கைத்தாமலாநான்கினுமாண்பா
பருவமங்கலபாலென்பதற்கியையப்பரசுவாடொருபரசுமொமைமானு
மருவுபேரருள்புரியபயமுநல்வரதமுங்கவினகுறிகொளவமைத்து. (கஎ)

பிரியமேவியவிட்டப்பதமடக்கிப்பிறங்குவேதவேதாந்தமுங்காண்டற்
கரியதாயபொறகின்கிணிபுலம்பவமைந்தவோர்வலப்பதநதகநீட்டித்
தெரியமற்றவுஞ்சிறப்புறவமைத்துத்திருந்தமூவுலகினைநாறுறுயுங்
கிரியவாய்க்குடிகொளுமிளஞ்சேயுங்கினதமற்றவற்கேற்புறவமைத்து. ()

எடுத்துவந்துலகளந்தவன்முன்னரியையவைத்தனன்விச்சுவகன்மன் [கொ
கடுத்தவேறொருபொருளுருப்பொருளைக்கமலக்கண்களிகொளக்கண்டுகவ
விடுத்தயிக்கபேருவகையனுகிவிசுவசன்மனைப்போக்கியைம்பொறியுங்
கெடுத்துமாதவனெனும்பெயர்க்கியையக்கிளர்பெருந்தவம்புரிவதறசெழு
[ந்தான். (க௯)

விதியிற்புண்ணியகங்கைநீராடிவெள்ளைநீற்றுமுப்புண்டரம்புனைந்து [த்து
கதியிறசேர்தரிடுகண்மணிதரித்துக்கருத்தினுள்ளுறவெழுத்தைந்துங்கணி
மதியிற்றுணமுற்றாய்மையதியற்றிமனசனுதியாவையுமுறக்கொண்டு
விதியிற்செய்யருக்கியமுதற்பலவுபிரபயிமேதகுபூசனைபுரிவான். (உ0)

திருந்துமன்பினுவாகனமாதிசெய்துவாசனைசதாயிலமுனூட்டிப்
பொருந்துபற்பலபணிகளும்பூட்டிபபுகரிலாதபலசுவைகளுமமைந்த
மருந்தசோரிவேதனைகளுமூட்டிவயங்குபற்பலதீபமுங்கோட்டிக் [ன்.
கருந்துழாய்முகிலினுறப்பணிந்துகைகுவித்துறச்சூழ்ந்துபோற்றிடுவா

பூசையின்னனமாயிரவருடம்புரியவந்தவிக்கிரகத்தினின்று
மீசைபாலுறமழநடுப்பொருந்தவெம்மையாருடையிறையவன்றோன்ற
வாசையாடையானன்னதுகாணூஉவங்கைகூப்புபுவிணாநதெழுந்தாடி
யோசைமேவுறவரவொலியெழுப்பியுவந்துபன்முறைபணிந்துநின்றன
[னே. (உஉ)

நின்றமான்முகநோக்குபுபெருமானினைத்ததென்னெனமகவிழவாமை[னு
யொன்றநல்தெனமுறுவல்செய்தொருபாலுமைமுகத்தினைநோக்கமற்றவ
மென்றன்வாய்மொழியிழைபடாததனுலெரிந்தநின்மகனெய்துவனுயிரை
யன்றனங்களுமருவுவன்வருந்தேனனிநாயகவென்றருள்புரிந்து (உங)

பின்னுமோதுவாளிவ்வுருக்காணப்பெற்றயாவர்க்கும்வழிவழிமகவு, து
ன்னும்வேண்டுசெல்வங்களும்பெறுவாரென்றுசொற்றனள்கரும்பிவர்குழ
லாண், மன்னுமிந்தவிக்கிரகத்தினென்றுமருவிநீபிரசன்னமாயிருந்து, மின்
னுபோகங்கள்பலவுமெவ்வுயிர்க்கும்விருப்பினல்கெனமீட்டுமொழிந்திய, ()

இரந்தவாறுபல்வரங்களுமருளியெம்பிரானுமத்திருவுருப்புகுந்தான்
சுரந்தபேரருட்டாயுமொண்சேயுஞ்சொற்றமற்றவுருருவத்துட்புக்கார்
பரந்தவோகையனாகியநெடுமால்பரவுமப்பெருமூர்த்திகளோடும் [தான்.
வரந்தவாததன்னிருக்கையுட்புகுந்துமாவொடுங்கலந்தினிதுவாழ்ந்திருந்

வேறு.

மந்தரம்பொருவுதோண்மாலிருக்கையைமருவிச்சோமாக்
கந்தரமுழுதுநோக்கிக்கண்களிபூத்தநாமஞ்
சுந்தரவிடங்கனென்றுசொல்லிமுனையினும்பூசை
யந்தரமுதறபன்றுமதிசயித்திடப்புரிந்தான். (உசு)

புரியுநாண்மதவேளென்னும்புதல்வனைப்பெற்றானன்றன்
வரிசிலைவல்லோனாகிவாழ்நாட்பரமன்மேலோர்
தெரிகணைதொடுத்துநெற்றித்தீயிழிசுடலான்மாய்ந்தவ்
வரியவனருளான்மீட்டுமுய்ந்தெழுந்தனங்கனானான். (உஎ)

கரியுரிபோர்த்தமேனிக்கடவுடனருளையுன்னி
யரிமகிழ்ந்தமருநாளிலவுணருட்சம்பனென்பான்
விரிகடற்சேனைசூழவிண்ணுலகதனைமுற்றித்
திரிபொடுவம்மினென்றுசினந்தறைகூவினானே. (உஅ)

பொரவழைத்தவன்யாரென்றுபுரந்தரன்றூதிற்றேர்ந்து
கரவுடைச்சம்பனென்பான்கடுகிவந்தனனாலென்று
வரமுடையதேவரோடும்வளைந்தமர்பன்னாட்செய்து
முரணிலனவுணன்போருக்குடைந்தனன்வெருவிட்டானால். (உகூ)

இனியியற்றுவதென்னென்றுவிந்திரன்கரந்துசென்று
பணிபடுசடிலனாப்பட்பாப்பலைமீதுதுஞ்சும்
புனிதனையடுத்தானன்னான்புரிந்துவராமைநோக்கிக்
கனிதுயின்மிக்கானென்றுகாவலனிதனைச்செய்தான். (ஙo)

தவாமயக்கியற்றிவைகுஞ்சத்திசாம்பவியைவேண்ட
வவாவறுத்தவர்க்குச்சன்மமகனறெனத்துயில்பிடிக்கைக்
கவானுடைத்திருமனாளற்ககன்றதுகழிதராக்கட்
குவானுடைக்குலிசவேந்தைநோக்குபுகூறலுற்றான். (ஙக)

வந்ததையெவனடைந்தவாட்டமெனுரைத்தியென்று
னிந்திரன்பணிந்துசம்பனென்பவனிகத்தோடு
முந்தவந்தமர்த்தல்செய்தான்முயன்றுபோர்புரிந்துதோற்றே
னந்தலினின்பாற்கூறநண்ணினேனென்றுசொற்றான். (ஙஉ)

புரந்தரன்மொழியுட்கொண்டுபுயல்வண்ணன்கருணைமேன்மேற்
சுரந்துதன்னிதயமேயசுந்தரவிடங்கப்பெம்மான்
வரந்தருசரணமெண்ணிவானகம்புகுந்தவைகற்
கிரந்தனனுடம்பாடோர்ந்துமகபதிக்கிசைக்கலுற்றான். (ஙங)

அருளினென்னிதயமேயவழகியவிடங்கர்தம்மைத்
தெருளுறக்கொடுபோய்நின்பொற்றிருநகர்ப்பதிட்டைசெய்து
மருளறப்பூசைசெய்யின்வாள்வலியவுணன்செய்யும்
வெருளறவெல்லலாகும்விரும்பியவனைத்துமேவும். (௩௪)

இந்தவிக்கிரகமேன்மையியம்பரிதெம்மனோர்க்கு
முந்தநீகொடுபோவென்றுகொடுத்தனன்முகுந்தனென்பா
னந்தமிழுவகைபொங்கவடிபணிந்ததனையேற்றுச்
சந்தநல்விமானமேற்றித்தன்னகரடைந்தான்வேந்தன். (௩௫)

பொருவருங்கோயிலொன்றுபுரிந்ததனிடைத்தாபித்துந்
தருவருமலர்முன்னாயயாவையுந்தழுவக்கொண்டு
மருவருமன்புபொங்கமாண்புசால்பூசையாற்றி
வெருவரும்வன்மைபெற்றான்விண்ணுலகொருங்குகாப்பான். (௩௬)

விடாதபூசனைசெய்நாளில்விடங்கர்தங்கருணைபெற்றுந்
தடாதபல்லனிகத்தோடுஞ்சதமகனெதிர்ந்துசென்று
கெடாதவாளவுணர்தம்மைக்கிடைத்துமிக்கடுபோராற்றிப்
படாதபல்படையின்மாய்த்துச்சம்பன்முன்படர்ந்தானன்றே. (௩௭)

அடுதிறற்சம்பன்மெய்யையவன்பெயர்க்கடையீரொன்பான்
படுமொருமெய்யொழித்துப்பத்தாமெய்புணர்த்தவாய
தடுவரும்பொருளால்வீசித்தனையிடைப்படியவீழ்த்தி
வடுவரும்வாகைபூண்டான்மலர்ந்தவாயிரங்கணானே. (௩௮)

இறந்தனன்சம்பனென்பானெஞ்சியவவுணர்யாரும்
பறந்தனரோட்டெடுத்துப்பல்லிடத்திலுங்கரந்தார்
மறந்தலையெடாதுவென்றவானவர்பெருமானீரதோய்ந்
தறந்தலைவிடங்கர்பூசையாற்றிநன்கிருந்தானன்றே. (௩௯)

வாள்வலிச்சம்பனென்பான்வானகத்தமர்ந்தவாறு
தோள்வலிமகவான்றாக்கத்துடிதுடித்திறந்தவாறுங்
கோள்வலியவுணர்மற்றோர்குலைகுலைந்தொளித்தவாறு
நாள்வலியிழந்தோனாயநமுசிகேட்டுளங்கொதித்தான். (௪0)

நாடியதிறலான்முன்னைநமுசியிற்பதின்மடங்கு
கூடியவலியின்மிக்கான்கூற்றிற்குங்கூற்றம்போல்வா
னீடியவவுணர்க்கெல்லாநிறைகளைகண்ணாயுள்ளான்
ஞுடியதும்பையோடுதுடிதுடித்தெழுந்தானன்றே. (௪௧)

அரியினைநரிவென்றாங்குச்சம்பனையடர்த்தான்வெள்ளைக்
கரியினையுகைப்பான்கொல்லாமெனக்கனன்றதிர்த்துச்செம்பொற்
கிரியினையுகைத்தல்போலக்கிளர்மணித்தேருகைத்துப்
பரியினையாதியெல்லாப்படைகளுஞ்சூழவந்தான். (௪௨)

வந்துகற்பகநன்னாட்டைவளைத்துயர்மதிலழிக்க
முந்துபற்பலரையேவிவினைத்தவாமுடித்துப்பின்னர்
கந்துகொல்களிற்றினூர்கலந்தரம்பையரைப்பற்றி
நந்துபல்வளமுந்தெவ்விநடுங்கிடவடுபோர்செய்வான். (௪௩)

மந்தரம்பொருவுதிண்டோண்முசிதன்வரவுதேர்ந்து
சுந்தரவிடங்கர்பாதந்தொழுதுளமுருகப்போற்றி
யந்தரமிதுவென்றேனவுணனையடுதற்கென்று
கந்தரமுகைக்குங்கோமான்கசிந்துவிண்ணப்பஞ்செய்தான். (௪௪)

நாரணனாட்டினின்றுநான்மருப்பேந்தும்வெள்ளை
வாரணனாட்டில்வந்தசுந்தரவிடங்கவள்ளற்
பூரணனாட்டமூன்றுபொருந்தினோன்புணரிசூழ்ந்த
பாரணனாட்டம்வைத்துப்பகருவான்மகவானீதே. (௪௫)

கதிரவன்குலத்துத்தோன்றுங்காவலன்வலியான்மிக்கா
னதிர்கழற்காலான்சாலீசுகனெனவறையும்பேரா
னெதிரினம்மடிகட்கென்றுமிடையறுவனபூண்டா
னுதிர்தலில்புகழானன்னூராகோன்மகளைவேட்டு, (௪௬)

பாதலநின்றும்போந்தபைந்திரைக்கடலுடுத்த
பூதலமருங்குகாயாரோகணம்புகுந்துமிக்க
மாதலமிதுவென்றெண்ணிவைகுவானவனடைந்தாற
சாதலங்கமையுமாறுதகுவனைவெல்வனென்றான. (௪௭)

அற்புதவிடங்கப்பெம்மானருளியதிருவாக்காய
பொற்பருணிரம்பப்பெற்றுப்புலோமசைமணாளனின்னே
வற்பமைநமுசியாவிமாட்டினேனென்றெழுந்து
கற்பகமதில்சூழ்நாகைக்காரோணநகரத்துற்றான். (௪௮)

கற்றவர்புகழுநாகைக்காரோணர்பாதம்போற்றி
யற்றமில்கருந்தடங்கணம்மையைவணங்காநின்ற
கொற்றவனாயசாலீசுகன்முனங்குறுகிநின்றான்
செற்றவொள்வயிரவேலானவன்களிசிறப்பக்கண்டான். (௪௯)

காண்டலுமுவகைதுள்ளக்கைகுவித்தவன்கைபற்றி
மாண்டதன்னிருக்கைமேவிவந்ததென்னுரைத்தியென்னப்
பூண்டவெஞ்சினத்தனாயதகுவனைப்புரட்டவெண்ணி
யாண்டவனருளிச்செய்தவனைத்தையுமறியச்சொற்றான். (௫0)

சொற்றலுங்கைகுவித்துச்சுந்தரவிடங்கப்பெம்மா
னற்றவஞ்சிறிதுமின்றிநாயினுங்கடைப்பட்டேனை
யுற்றதோர்பொருளாக்கொண்டிதுரைத்தனன்கொல்லோவென்று
பொற்றடம்புயங்கள்விங்கப்பொருக்கெனவெழுந்தானன்றே. (௫௧)

எழுந்துபல்புவனத்துள்ளாரியாவருந்தடுத்தபோது
முழுந்தருண்முன்னம்வானோர்க்குறுகணேவிளைக்குந்தீயோ
னழுந்துபட்டிடச்செகுப்பேனன்றிமற்றொன்றுஞ்செய்யேன்
றழுந்தரமிதுவேயென்றான்சதமகனுவகைபூத்தான். (ருஉ)

மகபதியொடுமெழுந்துவரிகருங்கழற்காற்சாலி
சுகனொடுமனையனவானதொன்னகர்புகுந்துதோலா
விகல்கெழுநமுசிதன்னோடேற்றனன்பனாட்போர்செய்
துகலருமவனாவியொளிறுவாள்வீசியுண்டான். (ருங)

பொருசதகோடியங்கைப்புனிதனால்வெல்லக்கூடாப்
பெருவலியவுணனாவிமானிடப்பிறவியுற்று
னொருவனைக்கொண்டுமாய்த்தானொருதுரும்பால்விண்ணாட
ரருவலிமுழுதுமாய்த்தாற்கிதுவுமோரருமைத்தாமோ. (ருச)

பகையுயிர்பாறலோடும்பார்புரந்திடுவாரசென்னித்
தொகைமணிபடுகாற்சாலிசுகன்றனையிறுகப்புல்லி
நகைமுகத்தவன்கைபற்றிநலங்கொடன்னிருக்கையுய்த்துத்
தகைபடுவிருந்தளித்தான்சசிமுலைத்தடந்தோய்மார்பன். (ருரு)

விழைதருபொன்னாட்டுள்ளமேதகுவளங்களெல்லாங்
குழைதருவிருப்பினோக்கிக்குலிசவேற்கோமானோடுந்
தழைதருநட்பனாகித்தராதிபனமருநாளி
லுழைதருவிழியோர்பாகறரிசிக்குமுள்ளங்கொண்டான். (ருசு)

வலனுயிர்குடித்தகோன்றன்மனனவன்விருப்பந்தேர்ந்து
*நலனுயர்விடங்கப்பெம்மான்பூசனைநடாத்துங்காலை
நிலனமைமன்னற்கூவிநேருறத்தரிசியென்றான்
புல்லொருப்பாடுமேவத்தரிசித்தான்புலியாள்கோமான். (ருஎ)

விழிகவர்வனப்புவாய்ந்தவிடங்கனைக்கண்டபோதே
பழிதவிர்காந்தங்கண்டவிரும்பெனும்படியனாகி
வழிதருகண்ணீர்சோரவாரமயிர்ப்புளகம்போர்ப்பக்
கழிபெருங்காதல்பொங்கக்கவருமோர்வேட்கையுற்றான். (ருஅ)

எறிகடலவனிகாப்போனிவ்வணநிற்குங்காலைப்
பதியுலகாளும்வேந்தன்பண்புசானட்புமிக்காய்
செறிவினக்கியாதுவேண்டுஞ்செப்புதிதருவலென்றான்
வெறிமலர்த்தொடையலானும்விடங்கனைத்தருதியென்றான். (ருகூ)

விடங்கனைத்தருதியென்றவேந்தர்கோன்விளம்பலோடு
மடங்கனைவலாரிசோர்ந்துமயங்கிமூர்ச்சித்துவீழ்ந்து
இடங்கனைசில்லோர்தேற்றத்தெளிந்துமால்யானைகாப்பா
விடங்கனையழுத்தானுள்ளமியைதரினியைவனென்றான். (சுய)

சொற்றசொன்மறுத்தற்கஞ்சியிவ்வணஞ்சொல்லலோர்ந்து
கொற்றவெண்கவிகைச்சாலிசுகனகங்குளிர்ப்புமேவப்
பொற்றபாற்கடலடைந்தபொங்கராவணையிருப்ப
னற்றமின்றுகத்தஞ்சுமன்னனல்பொற்பதம்பணிந்தான். (௬௧)

பணிந்தமன்னவனைநோக்கிப்பைந்துழாய்ப்படலைமார்பன்
றணிந்தசிந்தையனாயீங்குவந்ததென்சொற்றியென்னத்
தணிந்தசிந்தனையில்லாதநமுசியைச்சாடினோனுங்
கணிந்தசுந்தரவிடங்கர்திருவுருவமையக்கண்டேன். (௬௨)

ஆய்ந்தவின்னுளியாதுவேண்டுவதருள்வேனென்றான்
வாய்ந்தசுந்தரவிடங்கவள்ளலைத்தருதியென்றே
னேய்ந்தநின்னனுஞைபெற்றீங்கெய்துகவென்றான்செம்பொன்
றோய்ந்தமார்புடையாயின்னேயருளெனத்தொழுதானன்றே. (௬௩)

தொழுபவற்கிரங்கிமாயோன்சுந்தரவிடங்கர்பாதம்
வழுவறமனத்தினெண்ணிமற்றவர்குறிப்புந்தேர்ந்தே
யுழுவலன்புடையாய்கொண்டுபோகெனவுரைத்தான்வேந்தன்
பழுதறுத்துய்ந்தேனென்றுபைம்பொனாட்டகத்துச்சென்றான். (௬௪)

மறையவனுதித்தவுந்திமலரினான்வார்த்தைவெள்ளைக்
கறையடியிறைவற்கோதித்தருகெனக்கசிந்துநின்றா
னறைமலர்த்தொடையன்மார்பாநச்சியபடியேயாதுங்
குறைவிலிப்பொருளைக்கொண்டுபோகெனக்கொடுத்திட்டானே. (௬௫)

அளிகிளர்கருணைமிக்கவழகியவிடங்கர்தம்மை
யொளிகிளர்கதிர்சமழ்க்குமொருவிமானத்தினேற்றித்
துளிகிளர்முகிலுநாணுஞ்சுத்தமத்தளமுழங்கக்
[illegible]ளிகிளர்சிறப்புவாய்கொக்கரைபெருமுழக்கஞ்செய்ய. கூ (௬௬)

பல்லியமற்றையாவும்படுகடலினுமுழங்க
மெல்லியலரம்பைமாதர்மின்னெனவெதிர்நடிப்ப
வல்லியங்குழலார்சில்லோரலங்குசாமரையிரட்டப்
புல்லியபவளக்காம்பிற்பொலிமணிக்குடைநிழற்ற. (௬௭)

மறைமுழுதுடையான்வந்தான்மால்விடையாளிவந்தான்
கறைவிடமமுதாக்கொண்டகடவுளர்ப்புரந்தான்வந்தான்
றுறைகெழுபலரும்போற்றுஞ்சுந்தரவிடங்கன்வந்தா
னிறையவன்வந்தான்வந்தானென்றுசின்னங்களூத. (௬௮)

திரிபுரமெரித்தவாறுஞ்சிலைமதற்காய்ந்தவாறுங்
கரியதளுரித்தவாறுங்காலனைக்காய்ந்தவாறும்
விரிமலர்க்கிழவன்சென்னிவிழுத்தியவாறுசெய்த்தோ
ரரியுடற்கலர்த்தவாறுமமைத்தொருவகையோர்பாட (௬௯)

கடிமலரொன்றிட்டாலுங்கனிந்தோர்பச்சிலையிட்டாலு
நெடியவன்பிரமனுகிலத்தினின்றயர்த்தியின்னு
மடியவர்க்கெளியராகியருள்செயுந்திறமனைத்து
மொடிவறப்பாடல்செய்தாங்கொருவகையார்கள்பாட. (௭௦)

சங்கரசம்புபோற்றிசச்சிதானந்தபோற்றி
பொங்கரவணிந்தமுக்கட்பூரணபுராணபோற்றி
செங்கரமழுமானேந்துஞ்சிவபரஞ்சோதிபோற்றி
நங்கரவறுப்பாய்போற்றியெனப்பலர்நயந்துபோற்ற. (௭௧)

செறிபலகோணாறண்டந்திகழ்பலகோணுத்தண்ட
மறிவருஞ்சிவிறியாலவட்டமொள்ளொலியலேற்றுக்
குறிகெழுதுவசஞ்செம்பொற்குடைமணித்தோரணங்க
ளறிதருமறறயாவுமடர்ந்தனகாடுசெய்ய. (௭௨)

வானவரியக்கர்சித்தர்விந்தியாதரர்வயப்போர்த்
தானவர்கிருதர்நாகர்கின்னரர்தடந்தோட்பூத
ரானவர்கருடர்மாமையமைந்தகாந்தருவர்சொல்லா
வேனவர்கணங்களெல்லாமெய்சணுந்துவன்றிமல்க. (௭௩)

மணிபலவிறைக்கின்றுரும்வயங்குபொன்வீசுவாரு
மணிமலரளவிலாதவள்ளுபுபொழிகின்றுருங்
கணிதமில்விளாகீர்சாந்திற்கலைத்தனருற்றவாரும்
பணிபலவின்னுமாற்றும்பான்மையர்பல்லோர்மொய்ப்ப. (௭௪)

இன்னவைபலமேன்மேலுமியம்புதற்கரியவாகப்
பொன்னலந்திகழும்வானம்புழுங்குபுசமழ்த்தேமாற
நன்னலமரியதென்றுஞாலமிக்கிறுமாப்பெய்தக்
கன்னவிரேளான்வந்துகாரோணம்புகுந்தானன்றே. (௭௫)

எண்ணியவெண்ணியாங்கேயியற்றிடுவலியொருங்கு
நண்ணியவானநாடுநயநதகம்மியனைக்கொண்டு
புண்ணியவளங்கூராதிபுராணருக்கடுத்ததென்பா
லண்ணியசெம்பொற்கோயிலழகுறச்சமைத்தபின்னை. (௭௬)

செழுநலம்பொலிகாரோணத்திருப்பெருவீதியெல்லாம்
பழுதறப்பந்தரிட்டப்பந்தரின்கால்கடோறுங்
கொழுவளைக்கதலிகநதிகுலவுசெங்கன்னல்யாத்து
வழுவிறோரணமுந்தூக்கிவிதானமும்வயங்கக்கட்டி. (௭௭)

தங்குசுந்தரவிடங்கர்தமையெழுந்தருளப்பண்ணிப்
பொங்குநாற்றெருவுஞ்சூழ்ந்துபோதரப்புரிந்தபின்னர்
கொங்குசார்கோயில்புக்குக்குலவரியாசனத்தி
லங்குமேவுறத்தாபித்தானுருபிரனைத்தும்வாழ. (௭௮)

நிதியிலெவுதிரிஞேங்குஞ்செந்நெலங்கழனிசூழூர்
குறிகிளர்வருக்கைதேமாவாதியகுலவிநாறு
மூறிமலர்பயிலுஞ்சோலைமொய்வளத்துடலையின்று
மறிதரவிடங்கர்க்கென்றேயமைத்தனனளவிலாத. (௭௯)

சதுமுகனுதியாயவுயிரொலாந்தழுவியுய்ய
மதுமலர்க்கடுக்கைமாலைவள்ளலாரருளிச்செய்த
முதுமொழியாகமத்தின்முறைசெய்நித்தியமுன்மூன்றும்
புதுமையினடக்குமாறேபுரிந்தனன்புலியாள்வேந்தன். (௮௰)

அருமறைமுடியின்மேவுமழகியவிடங்கருக்குத்
திருமலிசிறப்பினுவித்திங்களினத்தநாளிற்
பொருவிடைக்கொடியொன்றேற்றிப்புவனங்கண்முழுதும்போர்ப்பப்
பெருகுறுமீரொன்பானுட்பிறங்குமெண்கொடியுமேற்றி. (௮௧)

இருபத்துநாலாநாளினிரதமூர்விழாநடத்தி
யருமைத்தாழுவொன்பானுளமைந்தவுத்திரத்திற்றீர்த்தன்
திருவத்தினுயிர்களெல்லாஞ்செழித்திடநல்கச்செய்து
மருமொய்த்தவலங்கறசாலீசுகன்மிகமகிழ்ச்சிபூத்தான். (௮௨)

விடங்கர்தந்திருவிழாவையின்னணம்விருப்பிற்செய்து
மடங்கரும்வாளுட்டுள்ளார்வருதினி † மன்னர்யார்க்கு
மடங்கருமுவகைபொங்கவளவிலாமுகமன்செய்தான
கடங்கலுழ்கபோலச்சிற்றக்கந்துகொல்களிற்றுவேந்தன். (௮௩)

அருட்டிருவாரூராதிசிருட்டியினண்ணலாமை
மருட்டிறனறத்தாபித்தமுசுகுந்தனினுமாண்புற்றான்
பொருட்டிறமலிகாரோணபுரத்தழகமையிரண்டாஞ்
சிருட்டியினிறுத்தசாலீசுகனென்றார்தெளிந்தோர்யாரும். (௮௪)

தெளிதரவின்னுமூன்றாஞ்சிருட்டியிலிவன்குலத்தோர்
களிகிளர்மன்னன்றோன்றிக்காமருவிடங்கர்தம்மை
யளிமறைக்குலம்பூசித்தவருண்மறைக்காட்டிற்றாபித்
தொளிகிளர்பெரும்பேறுற்றானும்பராதியர்வியப்ப. (௮௫)

மற்றுமோர்விடங்கர்தம்மைவயங்குநாலாஞ்சிருட்டி
யுற்றிடுநாளவ்வெய்யோனுயர்குலத்தொருவன்றோன்றிக்
கற்றவர்புகழ்ந்துபோற்றுங்காமருதிருநள்ளாற்றி
லற்றமின்றாகத்தாபித்தளவிலாப்பெரும்பேறுற்றான். (௮௬)

இன்னுமோர்விடங்கர்தம்மையியைந்தவைந்தாஞ்சிருட்டி
மன்னுநாளம்மார்த்தாண்டன்குலத்தொருமன்னன்றோன்றிப்
பன்னுநான்மறையும்போற்றும்பைம்பொழிற்றிருக்காறாயி
லென்னுமோர்தலத்திற்றாபித்தீறிலாப்பேறுபெற்றான். (௮௭)

---

† வருதினி - சேனை.

மீட்டுமோர்விடங்கர்தம்மைவிளங்குமாருஞ்சிருட்டி
காட்டுகாவலாதித்தன்குலத்தொருகாவலோன்றி
காட்டுபல்லோரும்போற்றிசயந்தகோளிலியிற்றுபித்
தீட்டியல்பேறும்பெற்றுனிமையவரிறும்பூதெய்த. (௮௮)

பின்னுமோர்விடங்கர்தம்மைப்பிறங்குமேழாஞ்சிருட்டி
மன்னுநாண்முன்னஞ்சொற்றமார்த்தாண்டன்குலத்தோர்மன்னன்
றுன்னுமாதவர்சஞ்சூழ்பெருந்திருவாய்மூரி
லுன்னுமாதாபனஞ்செய்தொழிலிற்பல்பேறும்பெற்றுன். (௮௯)

எழுவிடங்கரையுமிவ்வாறெழுசிருட்டியினுந்தாவு
மெழுபரித்தேரோன்மைந்தரொழுவரும்பெருமையாய்ந்த
வெழுபெருந்தலத்தின்கண்ணுந்தாபிதஞ்செய்திலச்சிம்பா
லெழுசத்ர்க்குலத்துமேன்மைபிற்றெனவியம்பலாமோ. (௯௦)

வேறு.

புலமாரும்பதஞ்சலியும்பொருபுலிக்கான்முனிவானு
நிலமாரும்பெருந்தில்லையம்பலத்தினின்மலன்பொற்
கலமாருமுலைகாணக்காட்டுநடங்கண்டுவப்பார்
நலமாருமனையர்தவநாமேயோபுகழ்கிற்போம். (௯௧)

கண்ணியகுக்குமபஞ்சாக்கரநடனங்காண்பதற்கு
நண்ணியவாஞ்சையராகிநாகைக்காரோணமடைந்
தெண்ணியவானவதீர்த்தமுதலியவெத்தீர்த்தநுந்
தண்ணியபோழியினுஞ்சார்ந்துபடிந்தனரொழுந்தார். (௯௨)

வெள்ளியநன்னீற்றிறெளுடுமேதருகண்மணிபுனைந்து
தெள்ளியவான்சுவையமுதகடேசமுதற்செறிந்தள்ள
வள்ளியமாத்தலமனைத்துஞ்சென்றுசென்றுமகிழ்ந்திறைஞ்சி
யுள்ளியகாரோணப்பேருற்றசினகரம்புகுந்தார். (௯௩)

அருந்தவர்தமுளத்தொளியையனைத்துயிருமொருங்கீன்ற
கருந்தடங்கணுமைபாகக்காரோணத்தாரமுதைப்
பொருந்தவடிதொழுவார்தம்பொருளாயபரம்பொருளைத்
திருந்தமகிழுறக்கண்டுசெங்கைகுவித்திறைஞ்சினார். (௯௪)

மறைபெறுமோர்பெருங்கூட்டில்வாழுமிளம்பசுங்கிளியை
நிறைதவத்தோருளப்புலத்துநோமுளைத்தசுவைக்கரும்பைக்
கறைதபுக்குங்கருந்தடங்கட்கருங்குயிலைக்கண்டுதொழு
தகிறபெருஞ்சுந்தரவிடங்கர்முன்சென்றாருந்தவத்தோர். (௯௫)

வின்றுநிதலைசாய்த்துவெள்கவிரிதிரைக்கடல்சூழ்
மன்றுநிதலையெடுத்துவாழ்வுபெறமாதவத்தோ
ருன்றுமிகாரோணத்துற்றொளிர்சிந்தாமணியைக்
கண்டுபெயன்படைப்பக்கண்டுமகிழ்ந்தனர்தொழுதார். (௯௬)

இளங்கதிரின்மணிமுடியுமெதிர்ப்படுங்கலர்முகமும்
களங்கமில்பொற்குழைக்காதுங்கருணைபொழிதருவிழியும்
வளங்குலவுசெவ்வாயும்வழங்கெழில்கட்கொடிவாரி
விளங்குமனவறைநிறைத்தார்விண்ணினைத்தாரெட்டியிருப்பார். (௯௭)

காலங்கடவருமலிவ்வாறுகண்டிறைஞ்சிச்
சீலங்கொள்பெருமுனிவர்திருநடனதவம்புரிகாலை
யாலங்கொடிருமிடற்றுவிடங்கரவரெதிர்தோன்றிக்
கோலங்கொளெதுவேண்டுங்குறித்ததனைத்தருதுமென. (௯௮)

களிசெயசபாநடனங்காணவிரும்பினமளவா
வொளிசெய்திருமேனியாயுவந்தருளவேண்டுமெனக்
கிளிசெய்மொழியொருபாலார்தனுமதியிற்கிளர்செங்கை
யளிசெய்நடம்புரிதுமெனவருளிமறைந்தனரன்றே. (௯௯)

கலைமுழுதுமையமறக்கற்றுணர்ந்தமுனிவர்மதிச்
சிலையிலொருசெங்கையறத்தெரிதருமுனிந்தருளுமெனத்
தலையமைசுந்தரவிடங்கர்தம்மெதிர்சார்ந்தனரவரு
முலைவின்முழவாதியமொருங்கியம்பும்படிநடித்தார், (௧௦௦)

நானந்தவாதகுழலுமையிமையொருபுறங்கொண்
டானந்தமேயுருவாயமைந்தருள்சுந்தரவிடங்கர்
தேனந்தமலர்தூவியிருவர்களுஞ்சேவிப்ப
மோனந்தவாப்பிறருமுயங்கியுவப்புறநடித்தார். (௧௦௧)

இந்தநடமிந்நாளியாங்கண்டுதொழுதபடி
சந்தமுறவெவ்வுயிருந்தாங்கண்டுதொழுகிடுமா
முந்தவரந்தருகென்றமுனிவரிருவருமிரப்ப
வந்தமிலாப்பரமனுமற்றருகவெனவருள்புரிந்தான். (௧௦௨)

நல்லார்கடாம்பெற்றநாடரியபெரும்பேற்றை
யெல்லாரும்பெறவேண்டுமெனக்கருதிமுயன்றிடவா
ரல்லார்மற்றறிகுறியாரகனிலதென்பசுதையுணர்ந்தாம்
வல்லாரிவ்விருவருமிவ்வரம்பெற்றதிறங்கொண்டே. (௧௦௩)

ஒள்ளியகிண்கிணியொலிக்குமொண்மலர்த்தாளதுகாட்டத்
தெள்ளியசித்தனைமுனிவர்சேவித்துக்களிகூர்ந்து
நள்ளிபவானந்தமெழநயந்தேத்திவிடைகொண்டே
யுள்ளியதம்மிருக்கைமரீஇயுவந்துவாழ்ந்திருந்தனரே. (௧௦௪)

புலிமுனியும்பணிமுனியும்போற்றியினிதுறவேண்ட
வொலிகெழுகிண்கிணித்தாளருதவுவரதத்தின்படியே
நலிவில்சிலைமதிதோறுநலங்கிளராதிரைநாளின்
மலியருளின்சபைநடம்புரிகுவர்மன்னுயிருய்ய. (௧௦௫)

எதுகாணாதொழிந்தாலுமிந்தடமாத்திரங்காண்பார்
மதுமாலைக்குழன்மனைவிமக்களுடன்வாழ்ந்திருந்து
முதுவானப்பெரும்போகமுயங்கியனுபவித்திற்றிற்
சதுவேதன்முதலோருஞ்சாரரியபதஞ்சார்வார். (௧0௬)

அந்திமதிபுனைந்தமுடியழகவிடங்கருக்குயர்செவ்
வந்திமலர்தொடுத்தணியவல்லவரம்மலரொன்றற்
குந்தியெழுபெருங்கற்பமொன்றாகவேறுகைக்கு
நந்தியமர்சிவலோகநண்ணியாழ்ந்தினிதுவப்பார். (௧0௭)

வானாடுவெறுத்துவரிமண்ணாடுதக்கதெனக்
கானாடுபொழில்சூழுங்காரோணம்புகுந்தமர்வார்
தேனாடுமதுப்பொழியுஞ்செங்கழுநீர்விரும்புதலாற்
பானாடுமவைவிருத்திபண்ணநிலங்கொடுத்தாரும். (௧0௮)

கூடுபலவோடைபெருங்குளங்களுறச்சமைத்தாரு
நீடுபுனனிறைத்தாருநிகழ்கிழங்குபதித்தாரு
நாடுமவைசிதையாமனகுவேலியமைத்தாரு
மேடுசெறிமலர்புனிதத்தெடுத்துவந்துகொடுத்தாரும். (௧0௯)

மறிதிரைவாரிதிபுடைசூழ்வையமுழுவதுமொருகோ
னெறிமுறையிற்செலவுய்த்துநெடுங்காலமுறவாழ்ந்து
முறிமலர்க்கற்பகநாடுமுதலியபற்பலநாட்டுச்
செறிபலபோகமுந்துய்த்துச்சிவபதமீற்றடைந்துவப்பார். (௧௧0)

புண்ணியமேமிகத்தழையப்போதுமீரயனங்கள்
விண்ணியல்செங்கதிர்துலாமேடவிராசியின்விரும்பி
நண்ணியவேலைகளானிலங்கெழுபங்குனிமதியத்
தெண்ணியவுத்திரமுறுநாளிவைவிசேடம்படுநாள். (௧௧௧)

இந்தவிசேடம்படுநாளெழில்விடங்கர்தமையாட்டச்
சந்தநறுந்தயிலம்பாறயிரயிர்செங்கழைச்சாறு
நந்தவிரைபடும்பனிநீர்முதலியவுநயந்தளித்தா
ரந்தமிலாதடைபேற்றையாரேயோவறைகிற்பார். (௧௧௨)

தென்புலவாணருக்கியற்றுமருங்கடன்றீர்த்திடற்பொருட்டு
நன்புலமைந்தனைவேண்டிநானிலத்திற்றவமுழப்போ
ரன்புநெகிழ்ந்துருகுவிதமிருந்துநடித்தருள்வானை
யன்புமிகத்தவிராதோராண்டுபணிதரிற்பெறுவார். (௧௧௩)

அருந்தவர்தமுளத்தொளியாமழகவிடங்கரைப்போற்றித்
திருந்தமகப்பெற்றுவத்தலின்மைமிதற்கையமிலை
பொருந்தவழிபடுநாளிற்புனற்றுழாய்முடியார்க்குக்
கருந்தடங்கணுமையளித்தகாதல்வரம்பொய்போமோ. (௧௧௪)

அருமறையின்முடிப்பொருளாயமருமழகியவிடங்கர்
தருமசரித்திரஞ்சிறிதுசாற்றினுமயோத்திவளர்
பெருமனுவின்குலத்துதித்தசரதன்பெட்பொடுபுகுந்து
பொருமலறச்சனிப்பதிட்டைபுரிந்ததிறமெடுத்துரைப்பாம். (ககரு)

சுந்தரவிடங்கப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உக ஞு திருவிருத்தம்-கசகக.

## சனிப்பிரதிட்டைப்படலம்.

புதையிருள்கிழிசுடர்போன்றநந்திதா
ளிதையம்வைத்தொருசனற்குமாரனைத்துபு
ததைபுகழ்த்தசரதன்சனிப்பதிட்டைசெய்
கதையுரைத்திடுகெனக்கழறுவானவன். (க)

நலமலிகோசலநாடளிப்பவன்
வலமலியயோத்தியின்வாழும்வாழ்க்கையான்
குலமலிபரிதிதன்குலத்திற்பூத்தவன்
நிலமலியுயிரெலாங்காக்குநீர்மையான். (உ)

கலைமுழுதுணர்ந்தவன்கருதலாருயி
ரலைசெயும்வாளினனருளின்வாழ்க்கையான்
றலையமைநீதியான்றடித்ததோள்வட
மலைபுரைதசரதமன்னனென்பவன். (ங)

அன்னவன்மன்னுயிரனைத்துமோம்பிடு
நன்னலத்தமைந்துகோனடாத்துநாள்வயிற்
பன்னருஞ்சோதிடப்பயிற்சிமிக்கவ
ரொன்னருமடைந்தனரிருக்கைநல்கினான். (ச)

ஒருங்குநீரடைந்ததென்னுணர்த்துவீரென
வருங்குறைத்தெனவுலகளிக்குமாரருட்
பெருங்குணத்தவவுயிரனைத்தும்பேதுற்று
முருங்குவதாக்குநாண்முளைக்குமேலரோ. (ரு)

விராவுமற்றஃதெவனெனவினவிடிற்
றராதிபவுரோகணிசகடம்பேதித்தே
யிராவுகதிர்மகனியங்குநீர்மையாற்
பராமழைபன்னிருவருடம்பாறுமால். (சு)

மழையொருபன்னிரண்டாண்டுமாறுமேற்
குழையுயிர்படுந்துயர்கூறல்வேண்டுமோ
கழைசுளிகளிற்றினாய்கருத்திதேனெனப்
பிழையில்சோதிடத்தவர்பேசிப்போயினார். (எ)

மற்றதுகருத்துறமதித்தமன்னவ
னுற்றவித்துயர்க்கெவனொழிவென்றாய்ந்தனன்
செற்றவெங்கதிர்மகனமருந்தேமுறக்
கொற்றவன்றேர்மிசைக்கொண்டுபோயினான். (௮)

கடுவிசையோடுதேர்ககனஞ்செல்வுழி
வடுவிறன்குலமுதல்வழியிற்றோன்றினை
னடுதிறறகளிறறினானவலைத்தாழ்ந்தனன்
முடுகியிங்கடைதரமுடிந்ததென்னென்றான். (௯)

உயிர்திறம்பாவகையொருங்குகாத்திடுஞ்
செயிரறுவிரதநான்சேரக்கொண்டுளேன்
கயிரவப்பகைவநின்காதற்சேய்வெளி
றயிருடைப்பதுவெனவுடைத்தான்செய்வான். (௧௦)

தருதிறலுரோகணிசகடம்பேதித்து
வருதிறலடைந்தனன்மற்றவன்றொடும்
பொருதிறல்புரிந்ததுமாற்றப்புகுதிசெய்
தொருதிறலாழித்தேராயுற்றேனென்றான். (௧௧)

என்றலுமவன்கருத்தெய்த்தசூரியன்
கன்றமராற்றிடிற்கழியுநாள்பல
பொன்றல்செய்வற்கடம்போர்துமீனுமா
னன்றலவிதுவினுநவிலக்கேட்டியால். (௧௨)

கோணிலையனைத்துநங்குழுகளுவையே
நாணிலையியக்கமுநவிலில்வேறுகொல்
வீணிலைபுடற்றலின்விழைவதென்னையொள்
வாணிலைதடற்றினுய்மதித்தல்செய்தியால். (௧௩)

முனிசமராற்றுபுமுடிக்குமாண்பினுங்
கனிதரவடுத்துறக்கலந்துகண்ணிய
தினிதுறமுடிந்திடலேற்றமாகுமாற்
றுனியறவுயிர்க்கருள்சுரத்தல்பூண்டுளாய். (௧௪)

ஓங்குசீர்நாகைக்காரோணமுற்றருட்
பாங்குமேவுறப்பரம்பரனைப்போற்றுபு
தேங்குபேரருள்கொடுசெயிர்க்கும்பன்றலை
யாங்குநீதாபித்தர்ச்சனையியற்றிடில். (௧௫)

எண்ணியகாரியமெளிதினெய்தலாங்
கண்ணியதல்லவுங்கைக்கனெல்லியா
வண்ணியவதுபுரிந்தருள்விரர்விட
மண்ணியமணிநிகர்வடிந்தபோவென்றான். (௧௬)

உற்றதன்குலமுதலுரைத்தவாய்மொழி
யற்றமின்றெலனவகத்தமைத்தனன்
கற்றவர்புகழ்கழற்கானரோந்திர
னற்றவர்மருவுங்காரோணநண்ணினான். (கஎ)

மேதகுபெரும்புகழ்விருத்தகாவிரித்
தீதறுசங்கமெஞ்செறிந்தழுழ்கினான்
போதரமற்றுளபுனலுமாடினு
னாதரத்தொடுந்தலமனைத்தும்போற்றினான். (கஅ)

மருந்தமுண்டமரரையன்றுவாழ்வித்த
பெருந்தகைப்பரமனைப்பேணிப்போற்றுபு
கருந்தடங்கண்ணியைக்கலந்துதாழ்ந்தன
னருந்தவத்திறலுடையயோத்தியாண்டகை. (க௯)

உள்ளநெக்குருகிடவுவகைபொங்கிடத்
தள்ளரும்விழிப்புனலுரையாயிட
வெள்ளநன்முடியெழில்விடங்கத்தாணுவாம்
வள்ளலைத்தொழுதெழுஉவழுத்தல்செய்தபின. (உ0)

அவனருளடைந்தவற்கயலிராக்கதத்
தவலருந்திசைத்தளிசமைத்துக்காரியை
நவமுறத்தாபித்துநயக்குநீனிறக்
கவலருங்கலைநலங்கவினச்சாத்தியே. (உக)

இலம்படுமூரலுஞ்சிறப்பலூட்டுபு
நலம்படுபூசனைநயக்கவாற்றலும்
வலம்படுசவுரியவ்வுருவின்றேவரைக
குலம்படுதோளன்முன்குறுகினின்றனன். (உஉ)

மன்னநின்பூசனைமகிழ்ந்தனேனுளத்
துன்னியவரமெவனுலாத்தியாலெனத்
தன்னிகருரோகணிசகடம்பேதித்தா
லின்னலினமுறுமெவ்வுயிருமேந்தலே. (உங)

அதுபுரியாதியென்றரசன்வேண்டலு
முதுமகனியைந்தனன்மொழிந்ததன்றியு
மதுமலர்த்தாரவென்வாரத்திவ்வயிற்
புதுமலர்கொண்டெனைப்போற்றுவாரொலாம். (உச)

கலங்கயான்புரிதுயர்கைக்கொளாரென
வலங்கொருவரமுநன்கருளியவ்வுரு
விலங்குறுதமர்ந்தனன்சந்தில்வேந்தனு
மலங்கலிலயோத்தியிற்புக்குவாழ்ந்தனன். (உரு)

மறைபூசித்தநகர்த்தென்பான்மகிடற்காய்ந்தாளமர்நகரிற்
குறைதீர்பரவையடைத்திலங்கைகுறுகிக்கொடியோன்றனைமாட்டி
நிறைசால்புடையாடனைமீட்டுநேயத்தவரோடிங்கணைந்தே
யறைசாலிந்தக்குறிபோற்றியயோத்தியடைந்துவாழ்ந்திருப்பாய். (கஎ)

மதியொண்பரிதியுபராகமத்தோதயமகோதயமற்
றதிபுண்ணியகாலங்களினிவ்வொலியாகினைறகடனீழ்கித்
துதிகொணின்றற்பதிட்டைபுரியிராமநாதனடிதொழுவார்
பதியுங்கொடியபாதகங்கள்பலவாமேனும்பாற்றிடுவார். (கஅ)

தீயவரக்கன்றனைமாட்டிஞ்செயனிற்களித்தோமற்றுமுள
வாயவனைத்துநீவிருவியவாறளித்தோமென்றருளிப்
பாயபுகழ்நம்மான்மறைந்தான்பையுணீங்கிநனிமகிழ்ந்து
தூயகுணத்தான்றேவிபுரம்படர்ந்தான்சேனைசூழ்வரவே. (கக)

ஆழிவரைகொண்டடைத்திலங்கையகத்துப்புகுந்துகொடியோனைப்
பாழியமைந்தசேனையொடும்படாகவபூமியிற்படுத்து
வீழிபொருவாய்ச்சானகியைமீட்டுவிமானமேற்கொண்டு
வாழிதுணைவர்பலரோடுவளஞ்சாறுகைபபதியடைந்தான். (உ0)

வேறு.

நாகைமேவிநயந்துபரவையிற
பாகைநேர்மொழிபைந்தொடிச்சீதையோ
டோகைமேவவுறவிதிமூழ்கினன்
வாகைவெஞ்சிலைவள்ளலிராகவன். (உக)

அருந்தவத்தருளத்தமராதியைக்
கருந்தடங்கணுமையொடுங்கண்டுதாழ்ந
திருந்தகோலவிடங்கர்முனெய்துபு
திருந்துநெஞ்சநெகிழ்ந்திடச்சேவித்தான். (உஉ)

இராமமோருருக்கொண்டியங்குற்றன
விராமலர்க்குழற்சீதையொடெய்தியே
யிராமநாதன்பதமுமிறைஞ்சிவில்
லிராமன்மூதூரயோத்தியையெய்தினன். (உங)

ஆங்குவேதியராதியர்சூழ்தரப்
பாங்குமாமுடிசூடிப்பலரோர்களும்
வீங்குபோகத்தின்மூழ்கவியனிலந்
தாங்குமாதரவிற்றகவாழ்ந்தனன். (உச)

இராமநாதர்சரிதமியம்பினும்
பராவிரண்டாயிரமருப்புப்பருஉக்
கராசலத்துக்கயிலாயநாதனுர்
விராவுமேன்மையெடுத்துவிளம்புவாம். (உரு)

இராமநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உக இ திருவிருத்தம் - கஅகஉ.

# கயிலாயநாதப்படலம்,

நாடுசேர்ச்சனற்குமாரமாமுனிவரனந்தி
நீடுநாண்மலர்ப்பதந்தொழுதிருண்மலநெரியச்
சாடுமாகயிலாயநாதப்பெருந்தகைதன்
பாடுமான்மியம்பகரெனவன்னவன்பகர்வான். (௧)

தோற்றமீறிலாச்சிவபிரான்றுணையடிக்கமல
நாற்றமோடலரளிப்புனைகுமனக்குளத்தான்
சாற்றமேவுபன்முனிவராந்தாரகைநாப்ப
ணேற்றமார்முழுமதிபுரைபராசரனென்பான் (௨)

கஞ்சநாண்மலர்மேலவனுலகமுங்கமலத்
தஞ்சமார்பிறனுலகமுந்தன்னுளத்தமையா
னஞ்சமாரமுதாக்கினோனருடனைநண்ணிற்
றஞ்சமாக்கிடுநாகையம்பதிவந்துசார்ந்தான். (௩)

தேவதீர்த்தநன்காடிநீறணிந்துவெந்திய
பாவகாரியர்கருதொணுப்பழம்பரம்பொருளை
மேவநேர்சென்றுபருகுவான்போன்றிருவிழிநீர்
தூவமும்முறைவலஞ்செய்துபன்முறைதொழுதான். (௪)

எழுதமோவியமெனுந்திருவுருவெடுத்துலக
முழுதமோம்பிடுங்கருந்தடங்கண்ணிதன்முன்போய்த்
தொழுதுசுந்தரவிடங்கர்பொற்பாதமுந்துணைந்து
பழுதுதீர்தரப்பழிச்சுபுபன்முறைபணிந்தான். (௫)

அங்குநீங்கிநல்லமுதகும்பேசனையடுத்துப்
பொங்குகாதலிற்போற்றுபுமற்றவர்குணபாற்
றங்குதூயவாச்சிரமமொன்றமைத்தனன்றவத்தி
னெங்குநாடியிக்காயினுந்தனக்கிணையில்லான். (௬)

அறியவாற்றியவாச்சிரமத்தினிதமர்ந்து
வெறியவாய்விடயந்தபப்பொறியைந்தும்வீட்டி
நறியதாமனநளினத்துக்குறியொன்றுநவிலாக்
குறியதாஞ்சிவக்குறிபதிதரும்படிகொண்டான். (௭)

ஒளிசெயெண்ணிரண்டாயிரங்கோடிகளூற்றுக்
களிசெய்மாகயிலாயநாதனையுளங்கருதித்
தெளிசெயாயிரவருடம்வன்சிலையெனவிருந்தா
னளிசெய்தம்பிரானன்னவற்கருள்செய்வானமைந்தான். (௮)

கந்தமாமலர்க்கடவுடன்பதமுராட்கருதார்
சிந்தநோக்குமொண்மேனியான்பதஞ்சிதைகாது
நந்தமேலெழுந்தொளிமிகப்பரப்பிநலத்த
தந்தமாதியிலானினிதமர்பெருங்கயிலை. (௯)

பரமதத்தாயதற்குறிவேடமேபயின்று
மரமுழக்கெழினதிப்பெருவாஞ்சையுள்ளமைத்துத்
திரமுறச்சிவனடிமலர்கருதியதிறத்தார்
கரவறப்பொலிபிடங்களுங்களுவியதொருபால். (௧௯)

ஆக்கைசவர்முற்பற்பலசைவருமடுத்துப்
பூதிமேவியமேனியும்புனல்பொழிகண்ணுஞ்
சோதிதாண்பதிசிக்கையுமாயருடுதைநதார்
நீதிவாய்நதினிதமரிடங்கிலவியதொருபால். (௨௦)

மன்னுமின்னமாகயிலைமால்வரையதிஞருப்
பண்ணுமாயிரங்கோட்டதப்பருப்பதமேலாற்
றன்னுபேரொளிநவமணிகுயிற்றிய ஞ்சுடர்சேர்
மினனுகேசரிபாய்குபுவிளநகுபீடத்து. (௨௧)

மாசுதீர்நதவெண்புளிங்கெனவயங்குறுமேனித்
தேசுசானுநாலெட்டிலக்கணங்களாறறிசழு
ஏசுமாமையீசானமுன்முகமைநதனமேதாய்
பேசமற்புதநிலத்தொடுநதிசைதிசைபிறங்க. (௨௨)

அஞ்சுகூறுசான்மூவிழிதனித்தனியிலங்க
மஞ்சுமேயசெநதாமனாமலாக்கரம்பத்து
நஞ்சுவாண்முதலொருபதுநதனிததனிரயக்க
விஞ்சுவெள்ளியபூணூனமாபிடைவிளக்க. (௨௩)

அறறமேதுமின்முடிமிசைச்சிறபிறையலங்கச்
சொறறவாகமப்பாப்பிடைத்தொகுத்தனவெல்லாம்
பெறறகோலததிறறிகழ்தரப்பிறங்குதைத்திவக
ளூற்றபூசததற்காட்சிதநதருளினனுயோன். (௨௪)

வந்தநாதனைக்கண்டெழுந்துறுவரன்வணங்கி
யந்தமில்லாதிபெறறிலனழுதுகாண்பதற்கென்
றுநதவெளணியுளைக்குறெநக்குடைதரவுருகி
நந்தமுனனினறுநாக்குளறிடத்துதிநவிலவான். (௨௫)

கலைமுனனூறியகருவிகட்குநகாரிருள்வர
யலைடனுகட்குக்கன்மமாநதொடக்கறப்போகந்
தொலைவுசெய்துழியாவின்பததுறையருமே
தலைவநினமலதறபரநினனடிபோற்றி. (௨௬)

அருந்தவம்புரியோகியாகத்திருளகற்றி
பொருநதவாதியீறிலாதமர்பரிதியேபோற்றி
திருந்தலைவமபொறிசெறறிருவினைச்சமஞ்செறிந்தார்
வருந்தநோக்குறுதவர்க்கெதிர்வள்ளலேபோற்றி. (௨௭)

பொறிபுலன்கழன்றமைதாப்போதமேபொலிந்தா
ரறிவினிற்குறுவானந்தவெள்ளமேபோற்றி
குறிகுணங்தவிர்பிரமமென்றருமறைகூறச்
செறியரும்பொருட்சின்மயப்பரஞ்சுடர்போற்றி. (உஅ)

மறையினந்தமுந்தொடரொணுவள்ளலேபோற்றி
யறையுமாலயனுதியரறியொணுய்போற்றி
நிறைவளம்படுநாகைக்காரோணத்துநிலாவி
யுறைபெருங்கயிலாயமேவுத்தமபோற்றி. (உகூ)

என்றுபோற்றிடுமுனிவனுக்கிருவிழிகளிப்ப
வன்றுநின்றவனவன்முகநோக்கிமிக்கன்பா
லொன்றுமுள்ளத்தநீபுரிபூசனையுகந்தோ
மின்றுவேண்டியதெவனுரையெனவவனிசைப்பான். (௩0)

அடியனேன்றவம்புரியவீங்கிழைத்தவாச்சிரமத்
தொடிவினிபெருங்கயிலையோடுறைதரல்வேண்டு
முடிவதாயுளவாயுளின்முறைதபயானிவ்
வடிவினித்தமாய்மருவவும்வேண்டுமென்றிரந்தான். (௩க)

இரந்தவாபெருங்கயிலையோடுறைகுதுமென்றுஞ்
சுரந்தமாதவமித்தலத்தியற்றியதுணிபாற்
பரந்தநித்தியத்துவமுநீபெறுகெனப்பணித்து
வரந்தவாவவற்பார்த்திதுபின்னரும்வழங்கும். (௩உ)

நாலெனப்புகல்யுகமிரண்டாயிரநடந்தாற்
சேலெனப்பிறழ்கண்ணமர்நாவற்கோர்திவசம்
பாலெனப்படாவதுபதினேந்தொருபக்க
மாலெனக்கொளாயஃதிரண்டுற்றதுமாதம். (௩௩)

அந்தமாதமோர்பன்னிரண்டுற்றதோராண்டாம்
பந்தமில்லவவஃதைம்பதுற்றதோர்பரார்த்தங்
கந்தவத்தகுபரார்த்தமோரிரண்டுறிற்கற்ப
முந்தவத்தினமேமலர்மிசையவனுடுங்கும். (௩ச)

இந்தவண்ணநான்முகனொருகோடியரிறந்தா
லந்தமாயவற்கொருதினமதுமுந்நூற்றறுபா
னந்தமேவலோராண்டதூறுநடந்தாற்
பந்தவாமுலைத்திருமகண்மணாளனும்பாறும். (௩ரு)

செயிரின்மாறபுங்காலநின்றுடம்பிடைச்செறிந்த
மயிரோர்மூன்றரைக்கோடியுளொன்றுபோய்மாயு
முயிர்வியக்குமிவ்வாரிணைக்குதவினமாலென்
றயிர்கொளாழிசஞ்சயின்றவன்பின்றுமீதருளும். (௩சா)

அவனிவாழ்பவரியாவரோயாயினுமடைந்து
தவலிலாதவிப்பெருங்கயிலாயத்தைத்தரிசித்
துவமைதீர்தரத்தொழினவமரணத்தையொழிவார்
நவமிலாம்பலபோகமுநயந்துதுய்த்திடுவார். (கஎ)

என்றுதம்பிரான்வாயிலோரீரிரண்டிலங்க
வொன்றுமப்பெருங்கயிலையிற்றிப்பியவுருவர்
துன்றுசோதிசாலிலிங்கமாயமர்ந்தனன்றெழுவார்
கன்றுவெம்பவத்தொடக்கறுத்துயர்கதிகாண்பார். (கஅ)

பராசரப்பெயர்முனிவரன்றவப்பயனாக
விராவுமாகயிலாயநாதப்பிரான்மேன்மை
யொராதவன்பினோதினமெழுமுனிவர்முற்பல்லோ
ராரவணிந்தவற்பூசித்தவண்ணமுமறைவாம். (ககூ)

கயிலாயநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உச இ திருவிருத்தம - கருபக.

## எழுமுனிவர்முதலியர்பூசித்தபடலம்.

முழுவலிச்சனற்குமரமுனிவரனருகிபிரான்
செழுமலர்ப்பதம்போற்றித்திகழ்பெருங்காரோணத்
தெழுமுனிவரர்முதலியோரினிதருச்சித்த
பழுதிலற்புதஞ்சொலெனவன்னவன்பகருவனால். (க)

மன்னியபெருந்தவத்துவசிட்டன்முனெழுவோரும்
பன்னியபதிஞானப்பண்புணர்ந்தும்பொருட்டு
முன்னியதிருநாகைமூதலத்துறப்புகுந்தார்
நன்னியமத்தமரதீர்த்தநன்காடினரால். (உ)

புனிதவெண்ணீறணிந்துபோற்றுகண்மணிபூண்டு
கனியுளத்தெழுத்தைந்துங்கணித்தனர்காரோணத
தினிதமர்பெருவாழ்வையிறைஞ்சுபுகருந்தடங்கட்
பணிவளாமகள்பாதம்பணிந்துபினிறுசெய்தார். (ங)

அத்திருத்தளியெழுவாய் ‡ ஆவிருதியிற்குணபாற்
பத்தியிற்சிவலிங்கப்பதிட்டைசெய்தருச்சித்துச்
சித்தியெய்தினர்நினைநததிருப்பெருஞ்சிவஞான
முத்தியெய்துவரனையமூர்த்தியைத்தொழுவோரே. (ச)

முழுவலிபெறவேண்டிமுயன்றபிராமிமுத
லெழுவருமாங்கெய்திமையவர்புனல்படிந்து
செழுமுனிவரரிலிங்கத்தென்றிசையிலிங்கநிறீஇ
வழுவறப்பூசித்துவள்ளறனருளாலே, (ரு)

‡ ஆவிருதி-பிரகாரம.

எண்ணியவலிபெற்றாரிலகுறுமவ்விலிங்க
நண்ணியதொழுசீலநயந்தவர்பகைமுருங்கக்
கண்ணியவலிபெற்றுக்கருதியபோகமெலா
மண்ணியவொருங்கடைவாரமாருமதிசயிப்ப. (சு)

துன்றியபுகழ்க்கங்கைசுந்தரவிடங்கருக்குத்
தென்றிசையோரிலிங்கஞ்சிவனுறப்பதிட்டைசெய்து
நன்றியினருச்சித்துநயந்துவந்தாடிடுவார்
கன்றியவிடுபோவங்கழிதரவரம்பெற்றாள். (எ)

பொலிதருமவ்விலிங்கம்போற்றுபுதரிசிப்பார்
கலிதிரைபரப்பியெழுங்கங்கையையடைந்தாடு
மெலிவறுபயன்பெறுவார்விலகருந்தீவினையு
நலிதரவுயர்புற்றநன்னலத்தினிதமர்வார். (அ)

அத்தகுமிலிங்கத்தின்றென்றிசையமுற்கடவு
ளுத்தமவிலிங்கமிரீஇயுரனுறப்பூசித்துத்
தத்துறச்சுடுதலிலைவினைதபப்பெற்றான்
பத்தியினதுதொழுவார்பாறுவர்பாவமெலாம். (கூ)

இருந்தவத்துயர்புண்டரீகனஞ்சலித்தேத்தும்
பெருந்தகைநிருதத்திற்பிறங்குமோரிலிங்கமிரீஇப்
பொருந்திறற்கூரவான்போயவனாட்குகவே
ளருந்தவத்துயர்பூசையாற்றினனமுகுறவே. (க0)

அற்புதப்பூசைபுரிந்தாரருணனிபெற்றான்
பொற்புயராறுமுகன்போற்றியவவ்விலிங்கங்
கற்புயர்கலைஞானங்கரிசறக்கொடுத்தலொடு
பற்பலபெருந்திருவும்பாலிக்குந்தொழுவார்க்கே. (கக)

பெருவலிச்சூரனுரம்பிளந்தவனருச்சித்த
திருமலியிலிங்கத்தின்றென்றிசையோரிலிங்க
மருமலர்ப்பெருங்கோயின்மாமகடாபித்துப்
பொருவரும்பூசைசெய்துபுணர்ந்தனடிருமாலே. (கஉ)

பொறியருச்சனைபுரிந்தபுண்ணியவிலிங்கத்தை
நெறிமுறைதொழுதேத்துநியதியரிலம்பாடு
முறிதரப்பெருந்திருவமுயங்குபுபல்கிளையுஞ்
செறிதரவொப்புரவிற்சிறந்தவராய்ப்பொலிவார், (கங)

இன்னமுநாம்பூசையியற்றியவிலிங்கமுதற்
பன்னரும்புகழிலிங்கம்பலவுளகாரோணத்
துன்னரும்பெருமையெவருரைப்பவெனமுடித்தா
னன்னலச்சனற்குமாரனயந்தடிபணிந்தெழுந்து. (கச)

தெரிந்தவித்துணைகொண்டேசிறந்ததித்தலமென்று
விரிந்தமெய்ப்புகழ்க்காயாரோகணம்விருப்புற்றே
னரிந்தவெவ்வினையடிகேள்விடையளித்தருள்கவெனப்
பரிந்தநெஞ்சினனாகிப்பண்புறப்பெற்றெழுந்தான். (௧௫)

தலமலிகடனாகைக்காமருகாரோணம்
புலமலிதரப்புகுந்துபொருந்தியதீர்த்தமெலா
நலமலிதரத்தோய்ந்துநலங்கிளர்தலமனைத்தும்
வலமலிதரப்பணிந்துமன்னியமகிழ்ச்சியனாய். (௧௬)

கருந்தடங்கண்ணியொடுங்கலந்தமர்பெருவாழ்வைப்
பொருந்தநன்கடிதொழுதுவிடங்கனைப்பூசித்துத்
திருந்தமெய்ம்மயிர்சிலிர்ப்பச்சிந்தையுநெக்குருக
வருந்தவச்சனற்குமரனனந்தப்பேறுற்றான். (௧௭)

எழுமுனிவரர்முதலோர்பூசித்தவிலிங்கச்சீர்
முழுதுரைத்தனம்வாதராயணன்மொழிப்படியே
செழுமையிற்பொலிநந்திநாதர்தஞ்சிறப்பாதி
பழுதறப்புகறுமெனப்பகர்ந்தனன்புகழ்ச்சூதன். (௧௮)

எழுமுனிவர்முதலியர்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௫ இ திருவிருத்தம் - ௧௫௩௧.

## நந்திநாதப்படலம்.

முன்னுசூதமுனிவனை, மின்னுமைமிசத்தவர்
மன்னுநந்திநாதர்சீர், பன்னுகென்னப்பகருவான். (௧)

சூளதாயகயிலையின், வாளுறுமுன்வாயிலைக்
கோளவாயநந்திமா, காளர்தாமுங்காப்பவர். (௨)

தாயினுள்விநாயகர், மாய்தராப்பிருங்கியும்
பாய்வளங்கொடென்றிசை, வாயில்காக்குமாண்பினார். (௩)

இருமருப்பிடபமும், பெருகுமாற்றன்முனிவருங்
கருதுமேலைவாயிலுக், கொருவிலாதகாவலார். (௪)

விடக்குவாயுறப்பெய. விடக்குமாற்றற்கொற்றியு
மடக்கும்வீரச்சண்டனும், வடக்குவாயில்காப்பவர். (௫)

பேசநீளிக்காவலாம், பாசமுற்றொரீஇத்தரு
வாசனென்னுமாமுனி, யீசனைத்தொழப்புகா. (௬)

ஆசிருக்குமாவயிற், பரசுசற்குநோக்கிலான்
வரசுகோதயப்பொருள், விரசுவளகம்புகா. (௭)

இருப்பதெண்ணியெய்தினன், பொருப்புவில்லிதாடொழா
விருப்பமுள்ளவாபெறாஉப், பருப்பதத்தினீங்கினன். (௮)

ஆநதிவான்மதிச்சடை, நந்திநந்தியாதியோர்
முந்திமேவக்கூவுபு, சிந்தியாதிருந்தழி. (௯)

அற்றமோர்கிலான்முனி, யுற்றசெய்கையுணர்கிலீர்
பெற்றகாவனனறென்றான், பறறவாவெறுப்பிலான். (௧0)

இனையகுற்றமெய்தலாற், றனையமேதினிக்கணே
நினையமேவுவீரென்று, னனையவாவொர்பாதியான். (௧௧)

நந்தியாதியாவரும், புகதிமாழ்கிவீழ்ந்தன
ருந்திருடுவேணியாய், சிந்தியாததீமையால். (௧௨)

இந்தவாறருளினாய், பந்தமோவியாமெலா
முந்தநின்னைமேவுநா, ளெந்தநாளிரங்குவாய், (௧௩)

என்றுநைந்துவேண்டலுங், கன்றுமானமழுக்கையா
ரன்றுமிககருளுற, நன்றுகூறுவாரரோ. (௧௪)

நாகைமேவிநம்மடி, யோகையாலருச்சியா
வாகையாயதீங்கற, வாகைமேவிவமமினோ. (௧௫)

பண்டுபோலமேவலாங், கண்டுகொள்ளுவீரெனத்
தொண்டுகொண்டசுந்தரன, விண்டுநல்கினனவிடை. (௧௬)

ஓகைமேவியாவரு, மீகைநாடுமினா ர த்
தோகைபாகாமேவிய, நாகைவந்தநண்ணினார். (௧௭)

தேவதீர்த்தமாடினா, ரோவநேருமாபதித்
தீவநேர்தெரிந்தனர், பாவநந்தம்பாறவே. (௧௮)

அருந்தவத்தராவியைத், திருந்தநின்றதேவியைக்
கருந்தடங்கணம்மையைப், பொருந்தவன்பிறபோற்றினார். (௧௯)

சுற்றுமுள்ளதலமெலாம, பற்றுமேவச்சென்றுசென்
றுற்றுநோக்கியேத்தினார், கற்றுவல்லகாட்சியார். (௨0)

வேறு.

மேயகாரோணத்தெனகீழ்வியன்றிசையமரர்போற்ற
வாயதாமொருகுரோசத்தலங்குமாச்சிரமமொன்று
ஆயுவான்சித்தாபல்லோர்துதைதலாற்பன்னூற்கேள்வி
யேயயாவோருஞ்சித்தாச்சிரமமென்றிசையாிற்பர். (௨௧)

விருத்தகாவேரியாழிமேவுமோர்தானத்தென்பாற்
பொருத்தமாயொளிரத்தானம்பூரணிசொரூபமாயே
யருத்தமாஞ்சிவனுக்கென்றுமளவிலாப்பிரியஞ்செய்யுந்
தருத்தவாகவளத்தாலோய்வித்தழைப்பஃதெந்தஞான்றும். (உஉ)

வேறு.

மேவுமாபெருங்கானம்விடுத்தகூ
ரோவுமுண்ணுழையாதென்றிமையவர்
நாவுமோதுமென்றேதலென்றாயிற்றின்
பாவுமொண்கதிரும்படராவெனில். (உ௩)

## கலிவிருத்தம்.

திரிபு.

அம்புன்னாகத்தமர்தருப்போகமா ம்
வம்புனாகமினமாதவர்சேரவ ணை
வெம்புனாகமடங்கல்விருப்பி னி
தம்புன்னாகமருங்குசரிக்கு மே.

இ-ள், அம் புல் நாகத்து அமர்தருபோகம் ஆம் வம்பு—அழகுபுல்லிய தேவலோகத்தமராநின்ற வைகதருவின் போகமாகியநிலையில்லாமையை, உன் ஆகம் இல் மாதவர் சேர் அவண் புன்னாகம் மருங்கு—நினைக்கும் நெஞ்சமில்லாத பெரியதவத்தையுடையோர் சேர்ந்த வவ்விடத்துள்ள புன்னைமரத்தின்பக்கத்து,வெம் புல் நாகம் மடங்கல் விருப்பின் நிதம் சரிக்கும்—வெவ்வியபுலியும் யானையும் சிங்கமும் பகைமையின்றிநாள் தோறும் சஞ்சரிக்கும்-எ-று,—ஐந்தருவூட்டும் போகம் உண்போர்க்குப் புதிதாக விளங்குதலின், வம்பெனபதற்குப் புதுமையெனப்பொருள் கொண்டு, போகமாகியபுதுமையை மனத்தின் கண்ணினைதலில்லாத மாதவரென மொழிமாற்றிப் பொருள்கூறினுமமையும்.அங்குததிரிபு மிருகங்கள் அவராணைவழி நடக்குமென்பார்-விருப்பினி தஞ்சரிக்குமென்றார்.பகையின்மையென்னுங்காரணத்தை விருப்பெனக்காரியமாக்கிககூறியது உபசாரவழக்கு-மூக்குக்கூரிய நம்பியென்றாற்போல, ஆகமின்மாதவர் என்பது ஒருமைச்சினைப்பெயர்முதல்வினையோடு முடிந்ததிணை வழுவமைதி - புல் நாகம்மடங்கலென இடைச்சொல்லானன்றிப் பெயரா னெண்ணப்படுஞ் செவ்வெண்ணின்றொகையு முற்றும்மையும்விகாரத்தாற்றொக்கன.(உ௪)

தந்தத்தானத்தறுகட்கறைய டி
நந்தத்தானத்தமராருநண்ண ரு
மந்தத்தானத்தரும்புகழ்கூறற் கு
முந்தத்தானத்தநீங்கருயனு மே.

இ-ள், தந்தம் தானம் தறுகண் கறையடி நந்த—கொம்பினையும் மதத்தினையுங் கொடுமை யினையுமுடைய யானைகள் பெருகுதலால், தானத்

து அமரரும் நண்ணரும் அந்த தானத்து அருபுகழ்கூறற்கு—தேவலோக த்துள்ள தேவர்களும் பொருந்துதற்கரிய வவ்வனமாகிய விடத்தினரிய கீர்த்தியைச்சொல்ல, நால் முந்த நத்தம் நீங்கமுயலும் - நாவானது முந் துதலால், அவித்தையாகிய விருணீங்குதற்குமுயலாநிற்கும்-எ-று.—சொ ல்ல முந்தின், அவித்தைநீங்குமெனவே,சொல்லின் வரும்பேறுவரையப்ப டா வென்பதுபொருளாற்றலாற்போந்தது. நந்த முந்த என்னும் எச்ச ம் காரணப்பொருளில்வநதது. அமரரும் என்பதினும்மை இறந்ததுத ழீஇ நின்றவுயர்வுசிறப்பும்மை. அந்த வென்னுஞ்சுட்டுத் திரிபு அவ்வன த்தின் பெருமையைக் குறித்துநின்றது. கூறற்கு என்பது பகுப்பப்பி ளவுபட்டுரும்பெயரும்வேறுய் நின்றதொழிற்பெயர்போலாது, பிளவு படாதொன்று பட்டிசைந்து நிற்றலான் வினையெச்சம். (உ௫)

யமகம்.

ஆகமஞ்சரியாவயின்வேத ேனு
டாகமஞ்சரியாதியரின்பமு ண
டாகமஞ்சரியார்தருவைகலொ ன
ருகமஞ்சரியாமையுமர்வ ோ.

இ-ள்,ஆகமம் சரி ஆவயின்—சைவாகமங்கள் சஞ்சரிக்குமவ்விடத்து, வேதனேடு ஆகம் மஞ்சு அரி ஆதியர்—பிரமனேடு மேகம்போன்ற மேனி யையுடைய விட்டுணுமுதலியோர், இன்பம் உண்டாக மஞ்சரி ஆர்தருவை கல் ஒன்று - தங்கடங்க ளுலகங்களி லனுபவிக்கு மின்பமுண்டாகவும்பூங் கொத்துக்கள் பொருந்திய பலதருக்கடோறும்நிட்டைகூடி இருததலொ ன்றுமாத்திரமோ,கமம் சரியாமையும் ஆர்வர்—(சிவானந்தபோகமாகிய) நிறைவுஞ்சாய்தராமற்பொருநதவர்.எ-று.—பிரமன் முதலாயினேர் தங் கடங்கள் பதங்களி னுகரு மின்பத்தை யருவருத்து நிட்டைகூடலும், சி வானநதபோகமு மவ்வனத்துட் பொருந்துவ வொன்றமையால், அவரவர் பதங்களினும், அவ்வனம் மேனமையுடைத் தென்பதுபோந்தது. ஆகமம் தெய்வப்பகுதியதாதலின், ஈறுதிரியாதஃறிணைச் சொல்லா யுயர்திணைப் பொருளை யுணர்த்திநின்றதோர் திணைவழுவமைதி - இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. தொல்காப்பியம் இடைச்சொல்லியல் - ௬௬-௫ "எஞ்சுபொருட்கிளவி செஞ்சொலாயிற் பிற்படக்கிளவார் முற்படக்கிள த்தல் ,, என்பதனுல் வைகலுமென உம்மைகொடாதொழிநதார். (உ௬)

குவலயத்தடந்தோய்குவர்கொற்ற ந
குவலயத்தடந்தோளர்வெங்கூற்றிசை க்
குவலயத்தடநதோவெனக்கூறுமு ற்
குவலயத்தடந்தோற்றங்குமைக்க வே.

இ-ள், வெம் கூற்று இசைக்குவல் அந்தோ அடுத்து அடு என கூறுமு ன்—வெவ்வியயமனுனவன் உனக்குச்சொல்லுவேன் ஐயோஇரும்பலாகி

ய்வாயுதங்களாற் கொல்வாயென்று தூதுவனைப்பார்த்துச் சொல்லுமுன், குவலயத்து அடம் தோற்றம் குமைக்க-பூமியின்கணுள்ள பொல்லாங்கு களையும் பிறவிகளையுங்கெடுக்கும்பொருட்டு, கொற்றம் நகுவலயம் தடம் தோள்மைந்தர் - வெற்றிவிளங்காநின்ற வாகுவலயமணிந்த பெரியதோ ளினையுடைய மைந்தர்கள், குவலயம் தடம் தோய்குவர் (அங்குள்ள) நீ லோற்பல மலர்ந்த பொய்கைதோறு மூழ்காநிற்பர்-எ-று.—இதனுலங்கு ள்ள தீர்த்த விசேடங்கூறினார் - சுட்டு அதிகாரத்தால் வருவிக்கப்பட்ட து. அயம்-கருவியாகு பெயர் - அடு என்பது ஈறுகெட்டு நின்றதோர்முன் னிலைமுற்றுச்சொல் - தொ-எச்சவியல் - ௫௪-கு " செய்யாயென்னுமுன் னிலை வினைச்சொல் செய்யென் கிளவியாகிட னுடைத்தே ,, என்பதற்குச் சேனாவரையர்கூறிய கடாவிடைகளானுணர்க-கூறு-முதனிலைத் தொழிற் பெயர்-குமைக்க-காரியப்பொருளில் வந்த எச்சம். (௨௭)

இரண்டடிப்பாடகமடக்கு.

கண்டலங்ககனங்கவராவினை க்
கண்டலங்ககனங்கவராவிலா க்
கொண்டலங்கண்டநாகங்குலாவு மே
கொண்டலங்கண்டநாகங்குலாவு மே.

இ-ள், கண்தலம்ககனம் கவரா—பார்த்தோர் கண்கள் வெளியைக்கவ ராமல்,வினைகண்டல் ககனம்கவிர் ஆவிலா—வாசனைபொருந்திய தாழங் காட்டினையும் பிளவுபட்ட ஆவிரைகளையும், கொண்டு அலம் கண்ட நாக ம் குலாவும் - கொண்டமைதி பொருந்திய புன்னைமரங்கள்குலவாநிற் கும் ; அங்கு கொண்டல் அண்ட நாகு அங்கு உலாவும்—அவ்விடத்துச் சஞ்சரிக்கு மேகங்களை (தமக்கினமென்று கருதி யவற்றை) பொருந்தப் பெண்ணெருமைகளங்கு உலாவும்-எ-று.—அம்-பதத்தொடுபதம் புணர்த ற்கண்வந்த சாரியையிடைச்சொல் - முதலொடு சினைக்கொற்றுமையுண் மையிற சினைவினை முதன்மேலேற்றிக் கவிராவினையென்றார். சுட்டுத்திரிபு ஓரீடியுளடுத்து வந்தமையிற் சொற்பின்வருநிலையணி-தொ-பொருளதிகா ரம் மரபியல்-௬௩-கு " எருமையுமரையும் பெற்றமுநாகே ,, என்பதனுல், நாகென்றார் - மருத நிலத்திற் குரிய வெருமைகள் முல்லை நிலத்தி னுலா மென்றது புகழ்ச்சிப்பாற்படுதலின், இடமலைவலைமதி - இது அடிமடக்கெ னினு மமையும். (௨௮)

முற்றுமடக்கு.

வஞ்சித்துறை.

தானமணக்கும், தானமணக்கு ம்
தானமணக்கும், தானமணக்கு ம்.

இ-ள், தானம் அணக்கும் தானம் மண் நக்கும் தானம் மணக்கும்- தேவலோகத்தை விழுங்குதற்கண்ணுக்கும் அவ்வனமாகிய விடத்து மண் ணைத் தடவிச்செல்லாநின்ற யானை மதம்பரிமளிக்கும், தானம் மணக்கும்

(அதன்றியும்) சோடசதானங்களுங் கலக்கும்-எ-று.—முனிவர்களிடைய றுதியாகஞ்செய்யுமிட மாதலாற் சோடசதானமுமவ்விடத்துப் பொருந்து மென்பார் தானமலைக்குமென்றார். அனைத்தலென்னுமிடத்தினிகழ் பொருளின் ரொழில் இடத்தின்மே லேற்றப்பட்டது. (உக)

கோமூத்திரி.

இரண்டிரண்டுவரியாக ஒருசெய்யுள் எழுதப்பட்டுமேலுங்கீழும் ஒன்றிடையிட்டு வாசித்தாலும் அச்செய்யுளே வருவது.

கலிவிருத்தம்.

மாடுநாகமராவளைமன்று — வ
ஆடுபூகமிராவுளைமொன்று — வ
கூடுசோதிகுலாநதிமிசாரு — வ
நீடுமாதிநிலாயதினசாலு — வ.

இ-ள், மாடு நாகம் மரா வளை மன்றுவ—பக்கத்திற் புன்னைகளும் கடம்புகளும் சுரபுன்னைகளும் நிலைபெறுவன; ஊடுபூகம் இரா உளை ஒன்றுவ — அம்மரச்செறிவினிடையேகமுகுகள் இருள்போல, இடந தோறும் பொருந்துவன; கூடுசோதி குலாம் திமிசு ஆருவ- தலைக்கூடிய சோதிமரங்களும் பொலியும் வேங்கைமரங்களும் நிரம்புவன; நீடும் ஆதிய நிலாயது (அவ்வனம்) நீணடிருக்கு மிலை முதலிய தருக்களால்விளங்கியது;—இன்சாலுவ (அதனுலதைச் சார்ந்தார்க்குப்பல) இன்பங்களும் நிரம்புவன-எ-று.—நீண்டிருக்கு மிலைமுதலிய தருக்கள் விளங்கியவ்வனத்தின் கண்ணிரம்புவன எனப்பொருள் கூறினுமமையும - ஆதிய என்னுங் குறிப்பு வினைமுறறுப்பெயரீறுவிகாரத்தாறறொக்கது. நிலாயதென்பதை முன்னர்வினைமுற்றாகக்கொண்டு பொருள்கூறிப்பின்னர்நிலாய் அது என ப்பிரித்து வினையெச்சமாக்கி, அதுஎன்பதைச்சுட்டுப்பெயராகக்கொண்டு பொருள்கூறினும். அதின்சாலுவ உருபிற்கியையு மின்சாரியை பொருட்புணியைந்தவழி னகரவீறியல்பாதல் - தொ-எழுத்ததிகாரம் புள்ளிமயங்கியல்-கூ௰௬-ஞு "உரைக்கூறிய புணரியன் மருங்கிற்கண்டு செயற்குரிய வை கண்ணினர் கொளலே,, என்னும் புறனடையாற் கொள்க. (௩௦)

கூடசதுக்கம்.

ஈற்றடியெழுத்துக்கள் ஏனைமூன்றடியுள்ளுங் கரந்துநிற்கவருவது.

விண்டுநின்றுமிளிர்கிஞ்சுகத்து — மே
லண்டுமாவளைதாடிமத்தும்ம — ணி
கொண்டுவெப்புக்கொள்சந்துபனசத்து — ம்
வண்டுகிண்டிமதுப்புனன்மாந்து — மே.

இ-ள், விண்டு நின்று மிளிர் கிஞ்சுகத்து மேல் அண்டு-விகசித்து நின் றொளிர்கின்றமுருக்கின் மேலிடத்தையணுகிய, மாவளை தாடிமத்தும்-

மர்வினிடத்துஞ் சுரபுன்னையினிடத்தும் மாதளையினிடத்தும், மணி கொண்டு உவப்புக்கொள் சந்து பனசத்தும் - அழகு கொண்டு (கண்டோர்) உவகைகொள்ளு தற்குக்காரணமாகிய சந்தனத்தினிடத்தும்பலாவினிடத்தும், வண்டுகிண்டி மதுப்புனல் மாந்தும்—வண்டுகள் மூக்காலுழுது மதுவாகிய நீரையுண்ணுகிற்கும்-எ-று.—சினைவினை முதன்மேலேற்றி, விண்டுநின்று மிளிர்கிஞ்சுகமென்றார் - சாரியையிடைச்சொல்லும் எண்ணும்மையுமிறுதியினின்று சொற்றொறுமியைந் தமையிற் கடைநிலைத்தீவகவணி - அன்றி " ஒருசொன்னின்றே தனித்தனியுதவுதல்,, என்னும் பிரிவினுளடக்கினுமமையும். (௧௧)

முரசபந்தம்.

ஒவ்வோரடி யொவ்வொருவரியாக நான்கடியு மெழுதி மேலிரண்டு வரியுந தம்முட் கோமூத்திரியாகவும், கீழிரண்டுவரியுந் தம்முட் கோமூத்திரியாகவுஞ் சிறுவார்போக்கப்பட்டும், மேல்வரி யிரண்டாம்வரியினு மூன்றாம்வரியினும் நான்காம்வரியினும், கீழூற்றுமீண்டு மேனோக்கவும் கீழ்வரியினுமவ்வாறே மேலூற்றுமீண்டு கீழ்நோக்கவும் பெருவார் போக்கப்பட்டும், இந்த வார்நான்கும் நான்குவரியாகவருவது.

வஞ்சிவிருத்தம் - அடிமடக்கு.

புன்னையாரமைபாடலம், தென்னையாரமைபாடல ம்
புன்னையாரமைபாடலம், தென்னையாரமைபாடல ம்.

இ-ள், தென் னையார் அமைபு ஆள்தலம்—(தவத்தின்)பெருமைகெடாதமுனிவர் தங்கியாளுநதலமாகிய வவ்வனம், புன்னை ஆர் அணிம பாடலம் தென்னை ஆரம்—புன்னையும்ஆத்தியும் மூங்கிலும்பாதிரியும் இலாங்கலியும் சந்தனமரமும், ஐபாடு அலம் புல் னை ஆர் அமை—அழகுபடுதலும் அமைவுமுள்ள தருப்பைப்புல்லும் (ஆகியவிவைமுதலியவற்றாற் கண்டோர்மனம்) கனிதல்பொருந்திய வளமுடைமையால், பாடலம்—யாம் புகழ்ந்துபாடேம்(பாடுதற்கு முடியாதென்றபடி)-எ-று.—எண்ணும்மையும்உம்மையெண்ணின் கண்ணுருபுதொகுதல் வரையப்படாமையால், உருபும் வினைமுதல் வினையுந்தொக்கன. அமைதிஎன்பதின் ஈறுதொக்கது. ()

சுழிகுளம்.

ஒருசெய்யுள் எவ்வெட்டெழுத்தாக நான்குவரி யெழுதப்பட்டுமேனின்று
கீழிழிந்தும், கீழ்நின்று மேலேறியும் புறநின்றுவந்துண்முடிய
வவ்வரிநான்குமேயச் செய்யுளாவருவது.

வஞ்சித்துறை.

அதவமராவார்மா, தவழுவவாயகா
வழுவல்புதையாயா, மவல்கனிபுவா

இ-ள், அதவம் மரா ஆர் மா கார் ஆயா தவழுவ(அவ்வனத்தின்)அத்திமரத்தினுங் கடப்பமரத்தினும் ஆத்திமரத்தினும் மாமரத்தினும் மேகங்

கள் கேடில்லனவாய்த்தவழுவன;—ஆவழுவல்புதையா—ஆச்சாமரங்கள் சாய்தலான்மறைவனவல்ல;—மவ்வலகணிபுவாரா-வனமல்லிகைக்கொடிகணெருங்கிப்பகுத்தறியத்தெரியாவாய் நிறைந்தன - எ-று.—வார்தல் தெரிதல்-மவல்-தொகுக்கும்வழித்தொகுத்தல். (கக)

மாலைமாற்று.

ஒருசெய்யுளையீறுமுதலாகக்கொண்டுவாசிப்பினுமச்செய்யுளேவருவது.

கலிவிருத்தம்.

தேயாவாமாவாவாடாதே, தேசாமூவாயாவாறு தே
தேறுவாயாவாமூசாதே, தேடாவாவாமாவாயா தே.

இ-ள், ஆமா தேயா-காட்டுப்பசுக்கள் (பிணிமுதலியவற்றால்) தேய்வனவல்ல; ஆ-வாடாது-மற்றைப்பசுவும் (அவற்றால்) வாடாது; தேசு ஆம் மூவா யா ஆறுது - ஒளிபொருந்தியமுதிராதயாவென்னு மரம் நீங்காது, தேன் நாவாய் ஆ ஆம் மூசாது-இருளினது தேறுனது (அடைந்தோர)நாவினையுடைய வாயின்கண்ணுகை (ஒழுகுதல்) உண்டாகும் (அவ்வாறொழுகுதலிற்சிறிதும்) சாயாது; தேடா வாவா மா ஆயாது-தேடுதற்கரிய(பிறவிடங்களில்) தாவுதலில்லாத மாமரங்கள்கெடாது-எ-று. ஏகாரங்கள்தேற்றப்பொருளில்வந்தன-அவ்வனம் முனிவருறைவிடமாதலினங்கிருக்குங் காட்டுப்பசுக்களும் மற்றைப்பசுக்களும் பிணிமுதலியவற்றாற் கெடாவென்பார்-தேயாவாடாதென்றார், பஞ்சகவ்வியப்பொருட்டாலினம்பற்றியவர்களோம்புதலில்,தேயாவாடாதென்றொனினுமமையும். தெய்வத்தன்மையுளவென்பார் தேசாமூவாயாவென்றும், தேனூசாதென்றும், மாஆயாதென்றுங்கூறினார்-ஆவென்னுமுதனிலை வினையெச்சப்பொருளில்வந்தது-ஈறுகெட்டதெனினுமமையும். (கச)

காதைகரப்பு.

ஒருசெய்யுள் முடியவெழுதப்பட்டதனிற்றுமொழியின்முதலெழுத்துத் தொடங்கி யொவ்வோரெழுத்திடையிட்டுவாசிக்கப் பிறிதொருசெய்யுள் போதுவது.

சாதுபாயதயாவமையாளித் த
கோதுபோயசுமேதலாணிப் பு
மீதுமேபமாரகவிதேனிப ப
போதுதுாயவளாவியமாளிக் க.

இ-ள், தயா அமை சாது பாய-தயாவமைந்த சாதுத்தன்மைகள் பரவின; தூணித்த கோது போய சுமேதத்த-கெடுதலையுடையகுற்றந்தீர்ந்தநல்ல யாகங்களையுடையன; வாணிப்பு மீது மேய மார கவி தேனிப்ப-மேற்கட்டிபோலமேலிட்டுப்பொருந்தியமராமரங்க்ள்குரங்குகள் (பயில)உவப்பன;—மாணிக்க துாப போதுவளாவிய-கண்டோரியாவருமயிமாணிக்கத்

தூயமலர்கள் கலந்தன-எ-று. ஆனித்தல்-கெடுதல்-வாணிப்பு-மேற்கட்டி-தேனித்தல்-உவத்தல்-மேதத-தொகுக்கும்வழித்தொகுத்தல்-பாய தேனிப்ப வளாவியென, வனத்துறுபொருளின்றொழிற்பண்மைகூறிமேதத்த என, அவ்வனத்தையே பன்மையாகக் கூறியதென்னையெனின்; யாகமிக முதல்அவ்வனத்தின்முனிவ ருறைவிடந்தோறுமாதலான்முதலொடுசினைக் கொற்றுமைநோக்கிச்சினைப்பன்மையைமுதன்மேலேற்றிக்கூறினரென்க. மராதேனிப்பன, உயர்திணைப்பொருளின் றொழிலையஃறிணைப்பொருண் மேலேற்றிக்கூறியது மரபுவழுவமைதி. (௧௫)

காதைகரப்பிற்கரந்தது.

## வஞ்சித்துறை.

கனியளாயது, நனிவிராயது, புனிதமேயது, தனிமையாயது. (௧௬)

இது வெளி.

## திரிபங்கி.

ஒருசெய்யுளாயுறுப்பமைந்தஒருபொருள்பயப்பதனைமூன்றாகப்பிரித்து
எழுதவெவ்வேறுசெய்யுளாய்த்தனித்தனியேபொருள்பயந்து
தொடையுந் திரிவையும் தனித்தனியே காணவருவது.

நேரசைக்கட்டளைக்கலித்துறை.

கூடியபூநிறைகொம்பரொலாங்குளிர்வானண வு
நீடியகாய்க்குறையென்பதுபோமிளிர்நேயமி கு
நாடியசீர்நகைகொண்டனவேதளிராானயமா ம்
பாடியவேமறையங்கமுலாம்வெளிபாறிய தே.

இ-ள், கூடிய பூ நிறை கொம்பரெலாம் குளிர் வான் அணவும்-நெருங்கியமலர்நிறைந்தகொம்புகளெல்லாங்குளிர்ந்தவானத்தைத் தடவும்; குறையென்பது போம் காய் நீடிய(அதுவன்றியும்)குறையென்பதொழிந்த காய்களானிறைந்தன;— மிளிர் நேயமிகு நாடிய சீர் நகை கொண்டன-விளங்காநின்ற நேயமிக்கவாராய்ந்தசிறப்பினையுடையதேனையுங் கொண்டன; தளிரால் நயமாம்—தளிர்களாலு மழகாகும்; வெளிபாறியது-அவற்றால் வெளியிடந்தோன்றுவது மின்று; பாடிய எம் மறை அங்கம் உலாம்-ஓதுதலாலின்பத்தை (பயக்கும்)வேதமுமவேதாங்கமும் (அவ்விடத்து) சஞ்சரியாநிற்கும்-எ-று. இயக்குவான்றொழிலையியங்குபொருண்மேலேற்றியிவ்வூர்க்குக்காணம்வருமென்றாற்போல,மறையங்கமுலாமென உடையான்றொழிலையுடைமைமேலேற்றிக்கூறியது, தொ-சொ-எச்சவியல்-௧௩-ஞ "வாராமரபின வரக்கூறுதலும்,,என்பதில்ஒன்றினமுடித்தலென்பதனாற்கொள்க. (௧௭)

இக்கவியுட்பிரிந்தசெய்யுள்கள்.

## வஞ்சித்துறை.

கூடியபூ
நீடியகாவிற்ப்
நாடியசீர்
பாடியவே. (௩௮)

நிறைகொம்பரெலாம்
குறையெனபதுபோம
நிறைகொணடனவே
மறையஙகமுலாம. ()

குளிர்வானனைவு
மொளிரேயமிகு
தளிரானயமாம
வெளிபாறியவே. (௪௦)

இவைவெளி

## மாத்திரைச்சுருக்கம்.

ஒருபொருள்பயககுமஒருசொல ஒருமாததிரையைக்குறைப்ப
வேறுபொருள பயககுஞ் சொலலாயவருவது.

கலிவிருததம.

ஒடியுமாததிரையொன்றுடைததாத கி
மடியுமொனறுடைமாநதருச்செயதி ல
கடியுமொனறுடைககாடுகையாறகிழி த
இடியுமொனறுடைககிலகமேயககு மே.

மாததிரைஒனறு ஒடியும் உடை தாதகி-ஒருமாததிரை குறைதலுடையஆதகி, ஒருமாத்திரைகுறைதலுடைய ஆததிஎனறமையால, அததிஎனறுயிறறு. அததி-யானைகள, மடியும ஒனறுஉடை மாநதரு-ஒருமாததிரை மடிதலையுடையசூதம, ஒருமாததிரை மடிதலையுடையசூதம் எனறமையால, சுதம் எனறுயிறறு சுதம-கெடுதியை, செயதில-எதிரநதோர்க்குசசெய்திலவாய, கடியும்ஒனறு உடைகாடு-ஒருமாததிரை கடிதலையுடையகானம, ஒருமாததிரைகடிதலையுடைய கானமெனறமையால, கனமெனறுயிறறு. கனம மேகததை, கையாறகிழிதது—துதிககையாறகிழித்து, இடியும ஒனறு உடை கிலகம-ஒருமாததிரைகுறைதலையுடையஆபபு, ஒருமாததிரைகுறைதலையுடைஆபபு எனறமையால, அபபுஎனறுயிறறு. அபபு நீரை, ஏய்ககும(ஒழுககுவிததலால அமமேகததை) ஒததுததோனறும்-எ-று.யானைகள எதிரநதோர்ககூறுசெயதிலவாய மேகததைததுதிககையாறபறறிககிழித்து, அதினினறும நீரையொழுக்குவித்தலால அம்மேகததையொததுததோனறும எனபது பொருள். தமமளவிற்குறைதலால, ஒருமாததிரையையுடையனவே மறறையவுறறிறகுமிவவாறே யேறகுமாறுபொருளகூறினுமமையும. ஒடியும மடியும் கடியும இடியும எனனும எசசங்களுள், முதனிலைபிரிந்து தொழிற்பெயராய் உருபேற்றுவநதன. பினனர்ககூறியவுரையுள, ஒடியும்முதலியஎச்சங்கள் காரணபொருளில் வந்தன.ஒன்று எண்ணுதுபெயர். (௪௧)

மாத்திரைவருத்தனை.

ஒருபொருள்பயக்கும் ஒருசொல் ஒருமாத்திரைபெற்று
வேறுசொல்லாய்ப் பொருள்பயந்துநிற்பது.

ஒன்றுமாத்திரையொன்றியபூமி யா
லொன்றுசேர்விண்ணவருணவோங்கு வ
வொன்றுசேரவொளிருமிழையெ லா
மொன்றுசேரும்விளர்ப்புற்றுயரு மே.

ஒன்று மாத்திரை ஒன்றிய பூமியால், ஒருமாத்திரைகூடிய நிலத்தா
ல், ஒருமாத்திரைகூடிய நிலம்என்றமையால், நீலமென்றாயிற்று. நீலத்
தால் குவளைமலரால், ஒன்று சேர் விண்ணவருணவு-ஒருமாத்திரைகூடிய
தேவருணவு (தேவருணவு) அவி-ஒருமாத்திரைகூடியவென்றமையால்,
ஆவியென்றாயிற்று. ஆவி-பொய்கைகள் ஓங்குவ - விளங்குவன; ஒன்று சே
ர-ஒருமாத்திரைகூட, ஒளிருமிழை-விளங்குங்கலம், ஒருமாத்திரைகூடவி
ளங்குங்கலம் என்றமையால், காலம்என்றாயிற்று. காலமெலாம் - அறுவ
கைப்பெரும்பொழுதும், ஒன்று சேரும் விளர்ப்பு-ஒருமாத்திரை கூடிய
வெண்மை (வெண்மை) சிதம் ஒருமாத்திரைகூடிய என்றமையால்,சீதம் எ
ன்றாயிற்று. சீதம்-குளிர்ச்சியை, உற்றுஉயரும்-பொருந்தி (அவ்வனத்தி
ல்) உயர்ந்துதோன்றும்-எ-று. மரச்செறிவானும் மேகங்கள்படிதலானும்
பொய்கைமுதலியவற்றின் மிகுதியானும் எப்போதும் ஒருதன்மையவாய்
க்குளிர்ந்திருக்கும் என்பார் காலமெலாம் சீதமுற்றுயரும் என்றார். பொ
துமைநீங்கியஃறிணைக்குரித்தாய்நின்ற எல்லாம் என்னும் பன்மைப்பெயர்
வினைமுதல் வினைகொண்டுமுடிதலுமன்றிக்காலமென்னு முதற்பொருளின்
சினையாய அறுவகைப்பொழுதினும்நின்றது. (௭௨.)

பிறிதுபடுபாட்டு.

ஒருசெய்யுளினடியையுந் தொடையையும் வேறுபடுப்பச் சொல்லும்
பொருளும் வேறுபடாது, அச்செய்யுளே வேறொருசெய்யுளாய்வருவது.

மேலாடுசோலைவிளையாடுபல்வண்ட ர்
காலாடுதோறுங்கதித்தேறியோலா டு
நூலாடுமார்பர்நண்ணிநோற்று யு
காலாடவாலாடுகாப்பணமைந் தே.

இ-ள், மேல் ஆடு சோலை விளையாடு பல்வண்டர்—விண்ணுலகத்திற்
றோய்ந்த அங்குள்ள சோலைகளில் (தேனுகர்ந்து) விளையாடாநின்றபலவ
கைப்பட்டவண்டுகளும், கால் ஆடுதோறும் கதித்து ஏறி ஓலாடும்—காற்
றுவீசுந்தோறுமதிகரித்துச்சென்று முழங்கும்;—நூலாடுமார்பர் நண்ணி
நோற்று ஆயும் கால் ஆட காப்பண் அமைந்து ஆல் ஆடும்—உபவீதம்
விளங்கும் மார்பினையுடைய முனிவர்கள் நோன்புபூண்டு பொருந்திய

ராயும் நான்குவேதங்கள்சொல்ல (அக்குழுவின்) நடுவுள் அமைந்து ஆலமரம்விளங்கும்-எ-று.—அவ்வாலமரஞ் சிவபெருமானெழுந்தருளப்பெற்றமான்மியமுளதாதலின், நாப்பணமைந்து ஆலாடும் என்றார் நால் எண்ணுருபெயர். (சஉ)

இது.

மேலாடுசோலைவிளையாடுபல்வண்டர்
காலாடுதோறுங்கதித்தெறி யோலாடு
நூலாடுமார்பர்நண்ணிநோற்றுயுநாலாட
வாலாடுநாப்பணமைந்தே.

என ஒழுகிசைச் செப்பலோசைத் தாயீராசிடையிட்டு, ஒருவிகற்பத் தானடந்து நாள் என்னும் வாய்பாட்டானிற்ற நேரிசைவெண்பாவாய் வந்ததுகாண்க. (சந)

கரந்துறைசெய்யுள்.

பிறிதொருசெய்யுட்சொற்புகாது எழுத்துப் பொறுக்கிக்கொள்ளலாம்படி செய்யுள் பாடுவது.

நேரசைக்கட்டளைக்கலித்துறை.

சீலவரோதயத்தார்குணத்தார்வனைசித்திரமே
போலநல்யோகத்திருப்பார்கொண்டாடுகைபொற்பச்செயும்
ஞாலநிலைக்கவோரோதைமிக்காயெழநாளுஞ்செய்தே
யேலமணக்குநனைமருமோதுமிரங்குவண்டே.

இ-ள், சீலம் வரோதயத்தார் குணத்தார் வனை சித்திரம்போல நல் யோகத்திருப்பார் - மாசின்மையையும் பிறர்க்கருளுதலையுமுடைய தவத்தினரும் சித்திரமெழுதுதலிற்கைபோயாரெழுதியசித்திரம்போலவுறுப்புக்கள்கம்பியாதுநல்லயோகத்திலிருப்பவரும்; ஞாலம் நிலைக்க பொற்பச்செய்யும் கொண்டாடுகை ஓரோதை மிக்காயெழ - உலகத்தினிலைபெறஅழகுபெறச்செய்யும்பாராட்டுகையாகியவொரு ஓசை யதிகரித்தெழ, நாளும்செய்து ஏல மணக்கும் - எந்நாளுஞ்செய்து (அவ்வனத்தில் ஆலமரம்)பொருந்த இருக்கும;இரங்குவண்டு நனை மருவி மோதும்- ஒலித்தலையுடையவண்டுகள் (அங்குள்ள) அரும்புகளின் கட்டவிழப்பொருந்தித்தாக்கும்-எ-று.—தவத்தினரும்யோகியரும் தத்தமக்குரிய நிலைமைவழுவாத நிலைபெறநடத்துதலின், அவ்வால் அவராற் புகழ்தற்பாடுடைத்தென்பார்,கொண்டாடுகையோதை யெழமணக்குமென்றார் - மரு தொகுக்கும்வழித்தொகுத்தல் - ஏகாரம் முன்னவிரண்டும் தேற்றத்தினும், பின்னதுஅசைநிலையினும் வந்தன. (சச)

இதனுட்கரந்தசெய்யுள்.

சிரோணத் தானைச் சிலையைக் கொளுநாகைக்
காரோணத் தானைக் கருது. (௪௫)

இது வெளி.

அட்டநாகபந்தம்.

எட்டுப்பாம்பு தம்முளிவைவனவாகவுபதேசமுறையான் வரைந்த வற்றுள், எட்டுக்கவியெழுதப்பட்டுச்சந்திகளினின்ற எழுத்தேமற்றையிடங்களினு முறுப்பாய் நிற்கவருவது.

நேரிசைவெண்பா.

காயுங் கனியுங் கலவமலர் கெழு மி
யாயுஞ் செழுமைமல் கவாயதே—நேயமிகு ம்
பாவுசீர் மேவிய பங்கம கலக்க மா
மேவுபார் கொண் டாடு மே.

இ-ள், காயும் கனியும் கலவ மலர் கெழுமி ஆயும்செழுமை மல்க ஆயது - காய்களும் கனிகளும் பொருந்த மலர்கள் நெருங்கிக்கண்டோராலாராயப்படும் வளப்பமிரம்பவாகிய வவ்வனமானது நேயமிகும் பாவுசீர் மேவிய பங்கம் அகல் அக்கமா மேவு பார் கொண்டாடும்- அன்பு மிகுந்த பரவிய சிறப்புவாய்ந்த ஞானக்கண்ணாகப் பொருந்திய வுலகத்தாற் கொண்டாடப்படும்- எ-று.—தன்னையடைந்தோரைமுத்திநெறிப்படுத்தலான், அவ்வனத்தை ஞானக்கண் என்றார்.

கலவகெழுமிமல்க எனத்தம்முளியைபில்லனவாகிய பலவாய் பாட்டானடுக்கிய எச்சங்களுள், இறுதி யெச்சத்தின்முடிபாகியஆயதென்னுஞ் சொல்லான் மற்றை யெச்சங்கள் முடிந்த வாறுகாண்க. (௪௬)

வேறு.

அந்தவாரணியத்தோராலளவிலுள்கண்டுநிற்குஞ்
சந்தமேவுறுதலாற்றொன்மரமெனச்சான்றோர்சொல்வார்
நந்துவாங்கனிகள்பல்லநயந்துமட்புறுக்கலங்கண்
முந்தவெண்ணிலகமிழ்த்துமுறைமையின்முயங்குமாலோ. (௪௭)

ஒருவிழுதலைத்துவிட்டாலுற்றநாற்றிசையுமுள்ளாா
வெருவரச்சென்றுமோதிமீடருங்கணத்தின்முன்னர்
திருமகண்மணாளர்பல்லோர்சேர்ந்துறங்கிடவந்தாலு
மருவுமோரிலைவெவ்வேருப்படுத்தற்குவயின்கொடுக்கும். (௪௮)

அத்தருவெழுந்துவாளுடைக்துறநிழற்றலாலே
மெய்த்தவானவர்பல்லோரும்வெயிலாதிருந்துவாழ்வார்
கைத்தலமிருநான்குள்ளான்கண்டபல்பறவையெல்லா
மொய்த்தவணுறையாநின்றமுழக்கொலியுறங்காவென்றும். (௪௯)

இன்னுமஃதாலங்காடென்றுருபெயரெய்திநாளு
மன்னுசாய்க்காடுவெண்காடமைந்தநீர்வளச்செங்காடு
மின்னுமாமறைக்காடாதிவிளங்குபல்காட்டிற்கெல்லாந்
துன்னுமேன்மையதாய்ச்சத்திசொரூபமாயமைந்ததன்றே. (௫0)

அன்னதோர்தலத்தைநந்தியடுத்தவரொடுமடைந்து
சொன்னவவ்வடமூலத்திற்சுடருமோரிலிங்கந்தாபித்
துன்னரும்புகழ்சாதீர்த்தமொன்றுகண்டாட்டிச்சூட்டி
நன்னலத்தூட்டிக்காட்டிநண்புசால்பூசைசெய்தான். (௫௧)

அடுத்துவந்தாருமிவ்வாறன்பொடுபூசையாற்ற
விடுத்துமுன்னின்றுதாழ்ந்துவிழிகணீரிறையாநிற்ப
வுடுத்துவன்புலித்தோன்மன்றத்துவந்துநின்றுடுவோனைக்
கடுத்துவேறென்றுருதததுதிபலகளையலுற்றான். (௫௨)

ஆலவெங்குணத்தைமாய்த்தாங்களுதியேயுயிரைப்பற்று
மூலபந்தத்தைநீக்கிமுடிவிலாவின்பநல்குங்
கோலவின்பொருளேபோற்றிகுறிப்பருங்குணமேபோற்றி
காலமாய்க்காலமுற்றுங்கடந்தபேரொளியேபோற்றி. (௫௩)

பூதமும்பொறியுமைந்தாம்புலன்களுங்கரணமாய
பேதமுங்காலமாதிப்பெருக்கமும்பிறங்குவிந்து
நாதமுங்கடந்துநின்றநாடருஞ்சுடரோபோற்றி
வாதமுஞ்சமயபேதமயக்கமுந்தொடராய்போற்றி. (௫௪)

அடியவர்புரிந்தகுற்றமனைத்தையும்பொறுப்பாய்போற்றி
நெடியவன்முதலோர்வேண்டநீலநஞ்சயின்றாய்போற்றி
கடியவாளரக்கனேத்தககருணையினளித்தாய்போற்றி
படியவாம்புகழ்சால்சித்தாச்சிரமத்துப்பரமபோற்றி. (௫௫)

என்றுரைத்துருகியேத்தவிணையிலவ்விலிங்கநின்றுங்
கன்றுமான்பரசுதாங்குங்கைப்பிரான்வெளியேதோற்றி
நன்றுநீவேட்டயாவைநவிலெனப்பணிந்தெழுந்து
குன்றுவார்சிலையான்முன்னங்குறித்திவைவேண்டுநந்தி. (௫௬)

தங்குமிவ்விலிங்கத்தென்றுந்தழைத்தினிதமர்தல்வேண்டும்
பொங்குமித்தீர்த்தத்தெல்லாத்தீர்த்தமும்புணர்தல்வேண்டு
மிங்குநீநந்திநாதனெனும்பெயர்பூணல்வேண்டு
மங்குதலில்லாநின்னைப்பணிசெயல்வழங்கவேண்டும். (௫௭)

எனவுரைத்திரந்தவேண்டவெம்பிரான்கருணைபூத்துக்
கனமிகுநந்தியாதிகணங்களையொருங்குநோக்கி
யனகவிவ்வரங்களிந்தோமன்றியுமினையதானஞ்
சினமிலாவதிவிருப்பஞ்செய்திடுமெக்கென்றான்றும். (௫௮)

நந்திநன்கமைத்தவிந்தநந்திதீர்த்தத்தின்மூழ்கி
முந்தியிந்நந்திநாதன்முளரியஞ்சரணந்தாழ்வோர்
பந்திசெய்கொடியமாபாதகமெலாம்பாறிமாயச்
சிந்தினம்முலகஞ்சார்ந்துசெழிந்துவாழ்ந்திடுவருண்மை. (௫௯)

திருவளர்நந்திதீர்த்தக்கரையிடைச்சிறக்குமாறு
பொருவருமன்னதானம்புரிந்தவரவிழொன்றற்கு
வெருவருஞ்சிவலோகத்தோராயிரவருடமேன்மேற்
பெருகுபல்போகந்துய்த்துப்பிறங்கிவாழ்ந்திடுவரன்றே. (௬0)

ஆதவன்மீனராசியடுத்துறப்பயிலுநாளிற்
சீதவன்பந்தரிட்டுச்செறிபவாபலர்க்கும்வெப்ப
மோதவன்புருகநன்னீர்முகந்துவாக்குவரேனி
மாதவன்முதலோர்க்கெய்தாவளமெலாமபெற்றுவாழ்வார். (௬௧)

ஒருமலர்நந்திநாதர்முடிமிசையுறவிட்டோருந்
திருமலர்மிசையோன்மாயோன்றிகைத்துளநறுமுறுத்துப்
பொருமலராகவெல்லாப்போகமும்பொருந்தியீறறி
னிருமலராகிஞானவிரம்புபேரின்பந்துய்ப்பார். (௬௨)

அருத்தமாநந்திநாதன்மேற்றிசையமைவதாய
விருத்தகாவேரிப்பாங்கர்த்தென்புலத்தவர்விரும்பத்
திருத்தமாங்கடன்செய்வார்வண்கயையினிற்செய்தபேற்றிற்
பொருத்தமாய்நூறுபங்குமேற்படப்பொருந்துவாரால். (௬௩)

இன்னபல்வரங்களல்கியெம்பிரான்மற்றையோர்க்கு
மன்னருள்சுரந்தொளித்தான்மாண்புடைநந்தியாதி
யென்னருமுவகையெய்தியிலங்குமாலயமுண்டாக்கி
நன்னராவரணதேவரியாவருநண்ணச்செய்து. (௬௪)

கொடிமதில்விமானஞ்செம்பொற்கோபுரமண்டபாதி
யொடிவறப்பொலிதற்சேற்பவொள்ளியநகருமாக்கிக்
கடிகெழுவீதிபோக்கிக்கவலரிதாயபல்ல
குடிகளுமேற்றிப்பூசைகுலவுறநடத்திப்பின்னர். (௬௫)

நந்திநாதனுக்குமாகசுக்கிலபக்கநன்கு
வந்ததோர்துவாதசிக்கண்வல்லேற்றுத்துவசமேற்றிப்
புந்திசெய்யேழாநாளிற்பொற்றிருத்தேர்நடாத்தி
நந்தலில்சாந்தெட்டாநாணடராசர்புனையச்செய்து. (௬௬)

கரையெறிபுனல்விருத்தகாவேரிசங்கமத்திற்
றரைபுகழ்தசநாளாயசட்டியத்திரளையாட்டிப்
புரைதவிர்விழாமுடித்துப்புண்ணியக்கயிலைமேவி
யுரைசெயுநந்திமுன்னோருவந்துதம்பணிமேற்கொண்டார். (௬௭)

எண்ணியவெண்ணியாங்கேயாவர்க்குமெளிதினல்கும்
புண்ணியநந்திநாதன்மான்மியம்பொருந்தச்சொற்றுங்
கண்ணியவனையாளுங்காமுறப்பிரியஞ்செய்யுந்
திண்ணியவளஞ்சால்சித்தாச்சிரமத்தின்சிறப்புச்சொல்வாம். (௧௮)

நந்திநாத ப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௧ ஐ திருவிருத்தம் - ௧௫௮௭.

## சித்தாச்சிரமப்படலம்.

துன்னியநைமிசமுனிவர்சூதமுனிவரற்போற்றி
மின்னியசெஞ்சடையார்க்குமேன்மேலும்விருப்புதவி
மன்னியசித்தாச்சிரமமான்மியவாரமுதருந்த
முன்னியதெஞ்செவியெனவம்முனிவரன்செவ்வாய்மலர்வான். (௧)

அறையியமமுதலாயவங்கமிருநான்கமைந்து
நிறைகருமயோகத்துநிரம்பினூர்தவலோகத்
துறைபவரொன்பதுகோடிசித்தர்பிறப்பொருங்கறுப்பான்
மறைமுடிவாஞ்சிவஞானமாண்பினலடைவதுகுறித்தார். (௨)

தோடுசெறிநறுங்கமலத்தோன்றலுலகம்புகுந்து
நாடுமவன்பதம்பணிந்துநான்முகத்தோய்நின்னருளாற்
றேடுமணிமாமுதலெண்சித்தியும்பெற்றுறவாழ்ந்தோம்
வீடுவிரும்பினமவற்றின்மேன்மேலும்வெறுப்புற்றேம். (௩)

ஆன்றபதிபசுபாசவனைத்தியலும்பொதுச்சிறப்பிற்
றோன்றவுணர்சிவஞானந்துணிந்தடையுங்கருத்துடையேஞ்
சான்றதவம்புரிந்தாற்கேதருமதுநாம்பெறுவண்ண
மான்றமனமில்லாய்நீவகுத்துரைப்பாயென்றிரந்தார், (௪)

ஒன்றுபலசித்தர்களுமுரைத்தமொழிகேட்டுவந்து
நன்றுகுறித்தனிர்நீவிர்நாடரியசிவதீக்கை
யன்றுபெறுவதையின்றுலளப்பரியசிவஞானம்
வென்றுமினிர்தீக்கையுமற்றெண்மையினமேவுதலின்றே. (௫)

ஆயபெருந்தீக்கையுறற்காசிரியனருள்வேண்டுந்
தூயவருள்பெறுவதற்குத்துங்கமிகுதலத்தடைந்து
நேயவருச்சனையாதிநிரம்பவியற்றிடல்வேண்டும்
பாயவதற்கேற்றதலமொன்றுளதுபாரகத்தே. (௬)

ஆயதலமெவ்விடத்தினுள்ளதெனிலறைதருவாம்
பாயபணிவரைத்தென்பாற்பாரதப்பல்கண்டத்து
மேயவளமலிகுமரிகண்டமிகுசிறப்புடைத்தாற்
றேயவரநதியமுனைகாவேரிமுதற்றுவன்றும். (௭)

இந்நதிக்கரைமருங்கினிருக்குமுயர்சிவதலங்க
ளந்தமிலவற்றுளுங்கிழாழியருகுளதுதன்பேர்
சந்தமுறவடைந்தார்தம்பவப்புணரிதபச்சுவற்றி
முந்தவருடிருநாகைக்காரோணமெனமொழிவார். (அ)

அன்னதலத்தெல்லையுமோராைந்துகுரோசத்தளவாம்
பன்னருமத்தலத்தென்கீழ்ப்பயில்விருத்தகாவேரி
யென்னநவினதித்தென்பாலென்றுமுளதொருதானம்
பொன்னகரமுதலனைத்தும்போந்துவழிபடுநாளும். (௯)

நந்திபிரான்முதற்கணங்கணயந்தாங்குற்றுலடியி
லந்திமதிபுனைபெருமானருட்குறிதாபித்தருச்சித்
திந்தியநீத்தருந்தவஞ்செய்தெண்ணியவெலாமடைந்தார்
தந்தியுரியவனந்திநாதனெனத்தழைந்தமர்வான். (க0)

மாலடியோடொழிநந்திதீர்த்தநீர்மகிழ்ந்தாடி
யாலடியினமர்முக்கணரசடிகைதொழுதின்பங்
காலடிநந்தியையுளத்துக்கருதியிருமெனவிடுத்தான்
ஞேலடிப்புட்கொடியுயர்த்தான்சித்தரொலாந்தொழுதெழுந்தார். (கக)

எழுந்தவர்கள்பின்னுமிரணியகருப்பன்பதம்பணிந்து
செழுந்தலமற்றஃதெமக்குத்தெரித்தருளவேண்டுமெனத்
தழுந்தகவோர்மாணுக்கன்றனையுடனசெல்கெனவேதக
கொழுந்தனையவவன்சித்தர்குழாத்துடன்முன்னடந்தனனே. (கஉ)

வாணுறுமலர்மேலான்மாணுக்கன்றன்னிழல்போற்
பாணுறுசித்தரொலாம்பின்றொடரும்படிசென்று
காணுறும்பொழினாகைக்காரோணத்திருநகரந்
தாணுறுமோருகுரோசத்தளவீதெனத்தெரித்தான். (கங)

தெரித்தவவனோகுதலுஞ்சித்தரொலாமாங்கடைந்து
விரித்தபுனற்றிரைப்புணரிமுதற்பலவும்விழைந்தாடித்
தரித்தமழுமாலுடைக்கைத்தனிமுதலையடிதொழுது
பரித்தவருட்கருந்தடங்கட்பராபரைபாதமும்போற்றி. (கச)

பெருகருட்சுந்தரவிடங்கப்பெருமானைக்கண்டிறைஞ்சி
யருகுநடுத்தலேசமுதலாகியபற்பலதலத்து
முருகுமனத்தினராய்ச்சென்றுவந்தேத்தித்தென்கீழ்பாற்
றிருகுதவிரயனுரைத்ததேடருந்தானம்புகுந்தார். (கரு)

அத்தானவளமுழுதுமன்புதுளும்புறநோக்கி
யித்தானம்புரைவதினியெத்தானமெனவியந்து
முத்தானக்களிற்றுரியார்முயங்குதிருவருளொன்று
பத்தானஞானமுறப்பாலிக்குமெனறுணிந்தார்.

பெறற்கரியதீக்கையும்பல்விதமாகும்பேசுங்கா
லிறப்பருநோக்கூறுமொழியெண்ணூல்யோகவுத்திரியே
மூறத்தினவுத்திரிகிரியைஞானமெனவிரண்டாயமுத்
திறப்படுமொண்சமயமுதற்செப்பலுறும்பகுப்பானே. (௨௬)

ஓதுபுகழ்த்தீக்கைக்குரியதவமொருநான்காஞ்
சாதுநிறைபெருங்குணத்திர்சரியைமுதன்ஞானமள
வேதுமறிவிலாவிவற்றினபயனுமீரிரண்டாகுக்
கோதுதவிர்சாலோகமுதற்கலபபுக்கோளளவும். (௨௭)

நாதனமர்தளிப்புகுந்துநயப்பவலகிடன்மெழுகல்
போதமலர்பறித்தணிதல்பொலிவுபெறவிளக்கேற்றல்
வேதநவிலடியர்பணிமேற்கோடலிவையாதித்
தாதநெறிச்சரியையினார்சார்வர்சிவசாலோகம். (௨௮)

மொழிதருமாதாரசத்திமுதற்சத்தியெனுங்கமலத்
தழிவறவாதனமாதியாவிததாவாகித்துச்
செழிவளத்தாவரணமுதற்பூசித்துநதியோம்பும்
பழியின்மகநெறிக்கிரியையார்படர்வர்சாமீபம். (௨௯)

நாடியிருவளியடைத்துநடுநாடியுறப்படுத்திக்
கூடியிருமூன்றிடத்துங்குலவுபொருளுணாந்தேகித்
தேடிமதிவரைபபமுதநதெவ்விறுகர்சகமார்க்கப்
பாடுபெறுயோகமுளார்பயிலவாசிவசாருபம். (௩௦)

எடுத்துரைத்தசரியைமுதலிமூன்றுமுற்றியபின்
வடுத்தவிருமருள்பதியவயங்குமிருவினையொப்பி
லடுத்தூதனையைந்துமிரிததொன்றியொன்றுதடிக்கலப்பிற்
கடுத்ததிலன்புற்றமர்தல்சன்மார்க்கமதுகவாம். (௩௧)

அருவுருவங்குறிகுணங்கள்கட்டுவீடினைத்துமிலா
வொருமுதலாயழிவறவின்றுங்கொளியாயுயிரனைத்து
மருவியுடன்றெழிற்படுத்துவயக்கிவீடுறப்புரத்தும்
பெருமுதலாய்மறைப்பொருளாய்ப்பிறங்குவதுபதியுணர்வீர். (௩௨)

சத்தசத்தும்பகுத்துணருஞ்சத்தாய்வெண்படிகமே
யொத்தியலப்பற்றியவைதாமாயோர்மூவகையாய்
நித்தியமாய்வசிப்பவருநிறைவாயெண்ணில்லனவாய்ச்
சுத்தியருளாலடைவதுவன்றியகண்ணியற்பசுக்கள். (௩௩)

ஒன்றுயெண்ணரியவலியுடைத்தாய்ச்செம்புறுகளிம்பிற்
றொன்றாய்நித்தியமாயாரருளன்றித்தொலைந்தொழிவு
தன்றுயுள்ளதுகொடியவாணவமற்றஃதொழிய
நன்றுபுத்தனுவாதிகல்குமிருவுறுகமாலைய. (௩௪)

இருவினைக்குமேதுவெனவியம்புகான்மியமிவற்றை
மருவநிகழ்த்திடுந்திரோதானமலமிவையைந்தே
வெருவுவிவற்றொடுபழவினையுமிருண்மலவேரும்
பொருவில்பதிக்கில்லையென்றும்புணர்பசுக்கட்குள்ளனவே. (௩௫)

கருமமுமாயையும்பரமன்கருணையாலுயிர்களுக்கு
மருவினமுன்னுள்ளதன்மேன்மருவுவித்ததென்னையெனி
லொருவிலமுக்குறுபுடைவைக்குவருட்டுந்திறம்போலப்
பொருவில்வலிச்சகசமலம்போக்குவதற்கென்றுணர்மின். (௩௬)

அளித்திடல்காத்திடலிளைப்பையகற்றிடறிரோபவித்த
றெளித்தவருள்செயன்மலர்மேற்செம்மன்முதலியர்க்கொண்டு
களித்தபதியெற்றிடினும்விகாரியாகான்கண்டீர்
வெளித்தயங்குதவலோகமேவுதலைவெறுத்துள்ளீர். (௩௭)

வதிதருபல்லுயிர்களையுமயக்குவதுமாயையது
பதியுடைமையாயினுமப்பதியைமயக்காதென்றும்
புதிதெனுமிந்திரஞாலம்புரிபவனையெவன்செய்யு
மதிவலியின்மலமயக்காதாயினகன்றிடுமிரண்டும். (௩௮)

உயர்பதியுமதுநீங்காதொளிகிளர்சத்தியுமுயிரும்
பெயர்விறிரோதாயியுந்தாம்பின்னிடமேலோங்கிநிற்கு
மயர்வில்கருமலந்தேயவருட்சத்தியதுபதியு
மயர்விலதுபதிதலினால்வளர்வசிவபுண்ணியங்கள். (௩௯)

புண்ணியமேலிடமலபாகமும்பிறக்கும்பொற்பமைய
நண்ணியசத்தியும்பதியுநாடுவினையொப்புமுறுந்
திண்ணியமற்றஃதுறுங்காற்றிரோதாயியருளேயா
மண்ணியகாரிருளதனாலறலன்றிவேறுளதோ. (௪௦)

உரவுயிரினிச்சைமுதலொருமூன்றுமுள்ளடங்க
விரவுபதியிச்சைமுதலொருமூன்றுமேலோங்கும்
பரவுமருளாற்றனையும்பதியுமுணருயிர்கதிரிற்
கரவுதவிர்கண்கலந்தாற்போற்கலந்தின்பனுபவிக்கும். (௪௧)

மருளினான்முதலென்றன்மற்றதற்குமேலாக
வருளினான்முதலென்றலருளொன்றேமுதலென்ற
றெருளினாலதினமூர்தன்முத்தியலசித்தாந்தப்
பொருளினாற்சிவத்தமூர்தலொன்றுமேபொலிமுத்தி. (௪௨)

சஞ்சிதமுன்பேயழிந்ததேறும்வினைதாக்குமெனி
லெஞ்சியதாயிடுமருளாலுலகினுடலியங்களவுந்
துஞ்சியவாதனையுடற்றுஞ்சூக்குமபஞ்சாக்கரத்தா
லஞ்சியதாயேயுகனுமான்றகுணப்பெருந்தவத்தீர். (௪௩)

உணர்வாலுமுணர்பொருளுமுணர்வுமொழிந்தொழியாமே
துணையாரும்பூங்கடுகைச்சுந்தரனைமூன்றிடத்தும்
புணர்வாகவழிபாடுபொருந்துவார்சீவன்முத்தர்
குணர்மேயவயபரமுத்தியுமீண்டேகுலவும். (௪௪)

என்றுகருணையினுலாத்தாளெம்மரபின்முதற்குரவ
னென்றுகருத்தமைதரக்கேட்டொழியாதுசிந்தித்து
நன்றுதெளிந்தனர்முத்திநண்ணினார்சித்தரொலா
மன்றுபெருமகிழ்ச்சியராயமரர்மலர்மழைபொழிந்தார். (௪௫)

ஒளிகிளர்வண்சயிலாதியோங்குகயிலையைமருவித்
தெளிகிளர்முன்புரிபணியிற்றிகழ்ந்திருந்தான்சித்தரொலா
மளிகிளர்முத்தர்களானாரவர்க்கெளிதேமுத்தியருள்
களிகிளர்சித்தாச்சிரமப்பெருமையெவர்கட்டுரைப்பார். (௪௬)

நாறுமலர்கொடுபூசைநவகோடிசித்தர்புரிந்
தேறுவினைதடுத்தமுத்தியெய்தியசித்தாச்சிரமப்
பேறுபெறுமான்மியத்தென்பேசினும்பெரும்புலவர்
கூறுபுகழ்மிகுபஞ்ச நரோசமான்மியம்புகல்வாம். (௪௭)

சித்தாச்சிரமப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௭ இ திருவிருத்தம்-௧௬௮௪.

## பஞ்சகுரோசமான்மியப்படலம்.

‡ உரோகணிமகனுமாலையொருபுறங்கொண்டதெய்வ
சிரோமணிபுகழேநாளுஞ்செவிக்குணவாகச்செய்யும்
வரோதயமுனிவர்க்குதமுனிவனைவணங்கிப்பஞ்ச
குரோசமான்மியஞ்சொல்லென்னக்கூறுவானனையசூதன். (௧)

கரிசறுதவத்தின்மிக்கான்கதம்பமாமுனிவனென்பான்
விரிபுகழ்படைத்தநந்திநாதற்குமேல்பாற்சென்று
கரியுரிபோர்த்தமேனிக்கடவுடனிலிங்கந்தாபித்
தரியபன்மலர்கொண்டன்பிற்பூசனையுஞற்றினுல். (௨)

பன்னெடும்பகல்பூசிக்கப்பரவுமவ்விலிங்கநின்று
மின்னெடுஞ்சடையான்றோன்றிவேண்டியதளித்துப்பின்னு
நன்னெடுபுகழ்க்கதம்பநாதனென்றொருபேர்பெற்றான்
கொன்னெடுங்குலிசம்பாவக்குன்றினுக்கனையதானம். (௩)

ஆருயிர்குடித்துப்போதுந்தோன்றலவ்வழிவருங்காற்
பாருயிர்விரும்புமந்தப்பராபரவிலிங்கநோக்கி
யாருயிருவக்குந்தீர்த்தமின்மையுமமையவெண்ணிப்
போருயிர்சத்தியான்முன்பொருந்தவோர்தீர்த்தந்தொட்டான். (௪)

---

‡ உரோகணி மகன் - விட்டுணுவிற்கோரவதாரத்தின் வாதபெயர்.

கண்ணுமத்தீர்த்தஞ்சத்திகங்கையென்றொருபேர்பூணு
நண்ணுமத்தீர்த்தமூழ்கிக்கதம்பநாதனைப்பூசிப்போர்
விண்ணுமெட்டரியபோகமிகப்புறப்பெற்றுவாழ்வா
ரண்ணுமற்புதங்கூர்முத்தியின்பமுமடைவரன்றே. (ரு)

எண்ணியகதம்பநாதலிங்கத்தின்மேல்பாற்சற்றே
கண்ணியவாயுத்திக்கிறகலந்துளதருந்தவஞ்சால்
புண்ணியவசிட்டமேலோன்பொருந்தியவாச்சிராமந்
தண்ணியதவத்தோருள்ளந்தானெனப்புனிதமேவும். (சு)

ஆயவத்தலத்தோர்பொய்கையமரர்பாற்கடல்கடைந்த
ஆயநன்ஞான்றிற்றோன்றுஞ்சுதைநிகர்சுவைமிக்குள்ள
பாயநீருடையதனைப்பாற்குளமென்றுசொல்வர்
மேயவத்தீர்த்தக்கீழ்பாற்கணாயிடைவிருப்புமேவ. (எ)

திகழ்நவநீதங்கொண்டுசெய்தவோரிலிங்கந்தாபித்
தகழ்வினைவசிட்டமேலோனருச்சனையாற்றிவேண்டும்
புகழ்மிகுவரங்கள்பெற்றனபுனிதன்வெண்ணெயலிங்க
மிகழுறுத்தின்பால்குமியாவர்போய்வணங்கினாலும். (அ)

உரைநவநீதலிங்கவுத்தமற்கீசானத்திற்
றரைபுகழ்திருக்காரோணத்தம்பிரான்மேலைத்திக்கிற்
சுரைபடுமுட்டாட்கஞ்சச்சூரியதீர்த்தமொன்று
புரைதவிரனையதீர்த்தவரவினைப்புகல்வாங்கேண்மின். (கூ)

ஒளியவிர்மலரின்மேலானுவப்பவத்தலத்துமேவித்
தெளியவோர்குண்டஞ்செய்துசெந்தழல்வளர்க்குங்காலை
யளியவக்குண்டநாப்பணன்புசெய்பவருக்கென்று
மெளியனாந்தம்பிரானோரிலிங்கமாமுளைத்தானன்றே. (க0)

அன்னவைபலவுங்கண்ணுற்றேயன்னமேக்குயர்த்தோன்றல்
பொன்னவிர்தளியொன்றாக்கிப்பூசைமுற்சிறப்பனைத்து
நன்னலமுறநடாத்திநாடுபல்வரமும்பெற்றுத்
தன்னமரிருக்கைமேவித்தழைத்தினிதிருந்தான்பின்னாள். (கக)

எழுபரித்தேரின்மேவியின்னடையொண்முகைகளெல்லா
முழுமுறுக்குடையத்தோன்றுமொய்கதிர்ப்பரிதிப்புத்தேள்
பழுதமைமறமறைந்துபண்ணுவார்தமைத்தண்டிக்குஞ்
செழுமகப்பேறுவேண்டிச்செழும்பொழினாகைபுக்கான். (கஉ)

புக்கவன்றேவதீர்த்தம்புண்ணியமருவமூழ்கி
மிக்கவனயவாதிபுராணனைவிருப்பிற்போற்றித்
தொக்கவன்பினருண்மேவிச்சுடர்கருந்தடங்கணூடா
டக்கவனென்னப்போற்றித்தழையுமேற்றிசையடைந்தான். (கங)

அயன்மகத்தெழுந்தபெம்மானருட்குறிகண்டுபோற்றிப்
பயன்மிகமேல்பாலுண்டுபெண்ணியதலைகண்டீர்
வியனமரந்நீர்மூழ்கிவேள்வியினெழுதற்போற்றுஞ்
செயன்மகிழ்ந்தனையகாதன்றிருப்பெருங்காட்சிகண்டு. (கச)

இருள்வலிமுருக்கும்வெய்யோனெண்ணியபடியேபாவர்
வெருள்கொளுமியமற்றந்துவேண்டியவரமுமீந்தா
னருள்வளரியமகாதனெனும்பெயரடைந்தான்வேதன்
மருடபும்வேள்விக்குண்டத்துதித்தவனனையமாண்பால். (கடு)

சூரியனமைத்தலாலேசூரியதீர்த்தமென்றோர்
சீரியபெயர்பூண்டன்றத்தீர்த்தமற்றனையான்வாரத்
தேரியலமையமூழ்கியியமாதனைச்சேவிப்பார்
காரியசித்திபெற்றுக்களித்துவாழ்ந்திடுவர்மெய்யே. (கசு)

ஒளிகெழுகதிரோன்றீர்த்தத்துத்தரதிசையின்மேவி
யளிகெழுகுமுதகண்பனமையவோராவிதொட்டுக்
களிகெழுமதன்றீரத்துக்காமருவிலிங்கமொன்று
தெளிகெழும்படிதாபித்துத்திருத்தகுபூசைசெய்தான். (கஎ)

அந்தநற்றீர்த்தநாமமவன்பெயர்பெற்றுமேவுஞ்
சுந்தரவிலிங்கமென்றுசோதியுமொருபேர்பெற்றுன்
சந்திரதீர்த்தந்தோய்ந்தச்சயம்புவைதரிசிப்போர்க
ளிந்திரனுதியோருமெய்தரும்பெரும்பேறெய்வார். (கஅ)

மதியமையிலிங்கத்திற்குவடகிழக்கெல்லையெய்தித்
துதியமைதீர்த்தந்தொட்டுச்சுடருமோரிலிங்கந்தாபித்
ததிசயம்பயப்பப்பூசையாற்றியொள்ளழலோனென்பான்
பதிதருகருத்துமுற்றும்படிவரம்பெற்றுனன்றே, (கக)

கார்த்திகைத்திங்களெய்துங்கார்த்திகைநன்னுண்மண்மேற்
பார்த்திவர்செறியுமந்தப்பாவகன்றீர்த்தமூழ்கி
யார்த்தியினழலோன்பூசையாற்றியவிலிங்கந்தாழ்வார்
பூர்த்தியினினைத்தவெல்லாம்பொருந்துவர்திமைதீர. (உ0)

ஆசாரவழலோன்பூசையாற்றியவருட்கோசத்திற்
கீசானதிசையின்மேலாமிருந்தவர்பலரும்போற்றத்
தேசாருமொருகரோணச்செம்மனுயகர்வடக்கிற்
காசாருங்கொம்மைநாககன்னிகையொருத்திமேவி. (உக)

அருந்தவம்புரிந்தாளாகவன்னதற்கிரங்கியெங்கோன்
பிருந்தவோரிலிங்கமாகித்தெரிதரவெளியில்வந்தான்
பொருந்துமச்சுயம்புமூர்த்தியெழுந்ததுபொருக்கென்றோர்ந்து
வருந்துதலில்லாச்சாலீசுகனெனுமன்னர்மன்னன். (உஉ)

கருதருவளஞ்சாருகைகன்னிகாபுரமென்பேரா
லொருபெருநகரமாக்கியந்தணருறையநல்கித்
திருவளர்கோயில்செய்துசிறப்பித்தானனையமூர்த்தி
மருவும்வெம்பாவநோய்க்கோர்மாமருந்தாகிமன்னும். (௨௩)

அறைபெரும்புகழ்சாருகையைங்குரோசத்தினுள்ள
நிறைதருமிலிங்கந்தீர்த்தமின்னவாநெடுங்கடற்கு
மறைசொலத்திருநாகைக்குநாப்பணேவாழுளோரும்
பொறையுடல்கழிப்பாரெண்ணிற்புகல்வதெனிதனின்மேலும். (௨௪)

ஆவியிற்பொலியுநாகையையங்குரோசத்தினுள்ளு
மேவிவாழ்ந்திருந்தாரியாவராயினுமெய்விடுங்காற்
காவியங்கண்ணுண்மார்பன்கமலமேலுறைவானோடு
மாவியப்பெய்தவண்ணல்வளர்சிவலோகஞ்சார்வார். (௨௫)

பிறங்கியவளஞ்சாருகைப்பிறங்குகாரோணஞ்சூழு
மறங்கிளராங்குரோசத்தகதனுமுத்தினம்வசித்து
மறந்துமற்றொருதலம்போய்மாண்டனரெனிலனாருஞ்
சிறந்தபல்வளஞ்சான்மேலைப்பெரும்பதஞ்சிவணிவாழ்வார். (௨௬)

ஆனியிற்சிறந்தாம்பூதாட்டமிவருந்தினத்தின்
மேனிகழைங்குரோசம்விதிமுறைசூழ்தன்மேலாம்
பானிறச்சங்கம்வீசும்படுதிரையொடுவடக்கிற்
றனிகழ்சமுத்திரத்தைச்சாற்றெல்லையாகக்கொண்டு. (௨௭)

கடிமலர்நாறுங்கூர்தற்கருந்தடங்கண்ணிபாகத்
தடிகளையிதயத்தெண்ணியஞ்சலிக்கரத்தராகித்
தடிபொதியினராய்மெல்லச்சூழ்வதுதகுதியாரு
மொடிவிலிவ்வாறுசூழுமுத்தமருணத்தாரொல்லாம். (௨௮)

மனையொடுமக்கள்சூழமகிதலத்திடைப்பனளுள்வாழ்ந்
தினைதரல்சற்றுமின்றியிந்திராதியர்தம்வைப்புந்
துனைதரப்புகுந்துபோகந்துகளறத்துய்த்தபின்னர்
முனையடுசூலத்தெம்மான்முழுப்பதமருவிவாழ்வார். (௨௯)

கலமலிகடல்சூழ்நாகைக்காரோணத்தைங்குரோசம்
புலமலிதரச்சூழ்வாரேற்பூமியைச்சூழ்ந்தபேறு
நலமலியவளைவானநாடருஞ்சூழ்வரொண்ணிற்
குலமலியதன்சீராதிசேடனுங்கூறற்பாற்றே. (௩௦)

வரசரோருகன்மாலாதிவானவரியாருமென்றும்
பரசநீளைங்குரோசமான்மியஞ்சிலபகர்ந்தா
மரசகேசரிமுன்னுயயாவருஞ்சூழ்ந்துமேன்மை
விரசமாமுத்திபெற்றவிதமுமேலெடுத்துச்சொல்வாம். (௩௧)

பஞ்சகுரோசமான்மியப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௮ இ திருவிருத்தம் - ௧௬௯௫.

# அரசகேசரிமுதலியோர்முத்தியடைந்தபடலம்.

பொருவருந்தவத்துச்சூதமாமுனிவன்பொன்னடித்தாமரையிறைஞ்சி
மருவரும்வளஞ்சானைமிசவனத்துமாதவர்யாவருமைய
வெருவருமரசகேசரிமுதலோர்மேவினர்முத்தியென்றுரைத்தாய்
பருவருந்தரமிலஃதுரையென்னப்பகருமச்சூதமாமுனிவன். (க)

ஒருகவிமிதிப்பவிலாங்கலிக்குலையினெண்பழமொன்றுறக்கழன்று
மருமலிபலாமுட்புறக்கனிகீண்டுமாங்கனிசிதறுபுவாழைப்
பொருபுலியடிக்காய்க்கூன்குலைமுறித்துப்புண்டரீகத்தரும்பவிழ்க்குந்
திருமலிபழனஞ்சூழுடுத்தோங்கிச்சிறப்பதுச்சயினிமாகாளம். (உ)

முனிவரரிமையோர்புரந்தரனொருநான்முகனிகற்றிகிரியேந்தண்ண
றுனிதவிர்கணத்தர்முதலியபலருந்துணர்மலரிறைத்திறைத்திறைஞ்ச
நனிவரமவர்க்குநல்கிமாகாளநாதனென்றொருபெயர்புனைந்து
வனிதையோர்பாகமொன்றுநீங்காதுமகிழ்ந்தினிதமர்வதந்நகரம். (ங)

தூயவந்நகரினாய்கர்தங்குலத்துத்தோன்றினன்வாய்மையிற்சிறந்து,மே
யவன்விண்டுதத்தனென்றெவரும்விளம்பிடுபெயரினன்றவத்தி, னுயவன்
சுகுணன்றனதத்தனெனும்பேரமைந்தவன்பிறையெனவளர்நாட்,டையவல்
வினையாலடைந்ததோர்கொடுநோய்செழித்தெழுபயிரடுகளைபோல். (ச)

பிணியடவருந்திநாட்குநாட்டேய்ந்துபேதுறுமைந்தனைநோக்கி
யணிகெழுவிண்டுதத்தனுள்ளுடையாவலமிக்கிரங்கினனந்தோ
கணிதமிறவஞ்செய்தொருமகப்பெற்றேன்கடும்பிணியடைந்ததம்மகவைத்
தணிதருந்திறமற்றெதினெனவாய்ந்துதக்கதீதென்றிஃதாற்றும். (ரு)

சிறந்தபல்லாயுள்வேதியர்க்கூவிச்செம்பொருண்முகந்தனன்வீசி
நிறந்தபுவிதமென்மைந்தனைவருத்துநெடும்பிணிதவிர்த்தருள்வீரென் [ந்து
றறந்தழைமனத்தான்வேண்டலுமனையாரமைந்தநோயின்னதென்றுணர்
விறந்தமற்றதற்குமூலமுந்தெரிந்துமேன்மணியாதிகைக்கொண்டு. (சு)

மணிமனுமருந்துமூன்றினுமயன்றும்வன்பிணிதவிர்ந்திலதாக
தணிதருந்தெய்வத்தாலெனமொழிந்து * தரணிகளகன்றனர்பின்ன
ரணியொருதந்தைமுனிவரைப்பரசியெம்பிரான்கோயிலுட்புக்குப்
பணியெனவிடுத்தாருங்கவனுரைத்தபடியொழுகினன்றனதத்தன். (எ)

ஒழுகுறுநாளிலத்தலத்தருளாலுறையுமாகாளனைப்பணிவான், வழு
வறுதவத்தானருட்குணநிறைந்தான்மாண்புசால்பல்கலையுணர்ந்தான், மு
ழுமலஞ்சவட்டும்வெள்ளியநீற்றுமுண்டத்தான்கண்மணித்தொடையான்
செழுமறைப்பொருளைந்தெழுத்தெண்ணும்வாமதேவமாமுனிவரன்வந்தான்.

வந்தமாமுனியைக்கண்டெதிரோடிமலரடிமுடிமிசைப்பொருத்திப்
பந்தநோய்வருத்தப்படுதனதத்தன்பணிந்தனனவனுளமிரங்கிச்
சந்தமார்மைந்தவெழுந்திருவாழ்நாட்குதியிற்பெறுதியென்றியம்ப
நந்தலின்மகிழ்வோடெழுந்தெதிர்நின்றுநயப்புறவிண்ணப்பஞ்செய்வான்

---

* தரணிகள் - வயித்தியர்.

அடியனேன்பிணியால்வருந்துவேன்முயன்றுமாயுள்வேதியரொழித்தகன்
றெடியசோதிடநூலுணர்ந்தவரகவை † நிகழ்பதினாறெனப்பகர்ந்தா [ரூர்
ரொடிவறநீநூறாண்டளவுறுகென்றோதினையுய்ந்தனனென்றான்
றடிதலில்குணஞ்சான்முனிவனுள்ளுணர்ந்துசாற்றிடுங்கருணையாலீது, ()

இப்பர்தங்குலத்தோழூழ்வலியதனாலீரெட்டாண்டறுதியினிறந்து
தப்பறநடுவனூர்புகுந்தொருநாஞ்சாற்றியவாசியான்மீண்டு
துப்பவிர்சடையாரருளினால்வாழ்ந்துதோலுறுமுத்தியும்பெறுவா
யொப்பறவீற்றினென்றினிதருளியொழிந்தனனருட்பெருமுனிவன். ()

தவமுனியுரைத்தவாசியும்பிறவுந்தனையீன்றவர்க்கினிதுரைத்தே
யவமிலென்றிறமாப்புறுதனதத்தனைத்தொழின்முதலெனப்பகரு
நவவடிவங்கன்றுபொலியுமாகாளநாதனையிராப்பகலருச்சித் [ம்.
துவமையில்பணிசெய்தொழுகுநாளொழிந்தவுள்ளவாண்டொருபதினாறு

கருகிருடிரண்டாலன்னமெய்க்கூற்றங்கடவிடவிரைந்துவெம்படர்வந்
தொருதனதத்தனுயிர்கவர்ந்திடுவானுன்னினரனையனைக்காலை
மருமலர்க்கடுக்கைமாலைமாகாளவள்ளலைப்பூசைசெய்திருந்தா
னருகுறற்கஞ்சியவன்மனைப்புகும்போததுசெயக்குறித்தனரிருந்தார். ()

அத்தயாமத்துத்தரிசனஞ்செய்தேயணிமனைப்புகுந்தனனதுபோ
தொத்தபோதிதுவென்றொருதனதத்தனுயிர்கவர்ந்தனர்படர்சென்றார்
முத்தமாமுனிவன்மொழிநினைந்துடம்பைமூடியாங்கொருசிறையமைத்து
ச், சித்தமாழாத்தலின்றியேயமர்ந்தார்தெரியிருமுதுகுரவோரும். (௧௪)

படர்தனதத்தன்றனைக்கொடுவிரைந்துபடர்ந்தனரியமன்முன்விடுத்தா
ரிடர்தபவனையானவனடிவணங்கியெய்தினேனனைமேற்கொண்டே
யடர்புலமுனிவனனைமற்றிதுவென்றறிதரவுரைத்தனனடுவன்
சுடர்விழிநுதலானனையென்றஞ்சித் துனைந்துநீபோதியென்றுரைத்தான்.

உரைசெயமகிழ்ந்துமீட்டுமற்றவன்றூனுறப்பணிந்தொருதனதத்தன்
புரைபடுபாவத்தொடக்கினர்நரகிற்புக்குழன்றழிவதுதெரிவான்
விரையுமென்னுள்ளமருடியென்றிரப்பவிரித்துரையொருவனைக்கூட்டி
வரைநரகனைத்துங்காட்டுகவென்றான்மற்றவன்றெரிதரதெரிப்பான். ()

இதுமுதனரகம்பெயரிரவுரவமெரிதழல்வெதுப்புறப்பட்டுக்
கதுவழல்சுடுநெய்க்கலத்திட்டுலைறத்துக்கவற்றிடப்பட்டுமிக்குழல்வார்
மதுமலர்க்கூந்தற்பரமடவார்கோண்மணந்தவர்பரர்பொருள்கவர்ந்தோர்
சதுமுகனெடுமாலறிவரும்பெருமான்றனையவனுரையைநிந்தித்தோர். ()

மற்றஃதிரண்டாவதும்காரவுரவப்பெயர்புனைந்ததாலதனுட்
செற்றபல்சூசிகுறியிடையழுந்தச்செருகுறப்பட்டழிகொடியா
ரூற்றபல்லுறுப்புஞ்சிதைத்திடக்கவல்வாருறுகுருமனைவியைப்புணர்ந்தார்
கற்றவர்தமைநிந்தித்தவர்நன்றிக்கடனறியாதறவொழித்தார். (௧௮

---

† அகவை - பிராயம்.

அன்னதுமூன்றுவதுமந்ததமமென்றறைபெயருடையதந்நரகிற்
கொன்னவில்கரும்பொனல்கிளறுறகொடியகொடிமுதற்பறவைகள்சூலப்
பன்னருந்துயரிற்கண்கொடுத்துழலும்பாதகர்பரமடமாத
ரின்னலந்திளைத்தவெண்ணிமற்றவர்தமெழினலநோக்கினர்மாதோ. (௧௯)

ஆங்கதுநாலாவதுபிரமுகமென்றறைபெயருடையதாலதனுட் [வார்
டங்கமைகொடிற்றைநெருப்பெழவெதுப்பிச செய்யகாயபிடுங்கிடக்கவல்
பாங்கமைபரமனடியவரைவானப்பரப்பமைதேவரைத்தவத்தி
லோங்குநல்லவரைக்குரவரைபபிறரையுளைதரநிந்தைசெய்தவரே. (௨0)

நிரயமதைந்தாவதுபுகல்பெயரோநிம்மனமென்பதாலதனுட்
பரவுறுப்பனைத்தும்வாளினாலரியப்பதைபதைத்தழிதருதியர்
கரவறுநட்புக்கடைப்பிடித்தவர்பாற்கருநருக்குய்யஞ்செய்தோரும்
விரவியபிறர்பாற்கேளிர்பாற்றுரோகம்விளைத்ததிதுயரஞ்செய்தோரும். ()

நேர்தெரியஃதாறுவதுகாமநிகும்பமென்பதுகொடிததனுள்
வார்மணல்வறுத்திட்டதனொடுகூட்டிவறுத்திடத்துடிதுடித்தழுவார்
பார்விலங்குகளைச்சிறைப்பறவைகளைப்பையுணோக்காதுயிர்செகுத்துக்
கூர்நுனைக்கருவிகொடுதசையரிந்துகொடுந்தழல்வெதுப்பியுண்டவரே. ()

வலனுடையேழாநரகிதுபெயர்வீவற்சமென்றுரைப்பதாலிதனுள்,வில
கருமலமூத்திரங்களேயமையும்வெய்துயிர்த்தவற்றினையருந்தி, யலகில்ப
ன்றுணுமழுந்திடுகொடியோரரசர்பாற்கோளுரைதொருவர், நலமிகுகு
டியைக்கெடுத்தவர்பொய்மைநவின்றவர்கொடுமொழியுரைத்தோர். (௨௩)

எதிர்தெரிகுவதெட்டாவதாநாமமிசைப்பர்குச்சிதமெனவிதனுட்
பிதிர்தலில்சோரைசுவேதநீர்வயிறுபெருத்திடவருந்திவெய்துயிர்ப்பார்
முதிரிருகுரவராரியர்விருந்தினுற்றிறரிவர்பசித்திருப்பக்
கதிர்படுசாலியடிசினெய்பருப்புக்கருனையாகியவைதனித்துண்டார். (௨௪)

சுடுதொழிலொன்பானரகிதுநாமந்துர்க்கமென்றுரைப்பர்மற்றிதனு
ளடுதிறலுரகந்தேளிரும்பதனாலமைத்தகண்டகம்வருத்திடலாற் [ர்
கொடுவெதுப்படைவுற்றையகோவெனபார்குறிக்கொணாத்தீநெறிநடந்தா
வடுவுறவழிமுள்ளிட்டவர்பிறர்தம்வருததங்கண்டிரங்குறுக்கொடியோர்.

இந்தவெந்நரகங்கொடியபத்தாவதியம்புபேர்சூசிமற்றிதனு
ளந்தமிலிரும்பாற்செம்பினாலுருக்காலமைதழற்றூணங்கடழுவி
நொந்தசிந்தையராய்வெதும்புவாரயலார்நோக்குடைமனைவியர்தம்மைத்
தந்தமக்குற்றவலியினால்வலிந்துதழுவியதவலருங்கொடியோர். (௨௫)

உறுபதினோராவதுமிகக்கொடியதுரைப்பர்துச்சகப்பெயரிதனுண்
முறுதழலுருக்குசெப்புநீரயநீர்முழுத்துயர்வங்கநீர்வாயிற்
கதுமெனப்புகட்டக்கதறுவார்விசேடகாலத்திற்பாருணவுண்டார்
மதுநுகர்ந்தவர்சூதகத்தினுண்டவருண்மதிப்பருமிழிஞரூணுண்டார். ()

கண்டபன்னிரண்டாவதுமிகக்கொடிதுகண்டகசம்விருதப்பேர்
கொண்டதிந்நரகினனியுடல்வெதும்பக்கொப்புளங்களும்பரந்தேறத்
தண்டலிருகம்வருத்திடவொதுங்கத்தகுநிழல்சிறிதிலாதழிவா
ரண்டர்பற்பலருஞ்செறிதருமுடம்பிளைக்கவருத்தியகொடியோர்.(௨௮)

செறியிதுபதின்மூன்றுவதுநாமஞ்சித்திரதுந்துமியென்பர்
மறிவருமிதனுளிடிமுழக்கெழுந்துவண்செவிருடைதரக்கவல்வார்
வெறிமிகுகாமமயக்கமிக்கேறிவிடர்புகல்கானமேகேட்டார்
பொறியிலரயலார்மனைவியரழகுபுகன்றிடச்செவிகொடுத்தவரே. (௨௯)

அடுதொழிற்பதினாலாவதிந்நரகமறைபெயர்மிருதமாமிதனுட்
கொடுவரிவேங்கையாதிபாய்தரக்கூகூவொலியெழுப்புபுகவல்வார்
தடுவரியன்பிற்பிதிரர்தம்பொருட்டுத்தகச்சிராத்தம்புரியாருங்
கெடுவதுவிரும்பிச்செயத்தகுங்கிரியைகெழுமுறச்செயாதபாவியரும். ()

ஏங்கிதுபதினைந்தாவதாநரகமியம்புவர்கருத்தமமெனும்பேர்
தீங்குசெயிதனுளழுந்துபுகிருமிதின்றுசெந்நீர்குடித்தழுவார்
தாங்குதலிலராயடைந்திறந்தார்க்குத்தகப்புரிகடன்புரியாரு
மோங்கும்வண்செல்வமுற்றுமோருதவியுளுற்றல்கண்டுஞற்றிடாதோரும்.

கேடுசெய்பதினாறுவதுகிலகிலப்பெயர்பூண்டதாமிதுகாண்
பாடுசெய்யிதனுட்குறைவந்தடிக்கப்பறந்துமண்மாரிமேற்பொழிய
நீடுசெய்தழன்மற்றடியுறவெதுப்பநெடுந்துயரடைந்துளங்கவல்வா
ரீடுசெய்மறையோராதிநால்வருக்குமியற்றியதுரோகவெங்கொடியோர்.

தழல்படுபதினேழாவதுநிசிதசத்திரமெனும்பெயர்பூண்ட
துழல்படுமிதனுட்படர்கதைதாக்கவுள்ளுடைந்தொய்யெனவலறிக்
கழல்படுவிழியராய்க்கழிதருவார்கருதுறுவிரதநன்னாளிற்
சுழல்படுமனத்தராயஃதொழித்துத்துடிப்பணுத்துணையுமெய்சாதார். ()

கறையமைபதினெட்டாவதுசத்தாங்காரமென்றுரைசெயும்பெயர
தறைசெயுமிதனுட்டழல்படுவெந்நீரழுந்திமேலெழுந்தொறுங்கதறி
நிறைகொடுந்துயர்பூண்டுடலம்வெந்தழியுநீர்மையார்சிவனடியவரை
யிறைமிகப்படுத்திப்பொய்ச்சமயத்துவீழ்த்தியதீயவெங்கொடியோர். ()

கூடியபத்தொன்பதாவதாநிரயங்கூடசான்மலியெனும்பெயரி
னோடியதிதனுளழலிடைவெதுப்பலுற்றவாள்கொண்டுநாவரிந்து
நீடியகதையாலெயிறெலாந்தகர்ப்பநிலைகுலைந்தையகோவென்பார்
பாடியதெய்வமில்லையென்றிகழ்ந்தபாதகர்மற்றவரொடும்பயின்றோர். ()

நெடுந்திறலிருபதாவதென்றுரைக்குநிம்மனோதப்பெயர்நரக
மடுந்தழலிதனுளடிப்பெருவிரல்சேர்த்தசைத்துமேன்முடக்கிரும்பேற்றிக்
கொடுந்தழலடியில்வளர்த்திடவெதும்பிக்குலைகுலைந்தழிதருகயவர்
கடுந்தழனயனத்துறைவனாலயத்துட்கருதருமனுசிதஞ்செய்தார். (௩௯)

வேறு.

இன்னமும்பல்லவுள்ளதனித்தனியியம்பப்புகாற்
பன்னரிதாகுநாளும்பலசெலுஞ்சூழ்ந்தநோக்கித்
தன்னமுமொழியாவண்ணமுனமொன்றுன்சாற்றப்புக்கா
னன்னவனன்னவாறேசூழ்ந்தனனனைத்துந்தேர்ந்து. (கஎ)

நடுவன்முன்வந்ததாழ்ந்தானரகபேதங்களெல்லாம்
விடுதிறமின்றித்தேர்ந்தாய்கொல்லெனவிளூதலோடுங்
கடுவலியுடையாயெல்லாங்கண்வெதுப்பேறக்கண்டேன்
வடுவமையிவைசாராமேவயங்குதற்குபாயமுண்டோ. (கஅ)

உள்ளதையுரைத்தாயென்னிலுய்குவனடியேனென்றுன்
றள்ளருஞ்சிவமெய்ஞ்ஞானந்தடையறவடைவதொன்று
விள்ளருஞ்சிவனைப்பூசைவிருப்பினுற்றிடுதலொன்று
கள்ளமிலவன்றுள்சார்ந்தார்க்கலந்திறைஞ்சிடுதலொன்று. (கக)

இன்னவையரியவென்னிலுலகமீரேழுமேத்துங்
கன்னவின்மதில்சூழ்நாகைக்காரோணத்தைநகுரோச
முன்னரும்விதிமேற்கொண்டுமுயலுபுசூழ்தலொன்று
பின்னர்வேறில்லையென்றுப்பேசுபுவிடுத்தானன்றே. (சo)

விடுத்தலுந்தன்னூர்வந்துவிட்டதோருடம்பிற்புக்குப்
படுத்தவனெழுந்தாற்போலவெழுந்தனன்பசும் ‡ பொற்றத்த
னடுத்ததாய்தந்தைநோக்கியதிசயமடைந்துவாரி
யுடுத்தபேருலகின்மைந்தற்கொப்பிலையென்றுவந்தார். (சக)

மொழிதவவாமதேவமுனியருள்வரத்தினாலும்
பொழியருண்மாகாளேசன்பூசனைப்பயத்தினாலுங்
கழிசினநமனூர்புக்குங்காதலன்மீண்டானென்று
செழியுவகையராயாங்குநிகழ்ந்தமைதெரியக்கேட்டார். (சஉ)

இருமுதுகுரவர்கேட்பவியமனூர்புக்கவாறும்
பெருமுனிதனக்களித்தபெருவரமுரைத்தவாறு
மொருபரன்வரமென்றுள்ளத்துணர்ந்தவன்விடுத்தவாறும்
வெருவுசெய்நரகபேதங்கண்ணுறவிழைந்தவாறும். (சங)

தமனொருவனைச்செலுத்தித்தெரித்திடச்சமைத்தவாறு
நமனருடாங்கியன்னூரகெலாந்தெரித்தவாறுங்
o குமனுயிரழுங்கல்யாவுங்குறிக்கொடுகண்டவாறுஞ்
சமனடிவணங்கித்தீர்வுசாற்றெனவிரந்தவாறும். (சச)

---

‡ பொற்றத்தன் - தனதத்தன்.

o குமன் - கு - மன் - எனப்பிரித்துஉலகின்மன்னியவெனப்பொருள்கொள்க.

ஞானமுன்றூன்றுங்கூடிநாகைக்காரோணமெய்தி
யீனமிலங்குரோசவெல்லையயன்பிற்சூழ்த
லானதேகரகமெல்லாமகற்றுமென்றுரைத்தவாறு
மூனமொன்றுமற்சொற்றூயர்தனதத்தனென்பான், (சரு)

விருப்பொடுகேட்டவிண்டுதத்தனும்விரைந்துசென்று
கருப்புவிற்காளைநாணுங்கட்டழகுடையான்மேருப்
பொருப்புநேர்புயத்தான்காவல்பூண்டுமாநிலம்புரப்பா
னருப்புமாநலத்தோனுயவரசகேசரிக்குச்சொற்றான். (சசு)

அடிகளிற்றண்ணலாயவரசகேசரியிறும்பூ
தொடுதனதத்தன்றன்னைவரவழைத்துவகைசெய்து
கொடுநமனூர்புக்கிங்குக்குறுகியவளவுமொன்றும்
விடுதலிலாதுகேட்டுவிம்மிதமேன்மேற்கொண்டான். (சஎ)

அத்தனதத்தனோடுமவன்பெருஞ்சுற்றத்தோடும்
† வித்தநன்கமையக்கொண்டுமிடைநததன்கடும்பினோடுங்
குத்தனதென்றுகாக்குங்கோமகன்விரைந்தெழுந்து
முத்தன்மாகாளநாதன்முளரியஞ்சரணந்தாழ்ந்து. (சஅ)

விடையுடையணையபெம்மான்விடைகொடுத்தருளப்பெற்று
மிடைபெருங்காடுநாடும்வெற்புமெண்ணிலகடந்தே
யடையலர்மருமம்போழாவாவிவாய்மடுக்கும்வேலான்
கடையினும்பொலியுநாகைக்காரோணநகர்வந்துற்றான். (சகூ)

புண்ணியம்பயக்குந்தேவதீர்த்தத்துப்போநதுமூழ்கிக்
கண்ணியநீறுபூசிக்கண்மணித்தொடையும்பூண்டு
தண்ணியபதமைந்தெண்ணித்தவலருஞ்செம்பொற்கோயி
லண்ணியசிகரிபுக்கானனைவருநிழலிற்போத. (ருo)

பரவருள்கொழிக்குநாகாபரணமால்களிற்றைத்தாழ்ந்து
புரவுசெய்தருள்காரோணப்புண்ணியப்பெருமான்முன்போய்
விரவுமன்பெழுந்துபொங்கமெய்ம்மயிர்சிலிர்ப்பப்போற்றி
யுரவுகொள்வேந்தர்வேந்தன்விடங்கர்முனுற்றானவே. (ருக)

மண்ணகங்களிப்பமேயசுந்தரவிடங்கவள்ளல்
கண்ணகன்மலர்த்தாள்போற்றிக்கருந்தடங்கண்ணளாய
பெண்ணணங்கரசிதாளும்பெட்புறப்பணிந்துமற்றை
யண்ணலம்பொருவிறேவர்யாரையுமணைந்துபோற்றி. (ருஉ)

சுற்றுறைதலங்களெல்லாமொவ்வொன்றுத்தொழுதுவந்து
நற்றுறைபோகுமன்னனுகமாநகரநாப்ப
ணுற்றுறைவிருப்பமேவவொளிகிளர்தனக்குந்தன்பாற்
பற்றுறைமற்றுளோர்க்குமாளிகைபலசமைத்தான். (ருங)

---

† வித்தம் – பொன்,

அவரவர்தகுதிக்கேற்பவணிகிளர்மாடநல்கித்
தவலருந்திருவத்தோடுதழைதரவமைத்தபின்ன
ருவமையிறந்தோர்மாடங்குடிபுகுந்தொருகோலோச்சிப்
புவனமுற்றினிதாண்டான்புரவலசிங்கநாமன். (௫௪)

ஆலயம்பெருகச்செய்துமணிவிழாப்பெருகச்செய்து
மாலயற்கரியான்பூசைவரவரப்பெருகச்செய்துஞ்
சோலையுஞ்செறுவுமற்றத்தடவையும்பெருகச்செய்துங்
காலையுமாலைப்போதுங்கைகுவித்திறைஞ்சுவானால். (௫௫)

தினவிழாக்கண்டும்பக்கத்திருவிழாத்தெரிந்துமாதக்
கனவிழாப்பார்த்தும்வேளிற்கமழ்விழாநோக்கஞ்செய்து
பிணவிழாவுள்ளவெல்லாமியற்றிடநாட்டம்வைத்துந
தனவிழாவென்றியாருஞ்சாற்றிடச்சிறப்பிப்பானால். (௫௬)

சுந்தரவிடங்கப்பெம்மான்றெழுந்தருபவனிகண்டு
மந்தரமருங்குலெங்களருட்கருந்தடங்கணம்மை
வந்தரமடவார்போற்றவருவிழாச்சிறப்புக்கண்டு
மந்தரம்பொருவுந்தோளான்மகிழ்ச்சியாம்புணரிமூழ்கும். (௫௭)

சிலபகல்சுதைக்கடேசச்செம்மலார்விழவுகாண்பான்
சிலபகனடுத்தலேசத்தேவனார்விழவுகாண்பான்
சிலபகல்விண்டுநாதச்செல்வனார்விழவுகாண்பான்
சிலபகலகத்தீசஞ்சார்செம்மையார்விழவுகாண்பான். (௫௮)

வளர்கயிலாயநாதர்மாண்புசால்விழவுகண்டுங்
கிளர்பெருஞ்சட்டைநாதர்கிளப்பரும்விழவுகண்டு
முளரளிப்பசுந்துழாய்பூண்சுந்தரராசவும்பன்
றளர்வரும்விழவுகண்டுந்தனித்தனியுளங்களிப்பான். (௫௯)

இன்னணங்களிப்போனித்திங்களினியைவிசேடத்
தென்னருமைங்குரோசமிணிதுறச்சூழ்வதோர்ந்து
தன்னமர்களிப்புமேவத்தானுஞ்சூழ்ந்துறுநாள்வாழ்ந்து
பின்னெம்பெருமான்பாதம்பிணைந்தின்பந்துய்த்தானன்றே (௬௦)

அனையவனிழல்போற்பின்னுடைதனதத்தனாதி
யெனையருமைங்குரோசத்தெல்லையைவிருப்பிற்சூழ்ந்தார்
புனைதனதத்தனன்றன்போலின்பமுத்திபெற்றான்
வினையறுபலருந்தத்தந்தகுதியின்மேவினரால். (௬௧)

குடமதிவருபின்பக்கங்கூடியசதுர்த்தசிக்க
ணிடர்தபவருமிராவிற்காரோணலிங்கத்திற்குப்
படருமாயிரவாளெவ்வோர்படிதருபால்கொண்டாட்டிச்
சுடர்விடுபாலிற்கேற்பமற்றவுந்துலங்கவாட்டி. (௬௨)

ஆட்டுதற்கியைய வூட்டியன்பினாதிப்பாரே
னீட்டுசெஞ்சடையான்மேனிநிலாவுபுண்டரீகன்சேரக்
கூட்டுவண்கோலங்காணக்கொடுத்தருளுவன்மாகாட்சி
காட்டுமிக்காட்சிவானநாடர்க்குமரியதாமால். (௬௩)

ஆயவானிரண்டைஞ்ஞூறுசரந்தபாலுரைத்தவாறே
நேயமாயாட்டியூட்டிநிலாவுமிக்காட்சிகாண்டற்
காயபேரவன்றணிமூலடைவரென்றுரைப்பதென்னோ
பாயவான்முத்தியனனேர்படிவமென்றுரைப்பதன்றி. (௬௪)

சிவநிசியாமநான்குஞ்சிறந்தகாரோணலிங்கந்
தவமிகவிழித்துப்போற்றித்தரிசிக்கும்பெருமையாள
ரவமறப்பிறதலத்திலுயிரநிசிகண்டேத்து
நவமிகுபேற்றையன்றேயடைவரோவில்லதென்னே. (௬௫)

மதிதொறும்வருபின்பக்கத்தட்டமிவருவதோர்ந்து
துதிபெறுதூயவானைத்தரிசறவாட்டுவாரோற்
பதியவர்கிளைகளோடும்பன்னெடுங்கற்பகாலந்
திதியமைசிவலோகத்துச்சேர்ந்துவாழ்ந்திருப்பரன்றே. (௬௬)

மதுவழிந்தொழுகுமிந்தீவரமலராயிரத்தாற்
புதுநறுந்தொடையல்கட்டிப்புண்ணியவிடங்கப்புத்தேள்
விதுமுடிக்கணிவராயின்வேண்டியபோகந்துய்த்துப்
பதமனுநறுமுறுக்கப்படர்ந்துபேரின்பந்துய்ப்பார். (௬௭)

திருவளம்பொலிபன்மூன்றுந்திதியெனும்பிரதோடத்திற்
பொருவருமாயிரம்பேர்புகன்றுகாரோணலிங்கத்
தொருவறவருச்சிததேத்துமுததமர்சனனநதோறும்
வெருவறப்புரிந்தபாவமனைத்திற்கும்விடைகொடுத்தோர். (௬௮)

பொருள்பெறவேண்டினாலும்புத்திரர்வேண்டினாலு
மருடபுகல்விஞானம்வயங்குறவேண்டினாலுந்
தெருண்மலியெவைக்குமேலாஞ்சிவபதம்வேண்டினாலு
மிருடவிர்தனிக்காரோணத்தெல்லையைங்குரோசஞ்சூழ்வார். (௬௯)

இமையவர்தொழுகாரோணத்தெல்லையைங்குரோசத்துள்ளு
மமைமணலெல்லாமிலிங்கமளாயநீரொல்லாநதீர்த்தங்
கமையுறுதவத்தின்மிக்கோர்காதலிற்பயில்வாரெல்லா
முமையொருபாகர்மேயவத்தலத்தின்சீருரைப்பதென்னே. (௭௰)

கற்பகநாடுபோற்றுங்காரோணநகரமேவி
யற்பகனகலாக்கேள்வியரசகேசரிமுன்றானோர்
பொற்பமைவீடுசேர்ந்தபுண்ணியஞ்சொற்றுமுத்தி
சொற்பயில்புகழ்சால்சாலீசுகனுற்றவாறுஞ்சொல்வாம். (௭௧)

அரசகேசரிமுதலியோர்முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௧ இ திருவிருத்தம்-௧௭௬௬.

# சாலீசுகன்முத்திபெற்றபடலம்.

கானார்மலர்செறிணைமிசமேவுங்கனிதவத்தோ
ரானார்வண்சூதமுனிவரன்செம்பொனடிவணங்கி
யூனார்நசையொழிசாலீசுகன்முத்தியுற்றகதைத்
தேனார்தரப்புகலென்னவம்மாமுனிசெப்புவனே. (க)

காமருநாகமடந்தையைவேட்டபின்காரளிசூழ்
பூமருமாலையன்சாலீசுகன்புகழ்ப்பூணுடையா
னேமருவுங்கணவனோடுநாகையினெய்தியிருந்
தோமருவும்பொருளானானைப்போற்றலுவந்தனனே. (உ)

வாகையரசர்திறைநல்கவாங்கிமருவுமிட
நாகையெனக்கொண்டசாலீசுகனொருநம்பெருமாற்
கோகைமருவமதிலைந்துகோபுரமொள்ளொளிசா
லைகயமைந்தவிமானமும்யாவுமியற்றினனே. (ங)

திருவாபரணம்பொன்னான்மணியான்மிகச்செய்தளித்து
மருவாதரவிற்பரிவட்டம்பட்டின்மகிழ்ந்தளித்து
மொருவாச்சிறப்பினபிடேகமாதியுறப்புரிந்தும்
வெருவாவிறற்கழலாளனன்பாற்றுதன்மிக்கனனே. (ச)

கார்த்திகைத்திங்கண்மதிவாரந்தோறுங்கனகத்திற்செய்
தார்த்தியிற்கூவிளமாயிரமாயிரமண்ணலருண்
மூர்த்திபொற்றாளிலருச்சித்தும்வேறுமொழிபிறவும்
பூர்த்தியினோங்கப்புரிந்தான்றிறன்மைப்புரவலனே. (ரு)

அடியாரெதிர்வரினேர்விரைந்தேகியடிதொழுது
கடியார்மலரிட்டுவேட்கைவிளைவிக்கசிந்துநிற்பான்
பொடியார்செம்மேனிப்பெருமான்புராணம்புகலுகின்ற
நெடியார்பலருமங்கின்மலனாகநினைபவனே. (சு)

இந்தத்திறத்தினிவன்பயினாளிலிவன்புணரும்
கந்தக்குழலிகருந்தடங்கண்ணிகருணைகொள்வான்
முந்தச்சினகரம்பொன்னான்மணியான்முழுதுஞ்செய்து
சந்தக்குழம்புமுதலபிடேகந்தகச்செய்வளே. (எ)

பிருகுவின்வாரந்தொறுமாயிரம்பெயர்பேசியுள்ள
முருகும்விதநறுஞ்செஞ்சாந்தருச்சித்துறவுவந்தும்
பெருகுநிவேதனமாதியநாளும்பிறங்குவித்து
மருகுதறீரன்புமேன்மேலும்பொங்கலவாவுவளே. (அ)

பார்த்திவன்றேவிகருந்தடங்கண்ணிபணிகளிவ்வா
றார்த்தியிற்செய்யவளையாளுவந்தின்னருள்சுரந்தாள்
சீர்த்தியின்மேவும்புரவலனெஞ்சிற்றிகழுவகை
பூர்த்தியினோங்கக்கருப்பமுற்றாளந்தப்பொற்கொடியே. (கூ)

பொன்னங்கொடிபத்துத்திங்களுநீத்தோர்புதல்வற்பெற்றுண்
மன்னர்தமிற்பெருஞ்சாலீசுகன்செம்பொன்மாரிபெய்து
மின்னங்கலருஞ்சடைமுடியோற்குவிசேடமுற்றுந்
தன்னங்கழிந்துபிரயமாகச்சமைத்தனனே. (௧௦)

பின்றையின்வளர்மகற்குத்தொண்டைமானெனும்பேர்புனைந்து
முறையிற்கலைகளனைத்தும்பயிற்சிமுறக்குறைவாந்
துறையிற்புகக்கண்டகலைவையொரீமொட்டுத்துணனியநாட்
கறையிற்றவிர்ந்தமணிநெடுமோலிகவித்தனனே. (௧௧)

எல்லாமகன்கைக்கொடுத்தரசாண்டிங்கிருத்தியென்று
நல்லாதரவின்மனைவியுநதானுநயந்துசென்று
செல்லாமெனுங்களக்காரோணநாதர்திருமுனின்று
† பொல்லாவமையுடனிப்பானெடுத்துப்புகலுவனே. (௧௨)

ஆராவுடம்பினமர்வாழ்க்கையினெனக்காசையில்லை
பாராதரிக்குநின்பொற்றாளடையும்படியருள்வாய்
தேராமலமொருமூன்[illegible]ாருளச்செம்பொருளே
பேராதரத்தொடுகாரோ[illegible]மேயபெருந்தகையே. (௧௩)

அரியாதியர்பதநல்குவையாயினுமாசையில்லை
விரியாமிளிர்நின்பதத்தேகலக்கும்விதமருள்வா
யெரியாவெழுகண்ணுதலோயடியவரொய்ப்பில்வைப்பே
பிரியாமைமேற்கொடுகாரோணமேயபெருந்தகையே. (௧௪)

ஆடுங்கழலினடைவன்றியொன்றினுமாசையில்லை
தேடுமதிற்கலந்தின்புறுவாழ்க்கைத்திருவருள்வாய்
பாடும்புலவருளக்கோயிலாயுயர்பல்சிறப்பும்
நீடும்பொலிதிருக்காரோணமேயபெருந்தகையே. (௧௫)

என்றுதுதித்துவிடங்கர்பொற்றாளுமினிதிறைஞ்சி
யொன்றுகருத்திற்கருந்தடங்கண்ணியையுறதிறைஞ்சி
யன்றுவெளிவந்தொருதேமணுகியகனமர்ந்து
நன்றுமருவினனெங்கோன்றிருவருணல்கினனே, (௧௬)

நல்குந்திருவருளாற்றிருப்பார்தனினைத்துமிக்
கொல்குமருங்கிற்கொடியோடுமொனறனுறமலொன்றிப்
புல்குஞ்சிறப்புமரீஇப்பரமானந்தபோகந்துய்த்தா
னல்கும்பெருந்திறல்வானவர்பூச்சொரிந்தார்த்தனரே. (௧௭)

விருச்சிகமாதமதிவாரமாயிரவில்லங்கொண்டே
யருச்சனைசெய்பவர்வில்வத்திற்காயிரமாண்டளவாக்
கருச்சரியுஞ்சிவலோகத்துமேவிக்களிப்புறுவா
ருருச்சனமையாபின்னர்மேலாயபோகத்திளுங்குவரே. (௧௮)

---

† பொலலா - வினைமுற்றுப்பெயர்.

அறைபுகழ்மிக்ககாயாரோகணமெனுமைந்தெழுத்து
முறைமையினோர்துபதமாம்பெரும்பொருண்மொய்த்திடலாற்
கறைதவிரிம்மந்திரமாயிரமுட்கணிப்பவர்க
ணிறைமகம்யாவும்புரிபயன்பெற்றுவிரம்புவரே. (௧௯)

பாணித்திலங்கைபங்கர்பொற்முளிற்பரிதிகுலக்
கோணித்தியமுத்தியுற்றதுதேறக்கூறித்துரைத்தா
மேணித்தமுமின்பமேன்மேல்விளைத்துவிளங்குந்தெய்வ
சானித்தியபுரமான்மியத்துஞ்சிலசாற்றுதுமே. (௨0)

சாலீசுகன்முத்திபெற்றபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩0 இ திருவிருத்தம்-௯௱௫௬.

## தேவசானித்தியபுரமான்மியப்படலம்.

ஓவமோர்புறத்தானையுள்ளூன்றுபு, பாவமாமலபந்தம்பறிப்பவர்
தேவசானித்தியபுரமான்மிய, மேவவோதெனச்சூதன்விளம்புவான். (௧)

பொங்குமேன்மைப்புகழ்சாறசாதன், பங்குவென்பவன்பால்வரங்
கொள்ளுமு, னெங்குமாயிருமூன்றிரண்டாண்டுறத், தங்குவற்கடஞ்சார்
ந்ததையென்பவே. (௨)

சுந்தரத்தனியாழியிற்றோயமுண், டந்தரத்தினியக்கமரசன்கட்
சிந்தரத்தஞ்சினப்பதுதிர்தலாற், கந்தரத்தின்குழாங்கள்கரந்தன. (௩)

* கறுப்புமேகத்திற்காண்டலிலாமையா, லொறுப்புவற்கடமப்பெய
ருற்றது, வறுப்புநுண்மணல்வாரியிறைத்தென, வெறுப்புவெப்பமொள்
வெங்கதிர்வீசிற்றே. (௪)

அடுத்தகார்சறாு மாதலிலாமையா, லெடுத்தவெப்பத் தியங்குமுன்
வேனினீ, ருடுத்தஞாலமுடற்றியதொண்டலை, தொடுத்தமாலையன்சோ
முனிநதாலென. (௫)

அருவிவார்தலுமற்றனையாடவா, மருவிவண்டமைழயீதலுமாய்ந்தன
விருவியானுமிதையுளிலாமையாற், குருவியும்புகலறறகுறிஞ்சியே. (௬)

விரவுசாமைபயறுமிடையுங்கோத், திரவமாதியுநதிர்ந்தனவண்டர்மண்
பரவுமாப்பின்பயிறலும்பாறின, கரவிறீக்கலந்தாலெனமுல்லையே. (௭)

உழுதுசேறுசெய்தொண்முளைவித்துபு, பழுதுதீர்புனல்பாய்த்தலுமற்றன
தொழுதுசார்களமுஞசுமைதீர்ந்தன, வெழுதுசீர்த்தியியைந்தமருதமே.

கொள்ளுவாரின்மையாற்கொழுமீன்முத, லள்ளுவார்வலைவீசுதலற்றன
தெள்ளுமுத்தம்பவளமுந்தீர்ந்தன, விள்ளுகேதகைமேவியநெய்தலே. (௧)

* கறுப்பு - வற்கடகாலத்திற் கோர்பரியாய நாமம்.

வேறுபாடுவிளக்கியகாரினம், பாறுமாறுபடுதலுஞ்செய்தனக்
தேறுநாமெங்குமாய்ச்சிறந்தோமெனு, வூறுமோகையுண்டாயதுபாலையே.

விண்ணிற்காண்பதல்லான்மிளிர்சாலியை, மண்ணிற்காண்பதின்மா தேவன்கண்டத்தின், கண்ணிற்காண்பதல்லாற்கருதாலத்தை, + யெண் ணிற்காண்பதிலையெவ்விடத்துமே. (கக)

வடுப்படாத்தழன்மக்கள்வயிறெலாங், கடுப்பின்மேவிக்கனலுவதல் லதை, விடுப்புறுமகக்குண்டத்துமேயதில், லடுப்பெலாம்பொலிந்தாம்பி கள்பூத்தவே. (கஉ)

தங்குமோடையுந்தாவில்குளங்களும், பொங்கும்வாவியும்பொய்கை யுங்கால்களு, மூங்கும்யாறுமொழிதருமற்றவு, மெங்குநீர்நசையேகொடு வைகின. (கஙு)

மேவியாரும்விதம்புனலின்மையா, லாவிநீங்கியவன்னமிலாமையே
மேவியாரும்விதம்புனலின்மையா, லாவிநீங்கியவன்னமிலாமையே. (கச)

பாதலம்புகப்பண்ணுநடைவைபோற், பூதலம்பொதிர்ப்பப் * பொதுத் தேகியுங், காதலம்புனல்கண்டிலர்காணிறு, மாதலின்றியழியும்வெப்புண் ணவே. (கரு)

ஒருவர்கேடியகப்பட்டதுண்ணுங்கா, லொருவரோடியுடற்றிப்பறிப்ப ரா,லொருவரொச்சிலென்றேறுதிறுமுட்கொளா,ரொருவர்பார்க்கவுணலொ ழிந்தாரெலாம், (கசு)

ஊடலற்றனவொள்ளிழைமாதர்தோட், கூடலற்றனமன்றங்குழீஇயிசை பாடலற்றனவாடலும்பாறின, தேடலற்றதிலன்னங்தெருவெலாம். (கஎ)

கரவிற்பறபலகாளையர்தோள்புணர், குரவிற்பொங்குங்குழன்மடவா ரெலாம், பரவிற்பாய்கற்புப்பாவையர்போன்றன, ருரவிற்றேருமுணவரு ந்தாமையால். (கஅ)

அடருமோகமலைப்பமுறைதபும்.விடருநோன்பின்விரத்தர்கள்போன்றனர் படருமூணில்பலவுமிளைத்தன, தொடருங்காலவெந்துதரிளைக்கவே, (கக)

உழன்மறந்தனர்மள்ளருடன்றுபோர்க், கெழன்மறந்தனர்வீரரின்மா தர்தோள், விழன்மறந்தனர்மோகர்மெய்த்தேவையுந், தொழன்மறந்தன ரென்னினிச்சொல்வதே. (உ0)

வரம்புதப்பிவளஞ்செய்வயலெலாங், கரம்புதானெனவொன்றியகாட்சி யா, னிரம்புமீதுங்கினதெனதிதெனும், பரம்புகின்றவழக்கும்பறந்ததால். ()

மழைநன்னீர்பெய்துவாரங்கரேதலாற், கழைசுளிக்குங்களிற்றின்ம தம்படு, புழையுக்தூர்ந்தனபோற்றிமகவுனு, மிழைமிளுர்முலையில்லியுந்து ர்ந்தவே. (உஉ)

---

+ ஆலம் - நீர் - விடம். * பொதுத்தல் - துளைத்தல்.

ஓங்கல்போலவுலாவுங்களிறெலாந், அங்கலென்பதற்கேற்பத்துறுதளை
நீங்கல்பூண்டுநிரம்பவும்வற்றின, வேங்கலின்றியியலுவதென்னையே. ()

நினைசயிந்தவநீக்கலப்புண்மையாற், றனைதரக்களையுந்தொடர்போ
ரின்றே, லினைசயிந்தவநீக்கலப்பின்மையால், வினையொடுந்தசைமெய்யு
ங்களைந்தன, (உ௪)

சூடுமோசைதொலைந்ததுமாதர்தோள், கூடுமோசைகுலைந்ததுவேறென்றை
நாடுமோசைநசித்ததுணவினைத், தேடுமோசைசிறந்ததியாவர்க்கும். (உ௫)

எண்ணத்தக்கவுமல்லனவெண்ணினூர், பண்ணத்தக்கனவல்லவும்ப
ண்ணினூர், நண்ணத்தக்கனவல்லவுநண்ணினூ, ருண்ணத்தக்கனவல்லவு
முண்டனர். (உ௬)

மறையினோதைமழுங்கினவாகமத், துறையினோதைசுருங்கினமற்றை
றான், முறையினோதைகழிந்தகொண்மூப்பொழி, யுறையினோதையொ
ழிதலும்பாரினே. (உ௭)

வறுமையென்பதுவந்துபரத்தலாற், றெறுமையாப்பிற்சிதைந்துயி
ர்யாவுமுட், பொறுமையென்பதுபோக்கிமறைபுகன், மறுமையென்பது
மன்றமறந்தன. (உ௮)

வலியவாகிவருவிலங்குள்ளன, மெலியவாம்விலங்கைக்கவர்ந்துண்பன
வலியவாகியவங்கும்பறவைகண், மெலியவாம்புள்விருந்துகவர்வன. ()

இலைமுதற்பொருள்யாவுமிறுதலா, லுலையுமாந்தருடம்பினையோம்பிடத்[ர்.
தொலை ‡ விலங்கழந்தொக்கபல் † புள்ளழ, நிலையமர்ந்துணுநீர்மைமருவினு

நாமவற்கடமின்னணநண்ணுழி, யேமவானமிழிந்துவசுத்தனைச், [வான்.
சோமவாசை ｏ அடைந்ததுசோர்விலாக், காமதேனுவெனுங்கொடைகற்ற

தரையடைந்துசரித்திடுகாலையில், வரைவிலாப்பசிமண்டியெழுதலாற்
கரைபுல்லாதிகணேடியுங்காண்கிலா, துரைசெய்யாவியுலையக்கவன்றதால்.

மண்டுவெம்பசிமாற்றவோர்நாய்ப்பிணங், கண்டுதேய்த்ததுகாய்பசியுற்றிடி
லுண்டுதேக்குமுறுவலிச்சீயமுந், தண்டுதேரைத்தசையுமற்றென்செயும்.

பின்னரீங்குச்சரித்தல்பிழையெனு, நன்னர்வான்கயிலாயத்தைநண்ணிய
தன்னதிமையறிந்துசினந்தனன், பன்னகாபரணத்தெம்பசுபதி. (௩௪)

விமலமோர்ந்திலைவெம்பசியெண்ணியே, ஞமலியூண்புசித்திங்குநணு
கினூ, யமலும்வெம்புலியாகெனவைதனன், கமலன்மாலினுங்காணருங்
காட்சியான். (௩௫)

‡ விலங்கழம் - மிருகப்பிணம். † புள்ளழம் - பறவைப்பிணம்,
ｏ சோமவாசை - வடதிசை.

சொற்றவார்த்தைதனுக்கெனக்கேட்டுமிக், குற்றவச்சத்தொடுபணி
ந்தியான்செய்த. குற்றமோர்ந்திதுகூறிளையாயினு, மற்றமோவவருளென்
பிரந்ததே. (௩௬)

இரந்துவேண்டுமிருங்குடஞ்சுட்டிற்குப்,பரந்தநீர்முடிவேணிப்பரம்பரன்
வரந்தவாதுவழங்குமழையனுன், சுரந்தபேரருளாலிதுசொல்லுவான். ()

வாகைமாதவர்மன்னுஞ்சிறப்பின, நீகைாடுமிறைஞ்சப்பொலிவது
தோகைபாலொருநாகநிகழ்வயது, நாகையென்னுநன்னுமதொருதலம்.

மணமலர்த்திரடேய்வந்துவானவ, கணமுறப்படிகாவிரித்தென்றிசைக்
குணகடற்கரையுள்ளதுகோதற, வணவிநந்தமருட்குறிபோறறுபு. (௩௯)

குடதிசைக்கணோர்காவதங்கூடியி, விடமணைந்திடிலின்பம்பயப்பது
மடவர்சேராவதரிவனமொன்று, புடவியின்பயனுசப்பொருந்துமே. (௪0)

சீலமாரவ்வனத்திற்குத்தென்றிசை, யாலமார்பதியாகியநாம்பசுக் [ரோ.
கோலமாகிக்குழக்கன்றையூட்டிய, ஞாலமேத்துமோர்தானநன்றுண்ட

அந்தத்தானமணைந்துபணிந்துபின், வந்தற்பூறவதரிவனந்தொழு
தெந்தத்தீங்குமிரிக்குமதன்கிழக், குந்தச்சார்மதியொள்ளியந்தேனுவே. ()

ஒருகுரோசத்தினுள்ளதுநீங்கெலாங், கருகுமாறுகயாதீர்த்தம்போல்வது
பெருகுமற்றதின்மூழ்கிற்பிரிதரு, மருகுருநாமறைந்தவெஞ்சாபமே. (௪௩)

தீதிலாதவத்தீர்த்தத்தின்கீழ்கரைக், கோதிலாத ‡ குடசமொன்றுள்ளதா
லோதிலாதவமோவுமதனடிப், பேதிலாதமர்வாயென்றனன்பிரான். ()

ஆண்டநாதனருடலைமேற்கொடு, மாண்டதேனுவணங்கிவிடைகொடு.
நீண்டநாகைநெடும்பதியுற்றது, பூண்டதேவப்புனல்படிந்தாடிற்றே. ()

உள்ளுவாருளத்தோங்கொளியாயமர், கள்ளுலாங்கொன்றைக்காரோ
ணத்தாதியைத், தெள்ளுநீர்ச்சடைச்செம்மலைப்போற்றுபு, விள்ளுறுதவி
டங்கலையுந்தொழா. (௪௬)

அருந்தவத்தாருந்தமுதாகிய, கருந்தடங்கட்பிராட்டிகழற்றொழு [தேனுவே.
திருந்தயம்பிதன்மேலெவனென்றெணுப், பொருந்தமேற்றிசைபோயது

வையமேத்தும்வதரிவனங்கண்டே, யையதென்றிசைத்தானமவாய்ச்செ
ன்று. தெய்யவோர்பசுவாகியசெம்மலை, கையவுள்ளநயந்துபணிந்ததால்.

பின்னிலந்தைவனம்பெட்பொடுபுகுந், துன்னியுள்ளத்துறப்பணிந்த
ங்கொரீஇ, மன்னுகீழ்த்திசைவந்தோர்குரோசத்தின்.மின்னுதீர்த்தம்விருப்
பெழக்கண்டதால், (௪௯)

---

‡ குடசம் - வெட்பாலை.

கண்டபோதுகசிந்தநின்மூழ்கிற்று, மண்டேசாபத்தொடக்கறமாய்ந்தது
கொண்டகாதலிற்கீழ்பாற்குறுகுபு, தண்டவாக்குடசத்தடிமேவிற்றே. ()

குடசமூலத்துமேவியகோமடிக், குடநின்றும்பொழிபால்குளத்தோடியக்
குடதிருத்தக்குளத்தைநிலைறத்தலாற், குடசநீர்பாற்குளமெனப்பட்டதே.

குடசமாலக்குளங்கையைநீரொன, மடனறத்தெளிவார்வண்பிதிரர்தங்
கடன்முடிப்பிற்கயைபிறுநூறுபங், கிடனுறத்தழைப்பெய்தம்பலனரோ.

தண்டவாவளக்காசித்தலமுயிர், விண்டபோதுவிரும்பித்தருவது [னே.
கண்டபோதுதருமெனிற்காதல்கூர், மண்டவாதவத்தானத்துமாண்பெ

பாற்குளத்தொருநாட்படிந்தார்பய, னேற்குங்கங்கையினுண்டிளிதாடினு
ர், காற்குன்றுதகதிக்கும்பயனினு, மேற்படர்ந்துவிளங்கிடுமென்றுமே.()

பாவநாளும்பறித்தெறியத்தல, மேவவாஞேர்விளங்கிமிடைதலாற்
றேவசாளித்தியமெனச்செப்புவா, ரோவவையமுணர்ந்தபுலமையோர்.()

மடனில்வான்பசுவைகளுந்தெய்வதத், தடநன்னுகையிற்சார்ந்துகா
ரோணத்துப், படவராவணிப்பண்ணவற்போற்றிப்பின், குடசமூலங்குறுகு
புவைகுமே. (௫௬)

ஆயகாலைவசிட்டனருட்பிரான், மேயவண்கயிலாயத்தைமேவுபு
தூயபாதந்தொழவந்ததென்னென்று, நாயன்கேட்கநவிலுவதாயினன். ()

பூசைசெய்யவும்வேள்விபுரியவுந், தேசையார்தருதேனுவருளென
டிாசைநீத்துவன்னுகைக்குமேல்புற, மோசையார்குடசத்தடியுற்றதால்.

தேங்குவண்பயத்தேனுநிலாவுறு, மாங்குமேவியருந்தவநீசெயிற், பாங்கு
மேவுறப்பாலிப்பம்யாமெனு, வீங்குபேரருளான்கொடுத்தான்விடை. ()

பணிந்துநாகைப்பதியைமரீஇயன்பர், துணிந்துபோற்றுஞ்சுடளாத்
தொழுதவா, னணிந்துகாட்டியதன்னகுடதிசைச், தணிந்துவாழ்மனத்
தாபதனேகினன். (௬0)

காடுபாற்குளமூழ்கிநறுந்தளிர், கூடுநதெய்வக்குடசத்தின்கீழ்புறம்
பாடுவேதியொன்ருக்கிப்பசுப்பொழி, நீடுபானவநீதந்திரட்டியே. (௬௧)

திறுவிப்பூசைநிகழ்த்திடுங்காலையின், மறுவிலான்வெளிவந்துன்கரு
த்தெவன், பெறுவையோதுகவென்றலும்பேஷைமை, தெறுதவத்தன்பணி
ந்திதுசெப்புவான். (௬௨)

இந்தவெண்ணெயிலிங்கத்தினீயென்று, நந்தவேண்டுகின்றவர்பாவ
முஞ், சிந்தவேண்டுமொண்டேனுவும்வேண்டுமென், றுந்தவேண்டவுந்தவி
மறைந்தனன். (௬௩)

நாகைநாதனைநன்னவநீதஞ்சா, ரோகைமூர்த்தியைப்பூசித்துவந்தங்கு
வாகைசாலும்வசிட்டன்வசித்தன, னீகைசாலவ்விடமவன்பேரெய்தும்.()

தேவசானித்தியபுரமான்மியம், பாவநாசமதாகப்பகர்ந்தன [வாம்,
மோவறேருமைபாகனைக்கோசிகன், மேவப்போற்றியவண்ணமும்விள்ளு

தேவசானித்தியபுரமான்மியப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௧ இ திருவிருத்தம் - ௧௮௨௧.

## கோசிகன்பூசித்தபடலம்.

பழியில்கோசிக, னழிவின்மாதவ
மொழிவின்றேதென, மொழியுஞ்சூதனே. (௧)

நன்றுகோசிகன், முன்றிரோதத்திற்
றெண்டிசைக்கணே, யொன்றவுற்றனன். (௨)

ஆழியின்கரை, வாழிமாதவர்
தாழ்வின்முற்றினன், கேழ்வறப்பவே. (௩)

அதுதெரிந்தனன். கதுமெனக்கவன்
றிதுபுரிந்தனன், முதுவெள்யானையான். (௪)

ஒருதிலோத்தமை, பொருவில்வாண்முக
மருவிநோக்கியச், சிருவியோதுவான். (௫)

தென்கடற்கரைத், துன்பில்கோசிகன்
வன்பின்மாதவ, நன்கியற்றுவான். (௬)

பொங்குமாதவ, நங்குறச்சிதைத்
திங்குவாவென்றான், மங்குலூர்தியான். (௭)

கேட்டமாதரார், வாட்டந்தீர்மயல்
சூட்டநேர்சென்று, நாட்டம்வீசினள். (௮)

கண்டுகோசிகன், மண்டுமாதவம்
விண்டுபாலைபாற், றெண்டுபூண்டனன், (௯)

அன்னமேயெனுஞ், சொன்னமேயெனு
முன்னமேய்தவர், தன்னமேயெனும். (௧0)

அரும்புகொன்முலை, சுரும்புகொல்விழி
கரும்புகொன்மொழி, யிரும்புகொண்மனம். (௧௧)

என்றுகூறிடுங், கன்றுகாமவே
ளென்றுபோரற, வின்றுதீரொனும். (௧௨)

இந்தவண்ணஞ்சொற், றந்தமாதரார்
சந்தவெம்முலை, முந்தப்புல்லினான். (௧௩)

தழியுவந்தபின், பழியடைந்தனன்
மொழியம்மாதவின், னுழியடைந்தனள். (௧௪)

நல்லநோன்பிடைச், செல்லலுற்றமை
கல்லவெண்ணினான், வல்லகோசிகன். (௧௫)

விருப்பமேயசீ, பருப்பதம்புகுந்
தருப்புமாதவத், திருப்பவெண்ணுழி. (௧௬)

காமநாசஞ்செய், தாமங்கேயமர்
வாமதேவற்கண், டேமமாமுனி. (௧௭)

நடந்ததோதலு, மிடந்தமாமலத்
தடந்தழூஉமவன், கடந்தபேசுவான். (௧௮)

நாகைநண்ணிநீ, தோகைபாகனை
யோகையாற்றொழின், வாகைமேவுவாய். (௧௯)

இன்னுமேற்றிசை, மன்னுகாவக
முன்னுநீசெலி, னுன்னுமாவயின். (௨௦)

போதமார்நவ, நீதமேவுரு
நாதற்காணலா, மோதக்கேண்மதி. (௨௧)

ஆங்குநீதொழி, னீங்குருதெத்
தீங்குபோவென்று, னோங்குமாதவன். (௨௨)

அரியகோசிக, னுரியநாகையிற்
றெரியமேயினான், பிரியம்வாய்ப்பவே. (௨௩)

பாவநாசஞ்செய். தேவதீர்த்தத்து
மேவமூழ்கிமுக், கோவற்போற்றுபு. (௨௪)

கருந்தடங்கணு, ளிருந்தவாலயம்
பொருந்தப்புக்குத்தாழ்ந், தருந்தவத்தினான். (௨௫)

பச்சிமத்திசை, நச்சியெய்தியாங்
கச்சிவக்குறி, மெச்சிக்கண்டனன். (௨௬)

ஆயபாற்குளம், பாயநீர்தனைத்
தேயப்போற்றினு, னேயவக்குறி, (௨௭)

குடசமூலத்தான், றடவிலாமருண்
மடனறப்பெற்றே, படர்தவத்தினன். (உ௯)

சுத்தவக்குறிக், குத்தரத்தனு
சித்தடஞ்செயச், சித்தம்வைத்தனன். (உக)

பரசுதீர்த்தமு, மரசுமாக்கியா
தரவின்வைகினன், புரவின்மேன்மையான். (௩0)

அவமிலாவருந், தவமிவ்வாறுசெய்
துவமனில்லவன், கவலைதீர்ந்தனன். (௩க)

வேறு.

தூயகோசிகன்றவ, நேயம்யாவிகழ்த்தினம்
பாயகார்த்தியாயனன், மேயபூசைவின்னுவாம். (௩உ)

கோசிகன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩உ இ திருவிருத்தம் - க௯௫௩.

## கார்த்தியாயனர்பூசித்தபடலம்.

பொய்யின்மாதவரொலா, மையகார்த்தியாயனன்
செய்தபூசைசெப்பென, மெய்கொள்சூதனோதுவான். (க)

ஆன்றகார்த்தியாயனன், மூன்றவெத்தலந்தொழிற்
சான்றசித்திசாருமென், றூன்றவுள்ளுணர்ந்தனன். (உ)

தெளிதராதகத்தியன், களியிருக்கைமேவியாங்
கொளியினீதுணர்த்தலுந், தெளியவோதுமம்முனி. (௩)

நாகையென்னுநற்றலத், தோகைபாகனைத்தொழில்
வாகையொண்பொருளெலா, மீகைசெய்வரன்னவர் (ச)

என்றுகூறியானுமங், கொன்றுமாறவாவினே
னன்றுமேடமாயினுற், றின்றுநின்றதிதற. (௫)

எனவுரைத்தெழுந்தன, னனகமாரவனொடுந்
தனையைக்கார்த்தியாயனன், புனையுநாகைபுக்கனன். (௬)

தூயதேவதீர்த்தநன், காயவன்பின்மூழ்குபு
பாயமெய்ப்பரஞ்சுடர், நாயனார்முனண்ணினன். (எ)

உருகுநெஞ்சிற்போற்றுபு, திருகுதீர்விடங்கர்த
மருகுசென்றிறைஞ்சினன், பெருகுவாய்மைமாதவன். (௮)

எம்மையாளிளங்கிளி, மும்மைஞாலமுழுதரு
ளம்மைதாளும்போற்றினன், செம்மைவாய்ந்தசிந்தையான். (௯)

இந்தவண்ணமெண்ணினு, ளந்தநற்றலத்தமர்ந்
தந்தவெவ்வரங்களு, முந்தப்பெற்றுவாழ்ந்தனன். (க0)

உலகமீன்றவம்மையே, திலகவொண்புதல்வியா
நலம்விராயினுளெனிற், சொலவும்வேண்டுமின்னமும். (கக)

ஆங்குநின்றுமேற்றிசை, யோங்கும்வெண்ணெயுருவினுற்
பாங்குமேவப்பார்த்தனன், தேங்குமின்பந்தெவ்விளுன். (கஉ)

தென்றமிழ்முனிவனு, மொன்றமுன்னுரைத்தவா
றன்றநீருநாகையிற், பொன்றிலானைப்போற்றுபு. (கஙு)

மேற்றிசைக்கண்மேவியே, யாற்றுவேணியண்ணலைச்
சாற்றும்வெண்ணெயுருவிடைப், போறறியோப்பினுன்புகர். (கச)

நம்புமிக்குறித்தென்பா, லம்புவீழுமெல்லையில்
வெம்புதிருந்தீர்த்தமும், பம்புகோசமுஞ்செய்து. (கரு)

மருவுமன்பிற்பூசனை, யொருவுறுதியற்றியே
வெருவொழிந்துவாழ்ந்தனன், பொருவிலாத்தமிழ்முனி. (கசு)

மற்றைமாமுனிவனும், பொற்றகீழ்த்திசைத்தலை
வெற்றவம்புவீழிடை, யுற்றொர்தீர்த்தமாக்கியே. (கஎ)

நேசமார்தருஞ்சிவ, கோசமொன்றுநாட்டுபு
வாசமாமலர்புனைந், தேசதேகவாழ்ந்தனன். (கஅ)

ஆயகார்த்தியாயனன், மேயமேன்மைவிண்டனம்
பாயபார்ப்பதீச்சர, நேயமான்மியஞ்சொல்வாம். (கக)

கார்த்தியாயனர்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ஙரு இ திருவிருத்தம்-கஅஎஉ.

## பார்ப்பதீச்சரமான்மியப்படலம்.

திருந்தகுனைந்மிசைத்துச்செறியலமுனிவர்களு
மருத்துபுகழ்ச்சூதமுனிமலரடிவணங்கி
யுருத்தகுபார்ப்பதியீச்சரத்தியலுரைத்தியெனத்
தருத்தகுகொடையுடையத்தாபதனுரைசெய்வான். (க)

கயிலையங்கிரிமேயகண்ணுதல்விடையேறி
மயிலியற்பார்ப்பதியோடுலகுளவளங்காண்பான்
பயிலுதலுறுநாளிற்பல்வளங்களுநோக்கி
யெயிலுயர்திருநாகையிடத்துவந்தனனன்றே. (உ)

ஆவயினுளபலவுமதிசயமுறநோக்கி
மேவரமேற்றிசையின்விடையுகைத்தனன்வருங்காற்
ரூவருநவநீதத்தாணுவின்றென்கீழ்பா
லோவருமொருதானமுத்தமமெனத்தேர்ந்து. (ங)

பல்லுயிர்களுமீன்றபார்ப்பதியாங்கிழிந்து
சொல்லுயர்சிவலிங்கஞ்சுடர்மிகவொன்றுநிறீஇ
யொல்லையினொருதீர்த்தமுண்டுபண்ணினன்முழுகி
நல்லபன்மலர்கொண்டுநண்புறப்பூசித்து. (௪)

அரவணிபெருமான்பாலணுகுபுதொழுமுயிர்கள்
பரவவமரணமொழீஇப்பண்புயர்வரங்கொண்டு
கரவகல்பரமனொடுங்கலந்திடவிடையுகைத்துப்
புரவுடையவன்கயிலைபுக்கனன்சுரர்வாழ்த்த. (௫)

பரைநிறுவியதிறத்தாற்பார்ப்பதியீச்சரமென்
றுரைசெயுமொருபெயர்பெற்றோங்கியதத்தானம்
புரைதபவாங்கடைந்தப்புண்ணியப்புனன்மூழ்கி
விரைமலர்தூய்த்தொழுவார்வீட்டுவர்பிணியனைத்தும். (௬)

குறியிடைக்கொடுநோயன்கொள்ளருந்தீநாற்றஞ்
செறிபெருமுடைநோயன்றிருந்துபற்கடுநோயன்
வெறிமுயலகநோயன்வீசுகைகுறைநோய
னெறியருமிவரைவர்நேர்ந்தனர்வசிட்டனையே. (௭)

முனிவரனடிதாழ்ந்துமொய்த்தவெம்பிணிதீரத்
தனியருள்புரிகென்றுதாழ்ந்திரந்தனர்வேண்டப்
பனிமதிமுடிக்கணிந்தபரமனையுளத்தெண்ணிப்
புனிதமின்முற்பவத்திற்புரிந்தமையுளத்துணர்ந்து. (௮)

குருமனைமணத்தலினாற்குறளைசொற்றிடுதலினாற்
றிருமறையவர்க்கொலையாற்றீயகளுண்டிடலான்
மருவுபொன்கள்ளுதலால்வருமுறைநீளாவிர்
பெருநரகனுபவித்துப்பிறந்துமிப்பிணியுற்றீர். (௯)

பார்முழுவதும்புரக்கும்பார்ப்பதியினிதமைத்த
சீர்முழுவதும்பொலியுந்தீர்த்தத்தினினிதாடிப்
பேர்முழுவதுங்கொண்டுபிறங்கிலிங்கமுந்தொழுதா
லேர்முழுவதுஞ்சிறப்பவிக்கொடும்பிணியகலும், (௧௦)

பின்னர்வண்டிருநாகைப்பெருந்தலத்திடைப்புகுந்து
நன்னர்மெய்ப்புகழ்த்தேவதீர்த்தத்தினயந்தாடித்
தன்னிகர்காரோணச்சயம்புவைக்கண்டுதொழின்
மின்னிகருடல்வாழ்க்கைவெறுத்திடுமருள்வாய்ந்து. (௧௧)

மிடைபெருவானோருமேவுதற்கரிதாகித்
தடைபடுகயிலாயஞ்சார்ந்தினிதின்புறுவீர்
கடையுறுதொழில்செய்தீர்போதுமினெனக்கரைய
வுடைமனத்தவர்பணிந்தாரொய்யெனவிடைகொண்டார். (௧௨)

மறையுணர்வசிட்டமுனிவாய்மொழிகடைப்பிடித்துக்
குறையுறவருத்துபிணிக்கோட்படுமைவர்களுங்
கறைதபவீரிடத்துங்கலந்துரைத்தவையாற்றி
நிறையருளுடையோராய்நெடுங்கயிலையையடைந்தார். (௧௫)

பார்புகழ்சிறப்போவாப்பார்ப்பதியீச்சரத்தின்
சீர்புகழ்ந்தனமினிமேற்றிறல்கெழுமுசுகுந்தன்
கூர்மதியொருமறையோற்கொன்றவெம்பழிகழுவ
நேர்மதியொடும்புகுந்தநீர்மையுமெடுத்துரைப்பாம். (௧௬)

பார்ப்பதீச்சரமான்மியப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௪ இ திருவிருத்தம்-௧௮௮௬.

## முசுகுந்தன்பிரமகத்திதீர்த்தபடலம்.

விரிநிழலைமிசைமேயமாதவ, ரரிபுனாயளிமுசுகுந்தனண்ணுபு,பரிமறையவக்கொலைபழிதொலைத்தது, தெரிதரவுரையெனச்சூதன்செப்புவான். (௧)

பரிதியின்குலத்தினுற்பவித்தபார்த்திவன்,விரிகதிர்ப்பன்மணிவிளங்குமோலியான், வரிகழற்காலினன்மங்கைபாகரன்,புரிமுசுகுந்தனென்றுரைக்கும்பேரினன். (௨)

செறிமரக்கானிடைச் சேனைசூழ்தரக், குறிதிறற்பரிமிசைக்கொண்டுசென்றுவெம், பொறியெனத்திரிதருபுகர்விலங்கெலாம், வெறிதபுத்தொழிதிறம்வேட்டமாடினன். (௩)

வினைமுடித்திடுதலும்வெங்கதிர்ப்பிரான்,கனைதிரைக்கடலகங்கரந்துபோயினன், றனைதரத்திருநகர்தன்னைத்தூண்டினன், முனைமுகத்திரிதராமுரட்கடும்பரி. (௪)

வருவழிமயங்கியமறைக்குலத்தவ, னொருவனேர்கிடந்தனனரசுணர்ந்திலான், கருகிருளாதலிற்கடிதுபோம்பரி, வெருவமற்றவனுரமிதித்துப்போயதே. (௫)

பொருபுரவலனகர்ப்புகுதுமுன்னமே,திருமறையவனமனுலகஞ்சேர்ந்தன, னொருவரும்வளநகருற்றுமன்னவன், கருகிருளியற்றுதன்கடன்முடித்தனன், (௬)

அடிசில்கைதொட்டனனமளிமேவினன், வெடிமுழக்கினரழல்வீசுகண்ணினர், -தடிமுதற்பல்படைதாங்குகையராய்ப், படிபிரமக்கொலைப்பழியடுத்ததே. (௭)

அதிர்த்திடுஞ்சினந்திடுமங்கையேந்துவாள், விதிர்த்திடும்பொருதொழில்விளைக்கவம்மென, வெதிர்த்திடுஞ்சுழன்றிடுமெறியுமெற்றிடும், கதிர்த்திடுமெயிறுகள்கறித்தமேல்விழும். (௮)

இன்னணங்கொலைப்பழியிகன்றுடற்றுழி, மன்னவர்மன்னவன்மறுக்கமெய்தினான், றன்னமுமிதுவெனருன்றெரிந்திடான், பொன்னவிரமைச்சரைப்புரிந்துகூவியே. (௯)

உள்ளதையுரைத்திடவுள்ளத்தோர்ந்தனர், கொள்ளரும்பார்ப்பனைக் கொலைவந்துற்றதென், றெள்ளரும்புரவலற்கெடுத்துச்சொற்றனர், விள்ளரும்பரிக்குப்பின்மேவினார்சிலர். (௧௦)

வந்தனர்வணங்கினர்வாசிகான்மிதித், தந்தணனிறந்தனனதரினென்றனர், சுந்தரநிலப்பொறைசுமக்குந்தோளினான், சிந்தவல்வினைக்கினியென்செய்கோவென்றான், (௧௧)

அஞ்சலையஞ்சலையரசரேறெனா, யெஞ்சலிருனங்களெண்ணிலாதன, துஞ்சலிநீர்த்தங்கடலங்கடொக்கன, பஞ்செலப்பறக்குமிப்பாவமென்றனர். ()

மந்திரருரைத்தசொன்மனங்குறிக்கொடு, செந்திரவியம்வடதிசைபுரப்பவன், வந்திரபவர்முனம்வறியனும்படி, யிந்திரதிருவினானீந்துபார்த்தனன். (௧௩)

குலம்படுபசுப்பலகொடுத்துப்பார்த்தன, னலம்படுவிளைநிலநல்கிப்ப்பார்த்தன, னலம்படுதீர்த்தங்களாடிப்பார்த்தனன், புலம்படுதலம்பலபோற்றிப்பார்த்தனன. (௧௪)

ஒன்றினுநீர்ந்திலதுறுகொலைப்பழி, கன்றியமனத்தனாய்க்கலங்கிமன்னவன், றன்றிருக்குலகுருவாயசால்புடை, வென்றியின்வசிட்டனைமேவித்தாழ்ந்தனன். (௧௫)

முன்னிகழ்வினைத்தையு மொழியத்தேர்ந்தன, னென்னினிச்செய்வதென்றிரங்கனமன்னவ, தன்னிகர்நாகையந்தலத்தைமேவுமுன், மின்னினுமறையுமிவ்வெங்கொலைப்பழி. (௧௬)

கடுக்கவின்பெறுகளக்கடவுணகைநீ, யடுக்குமுனிப்பழியகலும்போவென, முடிக்கினன்வசிட்டனுமுனைக்குமோகைகை, கொடுக்கியவெழுந்தனன்கொற்றவேந்தர்கோன். (௧௭)

வழியிடைத்தலமெலாம்வணங்கிப்போற்றுபு, பழிதபுவதரிவாழ்தலம்படர்ந்தனன், விழிகளித்திடவளம்விரும்பிநோக்குபு, பொழிமதத்தாரினான்போற்றிமீண்டனன். (௧௮)

நாகையையுறல்குறிக்கொடுநடப்பவன், மாகைலாயசேர்குடசவான்பதி, யாகைகொணேருநத்தடைந்தமாத்திரை, யோகையின்றுயழிந்தொழிந்ததப்பழி. (௧௯)

அதுதெரிந்தனன்மிகவகமகிழ்ந்தனன், முதுபுகழ்க்குடசநன்மூலத்து ற்றனன், புதுமதிபொலிசடைப்புனிதற்போற்றினன், கதுமெனப்படர்ந் துகாரோணத்தெய்தினான். (௨௦)

செறிமலர்விண்ணவதீர்த்தந்தோய்ந்துநீங், கெறிதிருநீறுமன்னிமை யப்பூசபு, குறிகுணங்கடந்தொளிர்குழகன்முன்சென்று, னறிதுயிலமர்ப வனன்னவண்ணலே. (௨௧)

தண்களிகூர்தரக்கண்டுதாழ்ந்தனன், பண்களிகூர்தரத்துதியும்பாடினு, னெண்களிகூர்தரவின்பமெய்தினான், மண்களிகூர்தரப்புரக்கும்வள்ளலே. ()

விடங்கர்தந்திருமுனமேவித்தாழ்ந்துளத், தடங்கரும்பெருமகிழ்வமை யவின்சுவைக், குடங்கரும்வெள்ளியகோலப்பூண்முலைத், தடங்கருந்தட ங்கணுள்சரணந்தாழ்ந்தனன். (௨௩)

மற்றுளதலங்களும்வணங்கிவான்றனிக், குற்றுளவளம்பலவோங்க ப்பண்ணுபு, கற்றுளமார்தர்கள்கலப்பவள்ளல்யாற, பெற்றுளவிடை யொடும்பெயர்ந்துபோயினான். (௨௪)

குணமலிபுகழ்முசுகுந்தன்வெம்பழி, யணவியதகன்றமையறியக்கூறினு மணமலரவன்பினும்வந்துபோற்றிய, தணவருமான்மியஞ்சாற்றுவாமரோ

முசுகுந்தன்பிரமகத்திநீர்ந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௫ இ திருவிருத்தம்-௪௯௧௧.

## பிரமன்பூசித்தபடலம்.

கள்ளமோவியதவத்தார்கணிந்துருதனடிவணங்கி
வள்ளநேர்மலர்மேலான்வயங்குகாகைப்பதிபுகுந்து
வெள்ளமார்சடையானைப்பணிந்தசரிதம்விரித்தியெனா
வுள்ளமேவுவப்பொடுமச்சூதனுரைப்பாருயினுன். (௧)

வானவருஞ்சதகோடிவயங்குமொருகைத்திறல்வேந்து
மோனவருந்தவத்தோருமுளரித்தலைவாழ்நான்முகனு
மீனமிலோரிடைக்குழுமியிருந்தாரந்தவிடத்தனைநதான்
முனவரஞ்சிடவொறுக்குந்தறுகட்டிகிரிப்படைபெருமான். (௨)

வந்தமாயோற்கெழுந்துவணங்கியாருமுபசரித்தார்
சந்தாரன்முகன்கண்டுஞ்சற்றுமிருக்கைநின்றுமெழான்
கந்தமாமலர்பொருங்கைகுவியான்முகமனுங்கரையான்
விந்தநேர்புயந்தடிப்பமேன்மேலிறுமாப்புற்றிருந்தான். (௩)

இனையான்கொளிறுமாப்பையெண்ணிநெடுமான்முறுவலித்துத்
தனைநோக்குஞ்சிறுமைநகைசித்தந்திரிந்ததன்மையெவன்
புனைமேன்மையெமைக்கண்டும்பொருக்கென்றிருக்கைநின்றுமெழாய்
அனையாவந்தனஞ்செய்யாய்சும்மாவிருந்தாய்சொல்லென்றான். (௪)

என்றான்றன்முகநோக்கியின்னடைமலர்மேலவனகைத்து
நன்றானின்மகன்சொல்லோநானீயேசித்தந்திரிந்தாய்
முன்றான்மற்றுனைவணங்குமுறையுநவமோநாட்டிடுவை
யொன்றாநிற்கண்டெழாதுறையிற்றேடமென்னென்றான். (௫)

உந்திவாயுனைத்தந்தேனொருநீயதனாலென்மைந்தன்
சிந்தியாதமர்தலின்றுசித்தந்திரிந்தாயென்றுரைத்தேன்
புந்தியாயாதுபிழைபுகன்றேனென்றான்றிருநெடுமான்
முந்திநான்முகனங்கைதட்டியீதுமொழிகின்றான். (௬)

என்னாதுநீயுரைத்தாயெண்ணிப்பலகாலுனைப்படைத்தே
னன்னான்மற்றதனாலேயானாய்மைந்தனெனக்கொருநீ
யொன்னாவற்புதமேவவுனையான்பணியும்படிசொற்றாய்
கண்ணாமற்றிஃதெங்குக்கற்றாயென்றான்கமலத்தோன். (௭)

மாயோன்வெஞ்சினங்கொண்டுமறந்துமினியிம்மொழிபுகலே
றாயோவென்றான்பல்காற்சொல்வேன்றெரிந்தென்றான்பிரம
னீயோதலெவ்வலியானிகழ்ந்தென்றொருமாயவன்வினவ
வாயோர்விலான்முதனானெவைக்குமென்றானஞ்சாதே. (௮)

அஞ்சான்சொற்றனசெவியினுழற்சலாகைகடுத்தேற
மஞ்சாருந்திருமேனிமாயோனுள்ளமிகப்புழுங்கி
யெஞ்சாதமுதல்யானேயில்லையேதுமுதலென்று
னஞ்சாருங்களத்தண்ணலுண்மைமனத்துநயவாதே. (௯)

விண்டுநீயுரைத்தமொழிவெறும்பொய்யானேமுதலென்றற்
றுண்டுகொண்பல்லுலகுமொருங்குசான்றுசொலுமென்றான்
கண்டுநேர்மொழிக்கலைமான்கலந்தநாவிற்கடவுளரி
மண்டுகோபத்தழலான்மதியில்கொடியோனீயென்றான். (௧௦)

வேறு.

கொடியனென்றுந்திபூத்தகொண்டல்சொற்றிடுதலோடுங்
கடியபூவோனெழுந்துகரியவன்கபோலமேலாற்
படியவோர்கரத்தறைந்தான்பைந்துழாய்ப்படலையானு
முடியமற்றவன்கபோலமுறிதரப்புடைத்தான்கையால். (௧௧)

மறையவன்றண்டங்கொண்டுசுழற்றினன்மணிபோல்வண்ணத்
திறைவனுந்தண்டங்கொண்டானெதிர்ந்திருவருங்கலாய்த்தார்
முறையலவென்றுவானோர்மொழிதலுங்கொள்ளார்விள்ளா
தறைமறையிடையேதோன்றியறைந்ததுபலருங்கேட்ப. (௧௨)

இருவருங்கலாய்த்தல்வேண்டாவெமக்குமெந்தலைக்குமெட்டா
வொருவருஞ்சுயம்புமூர்த்தியோங்கொளியாயபெம்மான்
மருவருஞ்சிவனேமுன்னோன்மற்றுநீரல்லீரென்ன
வெருவருந்திறத்தாரந்தமொழியையும்விருப்பிற்கொள்ளார். (௧௩)

ஒருவனையொருவர்சிற்றத்துடனுபுமொத்தாகிற்ப
ரருவரைகுலையவார்ப்பாராசைகளெட்டும்போவர்
பருவரையனையதிண்டோள்கொட்டுவர்பார்முன்யாவு
மருவரைகொடியிற்றூளாம்படியமர்வலிந்துசெய்வார். (க௪)
இவர்நிலையின்னதாகவிந்திரன்முதல்வானோருந்
தவர்புகழ்கயிலைநண்ணித்தம்பிரான்சரணந்தாழ்ந்து
கவர்மனப்பிரமன்மாயோன்கலாய்த்தலையெடுத்துக்கூறப்
பவர்படுசரணத்தெம்மான்பவளவாய்முறுவறேற்றி. (க௫)
அனையவர்செருக்குமாற்றியருடுமென்றவரைப்போக்கி
நினையமற்றெவர்க்குமுற்றாநீள்பெருங்கருணையாலே
கனையதெண்டிரைசூழ்மண்மேற்கலாய்த்திடுமிருவர்காணத்
துனையவிண்கடந்ததெய்வச்சோதியாயெழுந்துநின்றான். (க௬)
சோதியையிருவருங்கண்டெண்ணிதன்றேற்றமென்று
நீதியையுணராராகிநெட்டுயிர்ப்பெறிந்துநின்று
ராதியையுணர்தவத்தோரடைந்திருவோருளுங்கீழ்
மீதியையந்தமாதிகண்டவர்மேலோரென்றார். (க௭)
அருந்தவரிந்தவார்த்தையறைதலுமயனுமாலுந்
திருந்தமற்றியாமேகண்டுசிவணலாமேன்மையென்று
பொருந்தமிக்குவகைநெஞ்சிற்றணித்தணிநினைவுபூண்டு
வருந்தமுற்புரிபோர்தீர்ந்துமற்றிதுசெய்தாரன்றே. (க௮)
அடிதெரிந்திடுவலென்றேயரிமுரணேனமாகிப்
படிமுழுதிடந்துசென்றும்பாதலங்கடந்துமப்பா
லொடிவறமுயன்றுசெல்லுமுரணிலான்சிறிதுநேரான்
மடிவின்முன்புக்கவாறேவந்துமட்சோர்ந்துவீழ்ந்தான். (க௯)
* கழுகுருவெடுத்துவேதன்ககனமுற்றுருவிச்சென்றும்
வழுவறவப்பாற்செல்லும்வலியிழந்திளைப்புமேவப்
பழுதின்முன்சென்றவாறேபறந்துவந்திதன்றன்சென்னி
முழுவதுங்கண்டேனென்றோர்பொய்மொழிமொழிந்தானன்றே. (௨௦)
பொய்மொழிகிளத்தலோடும்பொலியுமச்சோதிநாப்பண்
மெய்மொழிப்பெருமான்றோன்றிவேதநிற்கொழிகவென்று
னம்மொழியலருளான்கேட்டஞ்சலித்தடியில்வீழ்ந்தென்
வெம்மொழிப்பிழையென்றுமலருளுதிமேலோயென்றான். (௨௧)
இரந்தவர்வறியராகாவெம்பிரான்கருணைகூர்ந்து
வரந்தருநாளைகையெய்திமயங்கனிமுன்பூசித்த
பரந்தபேரருளிலிங்கம்பராய்த்தொழிற்பெறுவையென்று
விரந்தரமுதல்வன்பெம்மானேயெனநெடியோனோர்ந்தான். (௨௨)

---

* கழுகுருவம் - பிரமனுக்கு அன்னவடிவமுமன்றிக் கழுகுவடிவமு முண்டென்பது.

மல்ரவன்முன்போனுகைவர்துயர்நடுத்தலேசத்
தலர்செறிதீர்த்தத்துள்ளாற்குண்டிகையறலும்பெய்து
பலர்புகழ்விதியினுடிப்பரமனேப்பன்னூளோத்திக்
கலர்கொளற்கரியவேதமுழுவதுங்கைக்கொண்டானல். (௨௩)

இனையெறிபிரமரீர்விசேடமெப்போதுமேனுங்
கனைபுகழ்பிறனத்திங்கட்கண்ணபக்கத்திலெட்டாம்
புனையறுதிதியும்வெய்யோன்வாரமான்றலேபுணர்ந்த
வரைவில்புண்ணியனன்னுளுமாவிசேடங்காண்சூழ்கில். (௨௪)

வேண்டியவேண்டியாங்கேயடியர்க்குவிளேக்குநாகை
யீண்டியமறையோன்பெற்றபேற்றினேயெடுத்துச்சொற்றுந்
தூண்டியவிளக்கேமானச்சுடருமத்தலமேசார்ந்து
பாண்டியன்கயநோய்தீர்ந்தபடியினியெடுத்துச்சொல்லாம். (௨௫)

பிரமன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௬ ஐ திருவிருத்தம்-௧௧௩௬.

## பாண்டியன்கயநோய்தீர்ந்தபடலம்.

மாதவர்சூதமாமுனிசெம்பொற், பாதயிறைஞ்சிப்பாண்டியன்வந்து [ன்.
போதவிறைஞ்சும்பொற்புரையென்ன, மேதகுமன்னுனேதுதல்வேட்டா

கண்ணேவிடுத்துக்கற்பகநோக்கு, மெண்ணேயிலாதவீர்ம்பொழில்சூழ்ந்து
விண்ணேயுரிஞ்சிவேழமெழும்பூம், பண்ணேவளஞ்சால்பாண்டியநாடு. (௨)

அண்ணியமேன்மையத்திருநாட்டிற், றிண்ணியநொச்சிசேர்கருமேகம்
பண்ணியபோர்வைப்பைம்படமாலும், புண்ணியமதுராபுரியெனுமூதூர். ()

அந்நகர்வாழ்வானன்றகுணத்தான், மின்னகுவேலான்மெய்ப்புகழ்பூண்பா
னென்னலர்மோலியுரிஞ்சுபதத்தான், மன்னவன்வீரபாண்டியன்மன்னே.

நாடுபுரக்குநாட்சிலர்வந்து, கூடுவிலங்குக்கொள்ளேமலிந்த
வீடுகொடுக்கும்வேட்டமிலாமே, யாடுகழற்காலாயுணவொன்றூர். (௫-

என்றலும்வாசியேறியியக்கிப், பொன்றலிலாதபொருநர்கள்சூழ [ன்.
வென்றலதோயாவில்லொர்கையேந்திக், கனறலில்கோமான்காடுபுகுந்தா

கூடுதிறத்திற்கோண்வலேயாத்துக், காடுகலேக்கக்கால்கள்விசைத்தே
யோடுபெனமாக்களொருங்குபடுக்கச், சாடுதலுற்றுன்சராசனங்கோட்டி.

கூர்முகவாளிகோத்துவிடுத்துப், போர்கெழுதோளான்பொறபவுலாங்கா
லார்தருவாளியத்தனேயுள்ளூ, மோர்திறல்வாளிதப்பியொதுங்கி. (௮)

மாலறநோற்குமாதவனுய, காலவனென்பான்கைதுணிசெய்யச்
சீலமிலாதான்செய்ததிதென்றம், மேலவன்மிக்குவெஞ்சினங்கொண்டு. ()

சொல்லரும்வெங்கயநோய்த்தொடக்குண்டு, செல்லலுழந்திச்சிதறுகவெ
மல்லலமைந்தமதிக்குலமன்ன, னல்லலடைந்தவனுயடிவீழ்ந்து. [ன்றான்

பொறியிலியானறியாதுபுரிந்தே, னறிவுடையாய்கமைசெய்தருளாயேற்
பிறிதொருசார்பிலையென்பதுபேசச், செறிகுணமாமுனிசிந்தையிரங்கி.()

நாகையெனப்புகனற்றலமெய்தித், தோகையொடும்பரனைத்தொழுதேத்தி
றாகைகொடின்னையடுங்கயவெந்நோ, யேகையுறுங்கடிதேகுதியென்றான்.

என்னலுமன்னவனின்னைமலர்த்தா, ணன்னரிறைஞ்சுபுநாகையடைந்து
பொன்னவிர்வானவபுண்ணியதீர்த்த, முன்னமுவந்துறமூழ்கினனன்றே()

குலமுதனேர்தரக்கொண்டகயத்தின், வலமதனுலைறமன்னவர்மன்னன்
புலனமராதிபுராணனையேத்திப், பலனருளம்மைபதங்களுந்தாழ்ந்து. ()

உள்ளதலங்களனைத்துமுவந்து, கள்ளமின்மன்னவன்கைதொழுதேத்தி
நள்ளருந்தன்குலநன்முதல்கண்ட, வெள்ளருந்தீர்த்தம்விரைந்துபடிந்தான்.

சோமலிங்கப்பெயர்சூடியநாதன், றாமரைச்செஞ்சரணந்தலைச்சூடி
மாமருவும்பல்வரங்களும்பெற்றுக், கோமகன்றன்னகர்கூடிபுவாழ்ந்தான்.

தென்னவன்வெங்கயநோய்தெறவந்து, தன்னமிலாரருள்சார்ந்ததனைத்தாம், பன்னரும்வெந்தழல்வாநதுபணிந்தே, யின்னலறுத்ததினிச்சொலலுற்றாம். (௧௭)

பாண்டியன் கயநோய்தீர்ந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௬௭ ஆ திருவிருத்தம் - ௧௬௫.

## அக்கினிபூசித்தபடலம்.

கரியமலவேரறுத்துக்கடுங்கூற்றினுயிர்குடித்த
வரியதிருவடிநீழலடையுமுயற்சியர்வணங்கித்
தெரியவழல்பூசித்ததிறமுரைத்தியெனமகிழ்ந்து
பிரியமிகுசூதமுனிபேசுதலுற்றனன்மாதோ. (௧)

விதியின்முழுதுலகளிப்பான்மேதக்கபெருங்குணத்தான்
மதிமரபினுற்பவித்தானபிரதீபனெனுமன்ன
னதிநலத்தினவனொருகோனடாத்தியமர்தருநாளிற்
றுதிமிகுத்தவிருமைந்தர்தோன்றினாரவன்றவத்தில். (௨)

மூத்தமகன்றேவனெனமொழியுமொருபெயரினன்சீர்
பூத்தவிளையவன்பெயர்சந்தனுவெனயாவரும்புகல்வா
ரேத்தவிவர்வளர்நாளிலிகபோகமதியான்மண்
காத்தபிரதீபனருள்கைக்கொள்வான்றுறவடைந்தான். (௩)

தந்தைதுறவடைந்ததிறந்தகவுணர்ந்துமூத்தமக
னிந்தையிறேவனுங்கடல்சூழ்நெடுநிலத்திருசையறுத்
தந்தைதபுதுறவடைந்தானஃதுணர்ந்துமிளமைந்தன்
சிந்தைவிருப்பொழியானுய்ச்சேணிலங்காத்தினிதிருந்தான். (ச)

சந்தனுவென்பவனின்றுதந்தையனுமதியின்றி
யந்தனுமெண்ணுதவரசாட்சிமேற்கோடலினால்
வந்ததுபன்னிருவருடமழையிலாவற்கடமுட்
டந்ததுவெங்கொடுந்துயரந்தரணியிருதிணையுயிர்க்கும். (ரு)

விரவியவந்நாள்விசுவாமித்திரன்செய்யொருமகத்திற்
பரவியவேறூன்கிடையாப்பரிசினான்மதிமயங்கி
யுரவியதும்பொதுவியல்பினுமென்றேயெனக்குறித்துக்
கரவியனாயூன்கவர்ந்துகடுந்தழலோனுணக்கொடுத்தான். (சா)

உண்டுசுவைதெரிதழலோனுனிதுநாயூனதெனக்
கண்டுமழையில்லாதகாரணத்தால்வற்கடமேற்
கொண்டுவருத்திடுமதனாற்கோசிகன்மற்றிதுபுரிந்தா
னண்டுமிவன்மேற்பிழையின்றனைத்தினுக்குங்காரணமாய்.] (எ)

மழைபொழிவிப்பான்மகவான்மற்றவனாற்றியகொடிய
பிழையிதுவேயெனப்பிணங்கிப்பெயர்ந்தழலோன்காரோணத்
துழையமரோர்வேணுவனத்தொளித்திருந்தான்வெதுப்பேறிக்
கழைசுளிமால்களிறுங்குக்கலந்ததுவாடியதன்றே. (அ)

நீடுதழல்வேணுவனநீங்காமலொளித்திருக்கப்
பாடுபலவுயிருமழற்பாகமறவருந்துதல்கண்
டேடுசெறிமலர்மேயோனிமையவரோடெழுநாலுவ
நாடுபலவினுந்தேடிக்காரோணநகருற்றான். (கூ)

நீடுபெருவேணுவனநேர்வந்துகளிற்றினைக்கண்
டாடுதழலெங்கொளித்ததறியவுரைத்திடுகென்ன
வாடுமஃதீங்கொளித்தானெனத்தழலோன்மனங்கொதித்துக்
கோடுகுறைத்திடக்கவலைகோடியெனவதைச்சபித்து. (க0)

வன்னிவளைபிப்பிலத்துவன்னியொளித்தனனாக
முன்னிமலரவனுங்குமுழுத்தழலெங்கெனவெதுப்பர்
துன்னியசாருவைவினவச்சொற்றதுபாவகனமுன்று
மன்னியவாக்கிழந்துதுயர்மருவுகெனவதைச்சபித்து. (கக)

முன்னரியற்றியதன்பேர்முயங்குதீர்த்தத்தொளித்தா
னன்னவிடத்தினுமணுகியாங்கொருமண்டூகத்தை
நன்னர்வினவிடவதுவுநவின்றதழலோன்சினந்து
பன்னியநாக்கிழந்துதுயர்படுதியெனவதைச்சபித்து. (கஉ)

வெளிவந்ததழன்மலரோன்மென்மலர்த்தாளிணைபணிந்தான்
களிவந்தமற்றவனிகரந்தெவனெனவினவத்
தெளிவந்தகோசிகன்முற்செய்ததிறமெடுத்தியம்பி
யளிவந்தமழையின்றியாயதாலிக்கொடுமை. (௧௩)

அதுமகவான்புரிபிழையென்றறைந்துபாவகனிற்பச்
சதுமுகனுட்பிணக்கொழியச்சமாதானமுறச்செய்து
கதுமெனயாவருஞ்சூழக்காரோணத்தளிபுகுந்து
புதுமலர்கடூயாதிபுராணர்பதஞ்சேவித்து. (௧௪)

கருந்தடங்கணுமையாளையவ்வாறேகண்டிறைஞ்சிப்
பொருந்தமழைபொழிந்துவளம்புடவியுறவரம்பெற்றுத்
திருந்தமலரோன்மகிழ்ந்தான்றுமலியூன்றின்றலினால்
வருந்தவருபிழையொழியவசுவருச்சித்தருள்பெற்றான். (௧௫)

கோடுகுறைப்பினும்வளர்ச்சிகூடுகநீங்கியகோடும்
பாடுபெறுஞ்சிறப்புறுகவெனும்வரம்பல்புகர்முகத்து
நீடுகளிற்றினுக்குதவிநிகழ்சிலவாக்குறுமவற்றை
நாடிவிரும்புகவென்னாநற்கிளிக்கோர்வரங்கொடுத்து. (௧௬)

தாலமிழந்திருந்தாலுந்தப்பாதேயரமுழக்க
மோலமுறப்புரிகுகியென்றொருவரந்தவளைக்குதவிச்
சாலவிமையோர்மறைந்தார்சதுமுகன்றன்னிலகடைந்தான்
ஞாலம்விரும்புறுமழலோனயந்தமர்தன்னிடம்புகுந்தான். (௧௭)

நக்கினியபெருமான்வாழ்நாகைக்காரோணத்தி
லக்கினிபோய்க்கலந்திருந்தவக்கினிதீர்த்தம்படிவோர்
தொக்கினியவல்லாதவயநூறினுமவைதொலைத்து
மிக்கினியபோகங்கள்வேண்டியவாறேபெறுவார். (௧௮)

நன்னாகபுரத்தடைந்துநாவோரேழுடைக்கடவு
டன்னாசமுறப்பணிந்துசார்ந்தபிழைதீர்ந்தகதை
யென்னாகநினைத்தலிஃதிரிந்தவகையெடுத்துரைத்தாம்
புன்னாகவனப்பெருமைபோற்றியினிப்பேசுவாம். (௧௯)

அக்கினிபூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௮ ஐ திருவிருத்தம்-௧௬௭௨.

## புன்னாகவனப்படலம்.

மனத்தடங்காதவோகைமலிதரக்காமமாதி
சினத்தவொன்றூதமேலோன்சேவடிமுனிவர்போற்றிக்
கனத்திரள்களுலியாங்குக்காட்சியிற்பொலிபுன்னாக
வனத்திறமுரைத்தியென்னமற்றவன்வகுக்கலுற்றான். (௧)

வலிகெழுநாகர்தம்முள்வாசுகியென்னும்பேரா
ளொலிகெழுகடற்காரோணத்தானுற்றியபூசைப்பேற்றாற்
பொலிகெழுபொன்னங்கொம்போபூத்தபொற்கொடியோவென்ன
வலிகெழுவனப்பினோர்நான்மகளிரைப்பெற்றனன்றே. (௨)

மருவுசுப்பிரபையென்றுமாலினியென்றுமொப்புச்
சருவுபதுமினியென்றுசாருமண்டலையென்றுநாற்
பொருவில்புத்திரிகளானார்புனிற்றிளம்பிறையினாளும்
வெருவிலொண்வளர்ச்சிமேவியவ்வனம்விழையவாய்ந்தார். (௩)

புதல்வியர்பருவநோக்கிவாசுகிபொலிகாரோண
முதல்வனின்னருளாலிந்தச்சிறுவியர்முனைப்பப்பெற்றேன்
மதனனுமவாவவர்தமணப்பவர்தம்மைத்தேரு
விதனமொன்றுடையேனென்றுமெய்யுறச்சூழ்ந்திருந்தான். (௪)

ஆயதோர்காலைநாகையண்ணலாரருளினாலா
காயவாக்கொன்றுசெல்வங்கமழ்சவுராட்டிரப்பேர்த்
தேயமாள்வேந்தனும்புண்ணியபுஞ்சன்சீர்த்தி
மேயவக்கோமான்மைந்தர்வேள்புரைநால்வருள்ளார். (௫)

புண்ணியசீலன்யாரும்புகழ்தருதருமசீலன்
கண்ணியகுணஞ்சாலுஞ்சுப்பிரதாபன்காமவேளு
மெண்ணியவனப்புவாய்சத்துருப்பிரதாபனின்னர்
மண்ணியமணியிற்றோன்றிமணபபொன்றுரைத்ததன்றே. (௬)

உருவில்வாக்குணர்ந்துமென்மேலோகையிற்றிளைத்திருந்தான்
பொருவில்வாசுகிமுன்சொற்றபுகழ்ச்சவுராட்டிரதனு
வெருவின்மைநதர்களுல்வோருமேதகுநாகநாட்டி
னொருவில்பல்வளமுங்காண்பானுற்றனர்பிலமாறாக. (௭)

மணிகிளர்நாகநாட்டிமருவியோர்நோக்குங்காலைப்
பணிகிளர்படப்பூணுகைப்பரனருளதனாலோர்வாக்
கணிகிளர்வாசுகிப்பேரரவின்புததிரிகளுல்வர்
பிணிகிளர்மாலைசூட்டப்பெறுதியொன்றெழுந்ததன்றே. (௮)

நாந்தகவுழவராயநால்வரும்வாசுகிப்பே
ரோந்தன்முன்மகிழ்ந்துசெனறுரியாவர்நீரெனவினவப்
போந்தமைதெரியச்சொற்றார்பொலிவனப்பொருநால்வர்க்குஞ்
சார்ந்தமென்முலையார்நால்வர்தமைமணம்புணர்த்தினானே. (௯)

பொருவருமரசனீன்றபுத்திரரொருநால்வோரும்
வெருவருமாவுதந்தவேற்றடங்கண்ணால்வோரு
மொருவருமுவகைதுங்கவுளகத்திறுதப்புல்லி
மருவரும்போகத்துய்த்தார்கழிந்தனவருடம்பல்ல. (௰)

இடையுறுப்போகந்தயக்குமீரிருமாதராரு
மிடையுமூழ்வலியாலந்தப்போகத்தவெறுப்புவைத்தார்
நடையுயர்கொழுநர்தம்பானயந்தனுமதியும்பெற்றுப்
புடையமரனையரோடும்பூமியையடைந்தாரன்றே. (௧௧)

அடைந்தவர்முத்திவேண்டியருந்தவம்புரிவானெண்ணி
மிடைந்தவண்டபோவனத்தைமேவினர்மேவுங்கான்மா
சடைந்தவத்திரியைக்கண்டாருவந்திறைஞ்சிப்பிறந்ததை
தடைந்தமாமுத்திவேட்டோநகதயருள்புரிதியென்றார். (௧௨)

அருந்தவத்துயர்ந்தோனுயவத்திரிமுனிவனெண்ணிப்
பொருந்தநீர்நாகைக்காயாரோகணதலத்திற்புக்கு
மருந்தமுண்டயன்மாலாதிவானவாவாழ்த்தானைக்
கருந்தடங்கண்ணளாயகருணையோருருவத்தாயை. (௧௩)

தேவநீராடிப்போற்றிமற்றுளதலமுஞ்சேவித்
தோவறவடபான்மேவியோங்குபுன்னாகநீழன்
மேவவோரிலிங்கநாட்டிவிதியுளிப்பூசிப்பீரேற்
பாவனாதிதமுத்திபலித்திடும்போமினென்றான். (௧௪)

முனிவரனுரைத்தவாறேமுழங்குகாரோணமேவிப்
பனிமலர்த்தேவதீர்த்தம்படிந்துகாரோணபெம்மான்
புனிதமென்பாதம்போற்றிப்புவனங்களனைத்துமீன்ற
கனிமனக்கருந்தடங்கட்காரணிபதமும்போற்றி. (௧௫)

மற்றுளதலங்களெல்லாம்வரன்முறைசென்றுசென்று
கற்றுளமாந்தர்மேன்மைசுனைதரக்கேட்டுணர்ந்து
பற்றுளமுருகப்போற்றிப்பண்ணவர்பரவிப்போற்றக்
குற்றுளவடபாலெய்தியோங்குபுன்னாகங்கண்டார். (௧௬)

மரகதந்தளிர்த்துமுத்தம்வரம்பிலவரும்பியாங்கே
பரவுபவளங்கள்பூத்துப்பாயபுன்னாகநீழல்
விரவவோரிலிங்கந்தாபித்தமராரும்விரும்பியாடப்
புரவுசெய்தீர்த்தமொன்றுபொருந்துறத்தென்பாலாக்கி. (௧௭)

அந்தநற்றீர்த்தமாடியங்கலாரொருநால்வோரும்
பந்தமின்முக்கணூற்றேட்பரமனைப்பூசைசெய்ய
கந்தலில்பெருமான்றோன்றிநாடியதென்னையென்றான்
சந்தமென்கொங்கைநல்லார்தாழ்ந்தனர்வேண்டுகின்றார். (௧௮)

உத்தமவெங்கள்பூசையுவந்ததுமெய்ம்மையாகி
லித்திருப்பேரூர்நாகூரொனும்பெயரொய்தல்வேண்டும்
பத்தர்கள்புகழ்நாகேசப்பெயருநீயரித்தல்வேண்டு
மொத்தநின்றாட்கீழ்யாங்கள்கொழுநரோடுறுதல்வேண்டும். (௧௯)

இத்தனைவரமுந்தம்மோவென்றிரப்பவர்க்கனுதி
முத்தனவ்வாறேநல்கிமொழிந்தவவ்விலிங்கத்தற்றன்
சித்தமுள்ளுருகவந்தவிலிங்கத்தைச்சேவைசெய்வார்
பத்தமுற்றகலமேலாம்பரகதிமருவுவாரால். (௨௦)

பொருவருமரும்புமல்ரும்புன்னுகவனத்தின்மேன்மை
யொருவருஞ்சரிதநதேற வொருவகையெடுத்துச்சொற்று
மிருவருந்தேருவண்ணலிணையடியேத்திவாழ்னோர்
வெருவருந்தன்மைபெற்றவண்ணமும்விளம்புவாமால். (௨௧)

புன்னுகவன்ப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௪ க்கு திருவிருத்தம் - ௧௧௯௩.

## தேவர்கள்பூசித்தபடலம்.

சுகமுயர்மாதவர்சூதமாமுனி, யுகபதநதொழுதுகாரோணந்தூத்தமர்[ன்.
தகவிமையவர்பணிசரிதஞ்சொல்லென, மிகமகிழும்முனிவரன்விளம்புவா

அரியபுண்ணியமுநல்லமரரீட்டமுஞ், சரியவெம்பாவமுந்தருவர்கூ
ட்டமும், வரியமுன்றனையிலவிருந்திரப்பெய, ருரியவல்லவுணர்கோனொ
ருவன்றேன்றினன். (௨)

படையொடுமெழுந்துவான்படர்ந்துபன்னவ, ருடைதரப்போர்புரி
ந்தொருங்குபற்றியே, தடைசெய்கால்யாப்பிடுதறுகணெண்ணினு, னடை
பெருவாயரைதுவிழிந்தனர். (௩)

இனிச்செயலென்னையென்றெண்ணியோடுபு, தனித்தபொன்மலரடி
தாழ்ந்துகூறலு, மனித்தர்போனுகைகீமருவிப்போற்றிடி,லனித்தமெய்து
வன்விரைந்தவுணனென்றனன். (௪)

குருமொழிதலைமிசைக்கொண்டுவானவ, ரொருவருநாகைக்காரோ
ணம்புக்கனர், திருவருதம்பெயர்த்தீர்த்தமாடினர், கருமணிகண்டனைக்க
ண்டுபோற்றுவார். (௫)

ஆதிபுராணன்பொன்னடியிறைஞ்சுபு, காதியகருந்தடங்கண்ணிதா
டொழு, தேதமில்விடங்கரையேத்திப்பின்னரும், போதவிணைவரிதுபுரி
தன்மேயினார். (௬)

பொருவருமகமொன்றுபுரிந்துபேருவப், பிருவருங்காணுருவிறைவற்
காக்குபு, மருவரும்புண்ணியமகருண்டத்தினை, வெருவருதீர்த்தமாக்கி
னரவ்விண்ணவர். (௭)

நீடுமாமகப்புனலென்னும்பேர்நிறீஇக், கூடுதேவியுருக்கொண்டுசோ
லையி,னூடிசான்மலர்தொறுமூறுமதுக்கவர்ந, நீடுகூரத்தடத்தியையச்சேர்
த்தனர். (௮)

செறிசுவைகொளுமதுத்தீர்த்தமென்றொரு, நெறியமைபெயருறநிறுவி மொண்டுகொண், டறிவுருவாயவற்கன்பினாட்டினார், பறிபுனைமலர்பலபறித்துச்சூட்டினார். (௯)

இன்னணமபூசைசெய்திருக்குநாளையிற், கொன்னவில்லிந்திரன்குலிசந்தாக்கிட, வுன்னரும்வலிகெடவொழிந்துமாய்ந்தனன, முன்னரும்பெருவிறற்றொளவிருத்திரன. (௧௦)

விருத்திரன்மாணடதுதெரிந்துவிண்ணவர், பருத்தெழுமோகையம்பரவைமூழ்கின, ரருந்தாமபரன்விடையமையபெற்றனா, திருத்தருதானமேசேர்ந்துவாழ்ந்தனா. (௧௧)

அத்தடமதுமுகந்தாட்டியண்ணலார், சித்தநன்குவப்புறச்செய்தனார்க்கைமுன், வித்தகமங்கடன்பால்வெறறிகொணடன, ளுர்சமயிசத்தருமுனைத்தவந்தடம். (௧௨)

எண்ணியவானவரியாருநாகையிற், றிண்ணியபூசைசெய்செயலுரைத்தனந், தண்ணியமுனிவிர்காடருமபுஞ்சனும், றெணணரியதியிற்கதியுற்றதோதுவாம். (௧௩)

தேவர்கள்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆக படலம் ௪௦ ௵ திருவிருத்தம் ௨௦௦௯.

## தருமபுஞ்சன்முத்தியடைந்தபடலம்.

தெங்குசூழ்நைமிசத்துச்செறிபவர், பொங்குகாதலினசூதனைப்போற்றுபு, நங்குவாய்மைத்தருமபுஞ்சன்கதை, யிங்குநீநவிலென்னநவிலுவான். (௧)

அணிவளங்கிளரங்கநன்னாட்டிடைத், தணிவில்வான்புகழ்ச் சண்டதருமன்பான், மணியிறறொறமுற்றுணமறையாதிகள், கணிதமின்றியுணர்ந்தகருத்தினான். (௨)

தருமபுஞ்சனெனும்பெயர்தாங்கிறை, னருமருந்தினமைந்தகுணத்தினான், றிருமகன்பொடியாத்தெறுங்கணணினான், கருமமேபுரியுங்கடப்பாட்டினான். (௩)

அனையன்முந்தைப்பவத்சரியாதுசெய், வினையிற்றீமையனைத்துமவிராயெனப், புனையயார்க்கும்பொருந்தயிலாதொரு, தனையற்பெற்றனன்யாருஞ்சலிக்கவே. (௪)

தோற்றமுற்றசுதற்கறமென்பது, மாற்றமின்மையினுத்திகனென்னும்பேர், சாற்றலாமெனச்சாற்றினர்யாவரு, மேறறமேயெனவேற்றுப்பயிலுவான். (௫)

பெற்றதாதைபெருகமுயன்றுநூல், பற்றவோதியுமோதுவித்தும்பயி அற்றதோதருந்தீமைகளேயலாற், கற்றதொன்றிலன்காமரறத்தினே. (௬)

சந்திவந்தனைசற்றுமியற்றிலா, னந்தியெண்ணருந்தீமைகவிற்றுவான்
முந்தியாருமுனியுஞ்சரிதத்தான், புந்திசற்றுமிலாதவப்புல்லனே. (எ)

நேர்ந்தநீற்றைநினைத்துமறிகிலான், வார்ந்தநல்லொழுக்கென்பது மாற்றினன், கூர்ந்தபாதகங்கூடிமகனெனச், சார்ந்தவோவெனத்தந்தை வருந்தினான். (அ)

கண்டதேபெருங்காட்சியெனுமனங், கொண்டபுன்மதக்கோட்பட் டுழலுவா, ருண்டவாமடவார்முயக்கொன்றனை, விண்டவாவுதல்வேறி லனாயினான். (கூ)

மனையகத்துளவன்பொருள்வெளவுபு, நனைமலர்க்குழனாரியர்கைக் கொடுத், தனையர்நல்கிடும்போகமவாய்க்கொளா, வினைவறப்பயில்வானக ரெங்கணும். (க0)

இல்லமேயபொருள்களிறத்தலும், பல்லவில்லுளும்பாதியிராப்புகுந் தொல்லவேண்டுவதோவறக்கொள்ளுவா, னல்லசெய்யுமறிவில்கயவனே.

இன்னநாளினியன்மறைமுன்னைநாட், சொன்னவாரியனாவிதொலைதர
வுன்னவாமோருபலமெறிந்தன, னென்னசெய்கையென்றியாருமிரங்குற.

குருவைமாட்டிக்குலவவவன்மனை, மருவுவாளைவலிந்துதழுவினான்
வெருவுதீவினையாவும்விளைதரும், பொருவிலாவளப்பூமியுமாயினான். (க௩)

பாவிசெய்கைபயந்தவனோர்ந்துமே, தேவியிங்குச்சிவணறகாதென
வோவியோடவுடன்றுதுரந்தனன், மேவினான்கொடுவேடுறுகானமே. ()

காடுமேவிக்கலங்கியுழிதரும், வாடும்வெய்யபசியின்மயங்குறும்
வீடுமாறுவிரவுமென்றஞ்சுறு, மோடுமீளுமுலறுமலறுமே. (க௫)

ஏங்கிச்சோணனெனுமொருவேட்டுவன், பாங்குற்றென்பசிபாற்றென் றழுதன, னாங்குச்சீரிலவன்சற்றிரங்குபு, நீங்கிற்சேர்மறச்சேரியைக்கா ட்டினான். (கசு)

அந்தவேட்டுவச்சேரியடைந்திடு, வெந்தவூன்மிசைந்தான்கள்ளுமாந்தினா,
னந்தமற்றவரோடுநட்பாயினான், பந்தமேலுமோர்பந்தமுற்றுலென. (கஎ)

தருமபுஞ்சன்றவாமகவாசையாற், பெருகவெங்கணுகாடுபுயேதுற்று
வெருவுகானம்விராவில்வேட்டுவர், மருவுசேரியில்வந்துறக்கண்டனன்.

கண்டபோதுகனன்றுரறையறைற, துண்டகண்மயக்காலவற்குள்ளன
வெண்டவாதுபறித்தனனேங்கியே, யண்டநீமகனென்பதறைந்தனன். ()

சிறுணர்ச்சிசெறிந்தனனத்தனை, யறிவுதிப்பவழைத்துடன்கைக் கொடு, வெறிமலர்ப்பொழின்மேயநகரிடைக், குறிகொடன்மனைக்கூடியி ருந்தனன். (௨0)

இரவிற்சங்கரன்பூசையியற்றுபு, பரவிப்போற்றியென்பாலன்கொ
டுமையா, முரவிற்றீர்ந்துய்யுமாறருள்செய்தியா, லரவப்பூணுடையாயெ
னவேண்டினன். (உக)

ஆணைத்தாருக்கருளும்பராபரன், மாணைப்பூசைசெய்பூசுரன்வாதனை
பேணத்தான்சகிப்பான்கொல்பெரிதவன், காணத்தோன்றிக்கனவிடைக்
கூறுவான், (உஉ)

தூயபேரொளிவாய்ந்தசுதன்மையிற், சீயவாதனைமேற்செழுகித்தில,
மேயவெள்ளைக்கவிகைநிழல்செயப், பாயசாமமைபக்கமிரட்டுற. (உங)

ஒருபுறத்தினொருவனடைப்பைசை, யிருவியொண்முகவாசமியற்றிட
மருவியோர்புறத்தேயொருவானவன், பருவமோர்ந்துபடியகமேந்துற. ()

உரியயானையுமுச்சைச்சிரவமுந், தெரியமுன்னர்ச்சிவணுபுமேவுற
வரியதேனுநிதிமணியைந்தரு, பிரியமார்பணியேற்றுப்பிறங்கிட. (உரு)

அரம்பையேமுதலாகியவந்தலார், பரம்பிமுற்பசுங்கொம்பினடித்திட
நரம்புவீக்குகருவிநன்முக்கொடு, நிரம்புகானஞ்சிலர்நிகழ்த்தாநிற்க. ()

நீடிமேன்மைநிரம்புபுப்பத்துமுக், கோடிவானவர்கும்பிட்டெதிர்நிற்ப
வாடிவாள்வலித்தானவரோர்புறங், கூடியாவித்துக்காண்டல்குறிக்கொள.

முற்றுமாயவிருதுமுன்னோங்கிடப், பற்றுமாகதர்சூதர்பராவிடக்
கற்றுவல்லவராசிகழறிட, வெற்றுவாளிந்திரனிருந்தானரோ. (உஅ)

ஆயகாலையருகமருஞ்சசி, மேயவித்தனைசெல்வமும்வேந்தநிற்
கேயதன்மையெனுமெலென்றனளவன், றீயவெந்தழல்போலச்சினஞ்செயா,

மண்ணகத்துமகளுருவாகென்று,ரெண்ணமெண்ணினியென்றவளுருங்
கனன், றண்ணனீயுமுனங்ஙனமாகென்றாள், விண்ணரியாரும்வெருவிந
டுங்கவே. (௩0)

மருவுசாபமிவ்வண்ணமொருவருக், கொருவரோதியுவரிவளாகத்துத்
திருவமேவியசென்னிநன்னாட்டகம், பொருவில்வேதியன்புண்ணியகீர்த்தி
பால். (௩க)

கறையிலாப்பலகாந்தியெனும்பெய, ரறையுமாறிந்திரன்மகளாகினாள்
பிறைநுதலயிராணியும்பின்பிறந, திறைவன்றங்கையெனவிருந்தாளரோ.

இந்தவண்ணமிருவருமேவுழி, முந்தமைந்தவறிவுமுளைத்தலாற்
பந்தமோவப்படர்ந்தனர்காகையி, னந்தமைத்தொழுதேத்திநலம்பெற.()

முன்னமைத்தபுனலின்முழுகினான், பின்னர்வந்தபிணைவிழிமாதொடு
மன்னயத்தபழவுருவண்ணியே, யின்னநீரவெனமைத்தொழுதேத்துபு.(௩௪)

வானநாடர்கள்யாரும்வளைதரத், தேனவாவியசெஞ்சொற்சசியொடுந்
தானமேவித்தருக்குற்றுவாழ்ந்தன, னூனமேதுமிலாவன்பினுத்தம. (௩௫)

நீயுமவ்வணமேநின்மகனொடுந், தாயினேரிறவப்பெருநாகைச்சார்ந் [ன்.
தாயுர்தீர்த்தங்களாடிநமைத்தொழி, ஞேயுநதீமையென்றோதிமறைந்தன

அல்லகண்டமனைத்துமொழிதரச், சொல்லவோர்ந்துதனைந்தெழுநதோ
கைசார், நல்லவேதியனுத்திகனொடும்போய்ச், செல்லறீர்க்குந்திருநாகை
சேர்ந்தனன். (௩௭)

உள்ளதீர்த்தமெலாமுவந்தாடினன், கள்ளந்தீர்த்தருள்காரோணநாதனைப்
புள்ளவாவுமலர்க்குழற்பூரணி, வெள்ளவாரருட்டாலயவிருப்பொடு. ()

போற்றினன்சிலநாளல்பிற்போற்றது, மேற்றினனருளேய்ந்துபஃறீமையு
மாற்றினன்மகனொடுங்கயிலையி, லுற்றினன்சமரிடமின்புற்றான். ()

சாற்றுமேன்மைத்தருமபுஞ்சற்கற, லாற்றுவேணியருளியதோதினும்
பாற்றுதோநரபாகன்புகுந்தன்பிற், போற்றுமான்மியமும்புகல்வாமரோ.

தருமபுஞ்சன்முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௪௧ இ திருவிருத்தம்-௨௦௪௬.

## நரபாகன்முத்தியடைந்தபடலம்.

மாதவர்குதனைவாழ்த்தி, யேதமிலாநரபாகன்
மேதகுசீர்புகலென்ன, வோதல்செய்வானவ்வுறுவன். (௧)

ஆரமுன்மாமணியாவுங், காரகில்சந்தொடுவீசு
மீரவியன்றிரையமுனை, தீரமமைந்ததோர்பேரூர். (௨)

தெரிதரினன்னதுமேரு, கிரிபுரைமாளிகைமல்கி
விரிமதில்சூழ்ந்துயர்சோம, புரியெனுநன்னகராமால். (௩)

அந்நகர்வாழ்திறலண்ண, லன்னயசோமகுலத்தா
னென்னருமேத்தவிருப்பான், பன்னருஞ்சீர்நரபாகன். (௪)

மருவலர்ப்போரின்மலைந்து, பொருவரும்வாகைமெய்ப்பூணத்
திருவளர்நாடுமுன்யாவும், வெருவரனமேவவிடுத்தான் (௫)

இனியெதுசெய்குவலென்று, பனிமதிசூடியநாதன்
றனியமர்தானமிறைஞ்சக், கனிமனமேவியெழுந்தான். (௬)

கங்கையின்சூழ்தருகாசி, யங்கையின்மான்மழுவானை
நங்கையொர்பாலனயந்தானோ, டங்கைகுவித்துப்பணிந்தான். (௭)

திருப்பதமாறெழுந்தேகைப், பொருப்பதள்போர்த்தபுராணன்
விருப்பதகத்தின்விளங்கும், பருப்பதமேத்திப்பணிந்து. (௮)

சித்தியைவேண்டியுமேலா, முத்தியைவேண்டியுமொய்த்துப்
பத்திசெய்வார்பரவுங்கா, ளத்தியடைந்துபணிந்து. (௯)

நாவடிதேனினயக்கப், பாவடியார்துதிபல்கும்
பூவடியார்புனற்காஞ்சி, மாவடியானைவழுத்தி. (௧௦)

திருகழுக்கெஞ்சாறவுள்வா, ரருகழுத்தும்பதந்தானை
யிருகழுக்கண்டினிதேத்து, மொருகழுக்குன்றினைவணங்கி, (௧௧)

‡ வரிப்புலிநீறெனப்பூசி * அரிப்புலியுண்மகிழண்ணை
லெரிப்புலிங்கக்கணிருன்பா, திரிப்புலியூர்சென்றுபோற்றி. (௧௨)

நாமலையாமைநயந்து, நாமலைபாடலுமேற்று
நாமலையத்திருநல்கண், ணமலைபோற்றிவணங்கி. (௧௩)

குழமலைமேனியோர்பாற்றி, கழமலையான்கழன்மைத
வழமலைநீங்கருமாண்பாா, பழமலையேத்திப்பணிந்து. (௧௪)

சிதம்பரவாவுதறீர்ந்த. சிதம்பரவாநிற்குநீற்று
சிதமபரமானநதஞ்செய்வார், சிதம்பரமேத்தித்திளைத்து. (௧௫)

ஆழிமிதப்பினமைந்து, வாழிபுலிக்கருள்வைத்த
வீழிநிறச்சடைமேலோன், காழிமதித்துவணங்கி. (௧௬)

பெருக்கறருங்கியவேணி, யெருக்குமுளுவணிவானை
மருக்குலமாமலர்நீர்ப்புள், ளிருக்குவேளூரிலிறைஞ்சி. (௧௭)

பெண்காட்டும்மொருபாதித், தண்காட்டும்பிறைமோலிக்
கண்காட்டுந்நுதலானை, வெண்காட்டிற்புகுநதேத்தி. (௧௮)

அடலூர்மூன்றுமயிந்து, கெடலூரோவிடுத்தானைப்
படலூர்வாரித்திப்பாங்கர்க், கடலூரோத்திக்கசிந்து. (௧௯)

நிறையான்மாக்களிறைஞ்ச, முறையான்மாப்பலநல்கு
மிறையான்மாமயிலாடு. துறையான்பாதமும்போற்றி. (௨௦)

மாவடுகேர்விழியார்செய், கோவடுமாதவர்சூழ
வாவடுதண்டுறைமேவுந், தேவடுத்தீர்பதம்போற்றி. (௨௧)

சடைமருவும்பிறையானைப், புடைமருவம்பிகையோடுங்
கடைமருவாவளம்வாய்ந்த, விடைமருதேத்தியிறைஞ்சி. (௨௨)

---

‡ வரிப்புலி - நிறம்பொருந்தியவோர்சாந்து * அரிப்புலி - அரியைப்
புல்லியெனப் பொருள்கொள்க,

விடர்தைகளத்துயர்மேலான், மடந்தையோர்பாலுடைவள்ளல்
o நடந்தைபதத்தாமரையைக், குடந்தையனைந்தரும்பிட்டு. (உ௩)

ஐயாறுறுகடந்தா, னையாருய்மனுவுள்ளா
னையாறைந்தறவாமெய், யையாறப்பனையேத்தி. (உ௪)

தேனைக்காவல்செய்வண்டின், வானைக்காவல்செய்வார்சூழ்
கோனைக்காவளமல்கு, மானைக்காவடிபோற்றி. (உ௫)

கராமலைபோதகங்காத்தோன், பராமலைநீர்முடிபம்ப
வராமலையற்புதனெண்டாள், சிராமலைமேவிவணங்கி. (உ௬)

போரூர்முப்புரமாயத், தேரூரும்பெருஞ்செல்வன்
காரூர்மாளிகையோங்கு, மாரூரேத்தியிறைஞ்சி. (உ௭)

இகலூர்மூன்றுமுருங்க, மிகலூரோர்கணைதொட்டு
நகலூரேறுயநதார், புகலூரெய்துபுபோற்றி. (உ௮)

பங்காடற்பளாகாணப், பொங்காடற்றிறஞ்செய்யுஞ்
சங்காடற்செவியானைச், செங்காட்டிற்றினிதேத்தி. (உ௯)

இந்நாற்றனங்களாதி, யெந்நாற்றனமும்போற்றுஞ்
சந்தமிக்கான்மனத்தன்பஞ், சிந்தமிககாயதுகாணான். (௩௦)

தேவாவென்றுதியங்கும், பூவாழ்வான்செவிகேட்ப
வோவாவின்பருணகை, வாவாவென்றதோர்வாக்கு. (௩௧)

அதுதேர்ந்தோகைதுளும்ப, மதுவார்பூந்தொடைமார்பன்
சதுவேதங்களுமேத்து, முதுநாகைப்பதிசார்ந்தான். (௩௨)

வானோர்வாவிபடிந்து, தேனோர்மாமலர்தூவிக்
கோனோராதிபுராண, மானோர்பாதம்வணங்கி. (௩௩)

எல்லாமீன்றபிராட்டி, யல்லார்கூந்தல்வணங்கு
நல்லார்சேர்பதநண்ணிப், புல்லாவேந்துபுபோற்றி. (௩௪)

சூழ்வான்பன்முறைகோயி, லாழ்வானன்பெனுமாழி
வீழ்வான்முன்னர்விரும்பிப், போழ்வான்றீவினைபோக. (௩௫)

உள்ளதலங்களனைத்துங், கள்ளமிலாதகலந்து
வெள்ளவிருஞ்சடையானைத், தள்ளருமன்புறத்தாழ்வான். (௩௬)

---

o நடந்தை - நடம்தை எனப்பிரித்து நடம்பொருந்தியவெனப் பொருள் கொள்க.

இன்னணமேத்தியிறைஞ்சு, மன்னவனுக்கருண்மாண்பிற்
பொன்னவிராதிபுராணன், றன்னருணல்கினனன்றே. (௩எ)

ஆதிபுராணர்தமருளா, மேதியினுன்னலரிரிய
மோதிமிழுந்தனுபெற்று, ஞேதியுணர்ந்தவுளத்தான். (௩அ)

முன்னையின்மேம்படுசெல்வ, மென்னைகொலாமெனப்பெற்று
னன்னையொப்பாற்கவையாக்கிச், தன்னையொப்பான்மிகவாழ்ந்தான். ()

பண்புமிக்கானரபாக, னண்புமிக்கார்கதைசொற்றும்
விண்புகழ்பாற்கரமேலோ, னெண்படுகாதையினைச்செப்பாம். (௪0)

நரபாகன்முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௪உ ஐ திருவிருத்தம்-உ0அசு.

## பாற்கரப்படலம்.

கருமலவேர்தபுகாட்சிமாதவர்
திருமுனிருந்தன்பொற்செய்யதாடொழு
தொருவறப்பாற்கரனுற்றதோதெனப்
பெருமுனியவனதுபிறங்கக்கூறுவான். (க)

மறையவர்திருக்குலத்துதித்தமாண்பினன்
பிறைவளர்சடைமுடிப்பிரானடித்துணைப்
பொறையலதயல்சுமவாதபுந்தியான்
சறைதபுபாற்கரப்பெயர்கலந்தவன். (உ)

மனைமகவொடுஞ்செறிவாழ்க்கைவேண்டலன்
கனைகடறநதனுஞ்சுண்டகாரணன்
புனைமலர்ததிருவடிபோற்றிச்சன்மநோய்
வினைதபுவாஞ்சையேமேறகொண்டுள்ளவன். (௩)

இதங்களொருவதலால்வேறியம்பிடா
மதங்கராச்சிரமத்துமரீஇத்தவஞ்செயு
முதங்கரையடுத்தனனுணமையீதெனக்
கதங்கடிந்துயர்தவங்கருதுபாற்கரன். (௪)

தவம்பொலியுதங்கர்தந்தாள்பணிந்துபல்
பவந்தபுதலங்களுட்பான்மைமிக்கதாய்
நவம்பொலிவடிவமுங்கடந்தம்பர
சிவம்பொலிதலமெதுசெப்புவாயென. (ரு)

எதுகுறித்திதுவினாயினையென்றம்முனி
கதுமெனக்கேட்டலுங்கலந்தசன்மனோ
யதுதபுத்துயர்கதியடைதல்வேட்டனன்
முதுதவத்திறலினாய்மொழிதியென்றனன். (௬)

என்றலுமுறுவலித்திதயத்தெண்ணுபு
நன்றமைமுத்திநீபெறநயப்பையே
லன்றல்செய்கற்பத்துமழிவிலாத்தல
மொன்றதுநாகைக்காரோணமென்பதே. (௭)

அத்தலத்தடைந்துபுண்டரீகனாய்தவ
வுத்தமப்பெருமையாலும்பர்தம்பிரான்
வித்தகமேனியின்மெய்யொடுங்கலந்
தெத்தவத்தருமுறுவின்பமெய்தினான். (௮)

இன்னுமத்தலத்திடையிருந்தவம்புரிந்
துன்னுமொண்முத்தியையுற்றுளார்பலர்
துன்னுபன்னோய்களுந்தொலைத்துளார்பலர்
மன்னுபல்வரம்பெறுமாண்புற்றார்பலர். (௯)

ஆயவத்தலத்திடையமரர்தம்பிரான்
மேயவர்க்கெண்ணமையினவிளைக்கும்பேரருள்
பாயபஃறலங்களும்பரவவெய்துமா
தாயமத்தலங்கணினைப்பிற்சாருமே. (௧௦)

அன்னமாத்தலத்தைநீயடைந்துதெய்வநீர்
முன்னமுள்ளனவெலாமுறையின்மூழ்குபு
சொன்னவானவரெலாந்துவன்றுமெய்ப்பசு
நன்னர்கொள்பாலுலைமகோதற்காட்டுபு. (௧௧)

பூசைசெய்தமர்வையேற்புரிந்தமுத்தியோ
டாசையுள்ளனவெலாமடையலாமென
வோசைகொண்மாதவத்துதங்கள்கூறலு
மாசையில்பாற்கரன்வணங்கியோதுவான். (௧௨)

வானவர்யாவரும்வந்தியுடம்புள
தானதுபசுவெனவையகூறினை
மேனகுமமரரொவ்விதம்பொருந்துவர்
நானறிந்திறநவிலெனநவிற்றுவான். (௧௩)

நிலையுயிர்சரவுயிரிரண்டினீள்புகழ்க்
கலைபுகல்கங்கைமுற்கணக்கிறீர்த்தமு
மலைவில்சேதாமருப்பமைதுணித்தலை
மலைவறவமர்தருமயக்கில்கேள்வியாய். (௧௪)

பாட்டளிமுரனறும்பங்கயத்தனுந்
தோட்டலர்த்திருமகடுதைந்தமார்பனும்
வாட்டமில்குடம்புரைசெருத்தன்மற்றதன்
கோட்டடியமர்குவர்குணத்தின்மிக்குளாய், (௧௫)

வரத்துயர்சிவபிரான்மாண்பிற்கேற்பவான்
சிரத்திடையமருவன்செறிந்தயாவையும்
புரத்தல்செயெம்பெருமாட்டிபொங்குமா
தரத்ததனுதனடுவிருப்படண்மையோய். (௧௬)

கொடுவலிச்சூருயிர்குடித்தவேற்பிரான்
படிமதனுசியினுனிபிற்பம்புவன்
விடுவளிநாசியுண்மேகவாகன
னுடுபலதேவருமுறைவரொள்ளியோய். (௧௭)

கந்தலிலாவிருகன்னநாப்பணே
சுந்தரத்தமர்வரச்சுவினிதேவர்கள்
சந்தமார்நயனமோரிரண்டிற்றங்குவா
ரந்தரத்தியங்கிருசுடருமண்ணலே. (௧௮)

வளியெழுங்கடவுள்பன்மருவிவாழ்குவன
மிளிர்தருதாலுவில்வருணன்மேவுவன
களிகொளுங்காரமார்கவின்றகொஞ்சிடைத்
தெளிகலைமகளுறுஞ்சிறந்தகேள்வியாய். (௧௯)

மறலியுமியக்கரும்வயங்குகண்டத்தி
னுறல்கெழுகண்டையினுறறுவாழ்குவர்
தறைபுகழுதயவத்தமனசந்திகட்
கிறையவருதட்டிறவிருப்பரோற்றத்தாய். (௨௦)

வானவர்க்கிறையவன்வயங்குகண்டத்தி
னானல்லிமிலிடையருக்கதேவர்க
ளீனமின்மார்பகத்தியங்குசாத்தியர்
மானமார்தரவென்றும்வாழ்வர்மாண்பினோய். (௨௧)

ஈரிருகாலினுங்காலிருக்குமேற்
சார்முழந்தாண்மருத்துவர்கடங்குவ
ரோருநாற்காற்குளம்புறறுனித்தலை
யாருவர்நாகர்களறிவின்மிக்குளாய், (௨௨)

கலஞ்செய்கந்தருவரக்குளம்பினுப்பனு
மிலங்கரம்பையர்குளம்பிசைந்தமேற்சனும்
வலம்புனையுருத்திரர்வெரிநம்வாழ்வரா
லலந்தருபிரானடிக்கண்புவைத்தளாய். (௨௩)

சந்தகடோறுமெண்வசுக்கடங்குவார்
நந்தனைப்பலகையிற்பிதிரர்நண்ணுவார்
முந்தெழுமாதரும்யோனிமுற்றுவா
ரந்தமில்பிரான்புகழுறையுஞாயிறாய். (உ௪)

திருமகளாயனத்திற்சேர்ந்துவாழ்குவன்
மருவடிவாலினுக்கேசர்வைகுவர்
பொருவில்வாலுரோமத்திறபொருநரும்வெங்கதிர்
வெருவுமவெம்பவத்தொடாறுக்குமேதகாய். (உ௫)

திரையெறிகங்கைகோசலத்திற்சேருவள்
புரைதபுயமுனைகோமயம்பொருந்திடும்
வரைபெருமாதவர்பலரும்வைகுவார்
கரைமயிரனைத்திலுங்கலையுணர்ந்துளாய். (உ௬)

வாரிசூழ்புவிமகள்வயிற்றில்வைகுவன்
சூரியான்கடலெலாமுலையின்மேவிடு
ம்மாருதவ்வயிற்றிடையுற்றுவாழ்தருங்
காருகபத்தியக்கனனமெய்யன்பினோய். (உ௭)

மோகமாமிதயத்துமுயங்கிவாழ்தரு
மாகவனீயந்தக்கணாக்கினியநா
னேகமாமுகத்துறவிருக்குநாடொறும்
போகவாசையில்வெறுப்பமைத்தபுந்தியாய். (உ௮)

என்புகடோறுநன்கிரையைந்துவாழ்வன
வன்புறுமகத்தொழிலனைத்துமெய்முழு
தின்புறப்பனைத்தினுமியைந்துவாழ்குவர்
நனபுலக்கற்புயர்நங்கைமாரெலாம். (உ௯)

இத்தருமாக்களையியக்கவேண்டிடி
னுத்தமப்பலாசகோலொன்றுகைக்கொடு
மெத்தெனமென்மெலவெறிதல்வேண்டுமால்
வித்தகவிரத்தியின்மேன்மைமேயினாய். (௩௰)

முனிவருமகவிடைமுயன்றுசெய்ததிற்
புனிதமிக்குறநனிபொருந்தியாவயிற்
கனிவுறப்புருத்தியொண்கவின்புல்லாதிய
வினிதுறவூட்டுதலியையுமென்பவே. (௩௧)

தகைதருமாக்களைத்தவாதவாசனைப்
புகையொளிர்சுடர்முதற்பொருத்திப்பூசிப்போர்
பகைதவிர்போகங்கள்பல்லதுய்த்துப்பி
னகைகெழுகயிலையேநண்ணிவாழ்வரால். (௩௨)

புண்ணியவாக்களைப்பூசைசெய்தலோ
டண்ணியபால்கறந்தமலற்காட்டுவோர்
கண்ணியவாயுளுங்கற்பகீடுற
வெண்ணியவெண்ணியாங்கெய்திவாழ்வரே. (௩௩)

பால்கறந்தாட்டுமோர்பண்புமிக்கவர்
மால்கழிநாகைவாழ்வரதன்பொனமுடி
மேலுறவாட்டிடின்விளைதரும்பயன்
சாலுறுமுத்திகாண்சாற்றல்வேறெவன். (௩௪)

எனவுரைத்தத்தலமேகென்றோதினான்
மனநெகப்பாற்கரன்வணங்கிக்கைதொழு
தனகமெய்த்திருவினரவாவிச்சூழ்தரு
கனமதினாகையைக்கலத்தலெண்ணினான். (௩௫)

வழியமர்தீர்த்தங்களனைத்தும்வாஞ்சையிற்
பழிதபமூழ்குபுபஃறலங்களு
மிழிவறச்சென்றுசென்றேத்திப்போதுவான்
கொழிதலையுணர்ச்சியிற்கூர்ந்தபாற்கரன. (௩௬)

† நாகைவெண்டிரையெறிநரலைசூழ்திரு
நாகைபெங்குளத்தெனநயந்ததனபெயர்
‡ நாகையஞ்சலித்திடநவிலும் ० வேடக
னகையிலாயவென்றுன்னுநன்மனம். (௩௭)

இராப்பகனகைசாரெண்ணம்பூண்டவன்
பராக்கடியாதவப்பதியையெய்தினான
குராப்புனைகூந்தலக்கோதைபாலம
ரராப்பணியான்றிருவருள்விராவவே. (௩௮)

நாகையின்வளமெலாநயப்பநோக்கிமிக்
கோகையேமலிதரவுறுகணீங்கினான்
பாகைநேரின்மொழிபாகர்முத்திநன்
னகையேபுரிவொன்றறத்துணிந்துளான். (௩௯)

வானவதீர்த்தமேயாதிமற்றுள
வானபஃறீர்த்தமுமடைந்துமூழ்கினான்
ஞானயோகத்தவருளநயந்தமர்
பானலங்கண்டர்முன்பரவிச்சென்றனன். (௪0)

---

† நாகு-சங்கு, ‡ நாகையஞ்சலித்திடநவிலும்-கையஞ்சலித்திட, நாநவிலும் எனஎதிர் நிரனிறையாகக்கொள்க. ० வேடகனு-வேள்தகனுவெனப்பிரித்துப் பொருள்கொள்க.

அளவையாலளப்பருமரியசோதியைக்
களைவநீங்கினருளாங்கதிக்குநீதியைத்
தளவநேர்முறுவலாடயக்கும்பாதியை
யுளவையானனம்பெறுமொன்றைக்கண்ணுற்றான். (௬௧)

காண்டலுமன்புமீக்கிளைப்பக்காரிருண்
மாண்டதேயெனவிழிவாரிசோர்தரத்
தாண்டவம்புரிபதந்தழுவிப்பன்முறை
பூண்டனன்வணங்குதல்பொருமிநின்றனன். (௬௨)

எத்தனைதரந்தொழுமிருகைகூப்பிச்சூழ்ந்
தெத்தனைதரம்வருமிருகணீருக
வெத்தனைதரந்துதித்திடுங்கைகொட்டிநின்
றெத்தனைதரநடமியற்றுமென்சொல்கோ. (௬௩)

காணரும்பாமனைக்கண்டேனெனும்
பூணருந்திருவருள்பூண்டேனெனும்
வீணரும்பழிபவம்வீட்டினேனெனு
நாணரும்பெருங்கதிநண்ணினேனெனும். (௬௪)

இன்னணந்துதித்திரங்கிணையில்பாற்கரன்
முன்னமம்முனிவரன்மொழிகடைப்பிடித்
துன்னரும்பலபசுவொருங்குபூசித்து
நன்னலப்பால்கறந்தாட்டனாடினான். (௬௫)

ஒள்ளியகருணைக்காரோணநாதர்மேல்
வள்ளியபாற்கடல்வாரிமேகமே
நள்ளியபொழிந்தெனநாடுபாற்குட
மெள்ளியதிறனறவெடுத்தங்காட்டுவான். (௬௬)

வழிதரவழிதரமடையுடைக்குமன்
பொழிதரவிலாவளைசயூற்றுமிககெழுக்
கழிதரவினையெலாங்கனிவினாட்டினான்
மொழிதரநிறைந்தபாற்குடங்கண்முற்றுமே. (௬௭)

இந்தவண்ணம்பிறதலத்துமெய்தியன்
புந்தநன்காட்டினானொழுகுதேங்குழற்
கந்தரக்கருந்தடங்கண்ணினாளையுஞ்
சுந்தரத்தாட்டினான்றூயபால்கொடு. (௬௮)

பணியிதுபுரிவதுபார்த்துநாகைவா
ழணியரவோன்மகிழ்ந்தருளளித்திடப்
பிணிகெழுபவத்துயர்பெயர்த்தனாலெலாந்
துணிபரமுத்தியேதனைத்துற்றின்புற்றான். (௬௯)

பத்தியின் மிகப்பொலியாற்கரன்பெரு
முத்தியுற்றதுதெரிதரமொழிந்தனை
மத்திசெய்போர்வையானருளின்மித்திரன்
சித்தியுற்றதுமினிதெரியக்கூறுவாம். (௫௦)

பாற்கரப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௪௩ இ திருவிருத்தம் - உ௪௩௬.

## மித்திரப்படலம்.

தூயமுனிவரர்சூதமுனிவன்றுணைப்பதங்கைதொழுது
மேயமறைக்குலமித்திரன்கதைதெளிம்பியருளுகென
வாயபுராணமொருபதுனெட்டுமெரிறபுமாறுணர்ந்து
நேயமுறவடுத்தார்க்கருளுந்தநெடுந்தவனோதுவனால். (௧)

நீடுவளங்கொள்சவ்வீரநன்னாட்டிலாவுமறைக்குலத்தான்
கூடுபுகழினைமைந்துயர்கற்படகோத்திரத்துறபவித்தான்
பாடுபலலோர்களுமித்திரனென்றுபகருமோர்நாமமுளா
னாடுதிருவடிக்கன்புடையான்சொலருந்தவநூனசையுளான். (உ)

குலவுமொழுக்கமிகப்பெறவயர்கற்பகோத்திரத்துற்பவித்து
நிலவுபதுமவல்லிப்பெண்மாதைநிரம்பவதுவைசெயாக்
கலவுமகிழ்ச்சியினமேயவிரதியுங்காமனுமாவனொனறே
சொலவுவடபிறபலபோகமுநயப்பதத்துளக்கறவாழ்நருநாள். (௩)

அருந்தவஞ்செய்வதற்கெண்ணிப்பிதாவினனுமைஞ்கிடைத்தெழுந்து
பொருந்தவளங்கொடபோவனமேவிப்புகழ்மித்திரநாதன்று
டிருந்தவணங்கியெழுந்தருமாதவஞ்செய்தற்கிடஞ்சொலெனை
வருந்தலில்கண்டகமாநதிதீரமருவெனப்போக்கினனே. (௪)

கண்டகமாநதித்தீரமருங்கிலரிசறுசாலையமைத்
தெண்டகயாவையுமித்திரன்மேவிருந்துபொறியடக்கித்
தண்டகலாமதிசூடிபொற்பாதத்துணைமனத்தாட்பொலிய
வண்டகடாகம்வியப்பவருந்தவமாற்றியமர்தருநாள். (௫)

ஈன்றவன்மைந்தனைக்காணல்விரும்பியிருக்குநகரமொரீஇத்
தோன்றநதியும்பதியும்வரையுஞ்சுரமுங்கடந்துவிரு
யான்றமெலிவினருந்தவச்சாலையவனதிர்காண்டருமா
மான்றவிராநடுப்போதிலணைந்தனன்மைந்தனதுதெரியான். (௬)

துட்டமிருகமணைந்தெனவெண்ணித்துணுக்கென்றெழுந்திருந்தே [ன்
பட்டநெடுங்கதைகைக்கொண்டொளிநதொருபாற்சென்றுறைப்புடைத்தா
கட்டமடைந்துயிர்விட்டனன்வேதியன்கண்டுமிகக்கலங்கிக்
கெட்டமனத்தினன்செய்தனனென்றுகிலேசித்தலறிடுவான். (௭)

எந்தையிறந்தனேயென்செய்வல்யானென்றிரங்கியழுதிடுங்கா
லந்தையில்சுற்றுளமாதவர்கூடியடுத்ததகந்தெளிந்து
முந்தைவினையிதுமேற்செயுங்கன்மமுடித்தியப்பாவெனலுஞ்
சிந்தைவெருவியமித்திரன்றந்தைக்குச்செய்வனசெய்தொழிந்தான். (அ)

கேடிலபரக்கிரியை * புரிந்துங்கிலேசித்தமர்தருநாள்
வாடில்பிரமக்கொலைப்பழிவந்துவளைப்பமதிமயங்கிக்
கூடினின்பாமென்றவாவிமிலேச்சர்குலப்பெணுடன்கலந்து
நாடிலஃதொக்குமின்பமென்னென்றுநயாந்துருலாவினனால். (௯)

இன்னபுரிந்துழனுளிலறிந்தவரியாருமிழித்திடலாற்
சொன்னகிருட்டிணமாநதித்தீரந்துனைந்துபுகுந்தாங்கு
முன்னமமர்ந்துதவம்புரியுநதிறன்முற்கலனைப்பணியாப்
பின்னமிறன்பழியாவுமெடுத்துறப்பேசினன்மித்திரனே. (௧௦)

முற்கலன்மித்திரனேதியவார்த்தைமுழுவதுங்கேட்டருளிப்
பொற்கலனென்பணியாக்கிமகிழ்ந்தமர்புண்ணியகாரோணந்
திற்கலனிர்கண்ணிறைத்திடமேவியிறைஞ்சிவணங்குவையேற்
† புற்கலனாகியநீயுய்யுமாறுபுரிந்தருள்செய்திடுமால். (௧௧)

என்றுநவின்றுவிடுத்திடமீட்டுமிறைஞ்சுபுகாரோணஞ்
சென்றுசுதையெழுதிர்த்தமுழுகித்திருந்தவெண்ணீறணிந்து
கன்றுபொலிகைக்கருந்தடங்கண்ணிகலந்தருள்காரோணன்
றன்றுணைப்பாதமிறைஞ்சிமுனின்றுதகவிற்றுதித்திடுவான். (௧௨)

நாரணனாதியர்காணரியாய்தொண்டுநண்ணுமவர்க்கெளியா
யாரணமாகமமியாவுமியம்பியனைத்துமிரும்புரப்பாய்
காரணமூவகைக்காலமுனையாவுங்கடந்தசிதானந்த
பூரணநின்னையடுத்தனனென்னைப்புரந்தருள்வாயெனலும். (௧௩)

வள்ளல்விரைந்துவெளிப்படவந்துமரீஇயநின்பாதகமா
மள்ளலனைத்துங்கழீஇயினமுத்தியளித்தனமென்றருள
வுள்ளலினியெவனென்றுவணங்கியுவப்புறுமித்திரனு
மெள்ளலிலாத்தன்னிடம்புக்குவாழ்ந்துபினெய்தினனமுத்தியுமே. (௧௪)

பத்திரன்மூர்த்துவெளிப்படுசெங்கட்பராபரன்மாயவனே
ரத்திரன்கேத்திராசவரத்தையடைந்துபணிந்தெழுநன
மித்திரனுற்றதுரைத்தனம்வல்லவிசித்திரமெய்யுறையான்
† நத்திரன்மேவவடைந்துபணிந்தநலநதெரியப்புகல்வாம். (௧௫)

மித்திரப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௪௪ இ திருவிருத்தம் - ௨௧௫௧.

---

* அபரக்கிரியை - உத்தரக்கிரியை. † புற்கலன் - ஆன்மா. † நத்திரன் - ந - திரன் எனப்பிரித்து, சிறப்புப்பொருந்திய நிலைமையன் எனப் பொருள்கொள்க.

# விசித்திரகவசப்படலம்.

உடல்வலிமலமாசற்றார்சூதனையுவந்துபோற்றிக்
கடல்பணிந்தேத்துநாகைக்காரோணத்தலத்தின்மேவி
மிடல்கெழுகழற்காற்சோழன்விசித்திரகவசன்பூசித்
திடறெரிதரச்சொலென்னவியம்புமச்சூதமேலோன். (க)

இருள்வலிசவட்டும்வெய்யோனிருங்குலத்துதித்தமேலோன்
றெருள்படுகலைகளெல்லாமயக்கறத்தேர்ந்தசெல்வன்
பொருள்பரசிவனேயல்லாலிலையெனும்புந்தியாளன்
வெருள்கடிந்தொளிரும்வேலான்விசித்திரகவசனென்பான். (உ)

ஒன்னலரடங்கவென்றுபார்முழுதொருகோலோச்சி
நன்னகரைந்துளொன்றாங்கோழிமாநகரமேவிப்
பன்னருமதியமைச்சர்புரோகிதர்பலருஞ்சூழத்
தன்னரசாட்சிசெய்வான்றவாப்பெரும்புகழின்மிக்கான். (ங)

அரசுசெய்தமருநாளிலண்ணலாரருளினூலும்
விரசுபஃறலங்கட்குள்ளமான்மியம்விளுவல்செய்யப்
பரசுபல்புலமையாளர்தனித்தனிபகரக்கேட்டு
முரசுகண்படாதொலிக்குமுன்றிலானுவகைபூப்பான். (ச)

இந்தநன்னாளுளோர்நாளிந்திரனாதியோருஞ்
சந்தமென்மலரிட்டேத்துங்காரோணத்தலச்சீர்கேட்டுப்
பந்தமுற்றொழித்துவீடுபாலிக்குமனையதானத்
தந்தமில்பெருமைதேர்ந்துதரிசிக்குமார்வம்பூண்டான். (ரு)

சுற்றமும்பிறவுஞ்சூழத்தன்னலர்க்கரியேறன்ன
கொற்றவனுறையூர்நீங்கியெதிர்ப்படுதலங்கும்பிட்டுக்
கற்றவர்புகழுநாகைக்காயாரோகணத்துட்புக்கு
நற்றவம்பயக்குந்தெய்வதீர்த்தத்தினயந்துமூழ்கி. (சு)

நீறுகண்மணிபுனைந்துநிலவுகைகூப்பிச்சென்று
பேறுசெய்கோயின்முன்னர்ப்பிறங்குமட்டாங்கமாக
வாறுகொளங்கமாகவைந்தெனுமங்கமாகத்
தேறுபஃறாங்கும்பிட்டுத்திருந்தவுள்புக்கானன்றே, (எ)

புக்கவன்றிருக்காரோணப்புண்ணியலிங்கங்கண்டு
நெக்கசிந்தையனாய்க்கண்ணீர்நிலங்களைத்தோடநின்றான்
பக்கனின்றாருமந்தப்படிமனங்கரையநின்றார்
தக்கவக்காலைவிண்ணோர்சதமகன்போற்றவந்தான். (அ)

வந்தவனுருவமாறிவாயிலுட்புகுதலோடுஞ்
சுந்தரவளவன்காவற்சுற்றத்தாரிறைவன்போற்றி
முந்தவங்கமர்தலானீபுகுவதுமுறையன்றென்றா
ரந்தவெம்மொழிகேட்டுள்ளமஞ்சினான்போலகன்று. (கூ)

அத்தலக்குணபாலெய்தியமையவோரிலிங்கந்தாபித்
தத்தமம்பொலியுந்தீர்த்தமொன்றுகண்டாடிப்போற்றிச்
சித்தமிக்குருகியன்பிற்செங்கரங்குவிசெய்தேத்தப்
புத்தமுதனையாள்பாகப்புண்ணியன்காட்சிநல்கி. (௰)

வேண்டுவதென்னையென்றுவினவலும்விருப்பினென்னை
யாண்டவிவ்விலிங்கதீர்த்தமமையுமெனாதுமத்தொன்றாய்
மாண்டசக்கரப்பேர்பூண்டுவயங்குதல்வேண்டுமென்றிற்
றூண்டவம்புரிவோய்சோமவாரத்திற்சார்ந்துமூழ்கி. (௧௧)

கண்டவொண்ணமெல்லாங்கரிசறவுடையவேண்டுந்
தொண்டனேனுங்குநின்னைத்தொழவவாய்ப்புக்ககாலை
மண்டலம்புரப்பானுமோர்மனிதனுற்றகைக்கப்போந்தேன்
கொண்டவக்குறைதீர்சேவைகொடுக்கவும்வேண்டுமென்றான். (௧௨)

எமைத்தொழப்புரிவார்தம்முளிமையவர்மனிதரொன்ன
வமைத்ததோர்பேதமில்லையன்பினொவோவன்னார்
தமைக்களிப்புறுத்தலேயித்தலத்தியல்பென்றுசாற்றிக்
கமலத்தரீவருதியென்றுகரந்தனன்கருணைமூர்த்தி. (௧௩)

வளவன்முன்றோன்றிநம்மைத்தொழுதற்குமகவான்வந்தான்
களவினின்காவலாளனறைகந்திடக்கழிந்துபோயோர்
பளகறுமிலிங்கந்தாபித்தருச்சனைபண்ணுநின்றா
னிளகவற்கருளிச்செய்வானெயதுவமினனேயென்றான். (௧௪)

அதிசயமாய்தென்றூர்ங்கண்ணியனுங்குச்சென்று
துதிமகபதிபூசித்தசுந்தரவிலிங்கங்காணக்
கொதிகெழுகுலிசவேலான்கூடிற்றலமையமென்று
துதிசெய்காரோணலிங்கஞ்சேவித்துமகிழ்ந்துபோனான். (௧௫)

சக்கரதீர்த்தமூழ்கித்தயங்குவெள்ளிறைபூசிச்
சக்கரலிங்கங்கண்டுதாழ்ந்துபன்முறைசெங்காவஞ்
சக்கரவிலைச்சூழ்ந்துதவாதவன்போங்குமாவஞ்
சக்கரவொழிந்தசோழன்றாழ்ந்துபேரின்பமுற்றான். (௧௬)

பாகசாதனற்குச்சேவைபாலித்துளங்கொண்டு
நாகமாநகர்க்காரோணநாயனார்புரிந்தவாடல்
+ தோகமேவாமலோங்கச்சோழர்தம்பெருமானுண்ணி
மோகநீங்காளுயந்தமுழுத்தலத்தமர்ந்தான்பன்னாள். (௧௭)

குலமணிபதித்தசெம்பொற்கோபுரம்பிரகாரங்க
ணலமலிவிமானமன்றநங்கருந்தடங்கட்செல்வி
நிலவுறுகோயின்மற்றியாவையுநிரம்பச்செய்து
புலனமைதிருவிழாவும்பொற்புறநடத்தினானால். (௧௮)

---

+ தோகம் - சிறுமை.

இன்னணம்வளவர்கோமானிலங்குகாரோணநாதன்
பன்னரும்பணிகள்செய்துபற்பனுளமர்ந்துபோற்றித்
தன்னயிலருளும்பெற்றுத்தன்னகரடைந்துவாழ்ந்து
பின்னர்மற்றவன்றுணீழல்பெற்றின்பந்துய்த்தானன்றே. (கக)

மேதகுநுணைத்தான்மிக்கவிசித்திரகவசனென்பான்
மாதர்வண்காரோணத்துவந்துபூசித்ததன்மை
போதரவெடுத்துச்சொற்றும்பொலிவிரோதப்பேர்மன்னன்
றீதமைசாபந்தீர்ந்தசெய்தியும்புகல்வாமன்றே. (உ0)

விசித்திரகவசப்படலம் முற்றிற்று.

ஆ படலம் சநு இ திருவிருத்தம்-உகளக.

## விரோதன்சாபந்தீர்ந்தபடலம்.

பஞ்சமலக்கொத்தறுத்துப்பாருதபரபோகம்
வஞ்சமறத்திளைத்துவக்குமாதவர்சூதகைவணங்கி
நஞ்சமுதுகொண்டபிரானுறைகைக்காரோணத்துத்
தஞ்சவிரோதனடைந்ததோதுகெனவவன்சாற்றும். (க)

ஆன்றபலவளமலியுமானர்த்ததேசத்தான்
சான்றமதிக்குலத்துதித்தான்றண்ணியவெண்கவிகையினன்
றோன்றவுலகெங்குமியிர்தோலாதவாணையிரு
னேன்றபெரும்படைக்கடலானிசைக்கும்விரோதனென்பான். (உ)

வேட்டவிளைகுறித்தெழுந்துவேடுவர்கள்சூழ்வரப்போய்க்
காட்டகத்தினுட்புகுந்துகையமர்கார்முகங்குனித்து
வாட்டமறக்கன்றினுக்குப்பாலூட்டுமோன்பிணைமேற்
கோட்டமனத்தொடுவிடுத்தானகோலொன்றுகொற்றவனே. (௩)

விட்டகணையுடலுளைப்பமெய்நடுங்கிவீழ்மரிணங்
குட்டமெனுங்கொடும்பிணியைக்கொறறவநீயடையென்ற
தொட்டவஃதுணரரசன்வேட்டவிளையுரிமையுளோ
னிட்டமறச்சபித்ததெவனென்னமான்பிணைவியம்பும். (௪)

நீதிநூன்முழுதுணர்ந்தநிருபரானவர்வனத்து
மோதியூறிழைத்தலைக்குமுரண்விலங்குகடிவதலா
லேதியாற்பிறிதொன்றுற்பிணவுகளையிடர்செய்யா
ராதிநாயகனுரைத்தவறமன்றுலெனவரசே. (௫)

கன்றுபசிதபச்சுரந்தபாலூட்டுங்காலத்து
மொன்றுமகிழ்ச்சியிற்புணருங்காலத்துமொள்ளியநீர்
நன்றுநசையறக்குடிக்குங்காலத்துநண்ணியபேர்
பொன்றுதலிலாதினிதுபொருமையுயிர்க்குங்காலத்தும். (௬)

உறங்குமொருகாலத்துமுற்றவலியமையாது
பிறங்குமழப்பருவத்திற்பெயராதகாலத்துங்
கறங்குமணமுடையாருங்கடிந்தொழிக்குந்திறங்குறியார்
மறங்குலவிமேலோங்குவகையுணர்ந்தெவ்விலங்கினையும். (௭)

முறையுணராவேடுவரின்முயன்றென்மேற்கணைதொடுத்தா
யிறைவவதனாற்சபித்தேனென்றுமாண்டதாவ்வி
னிறைதருபல்லுயிர்மொழியுநிரம்பவுணர்தருமரசன்
குறைவிலதன்றுயரமெலாங்குறித்துணர்ந்துகவலுற்றான். ந் (௮)

மிக்கதுயருறுமரசன்மெய்முழுதுமப்பொழுதே
தக்கதிதுவன்றென்னும்வெண்குட்டஞ்சார்ந்தன்று
தொக்ககுலமுதல்போலத்தோன்றினேன்யானென்று
பக்கவுளத்தினன்சோர்ந்துபதறிநிலமிசைவீழ்ந்தான். (௯)

வீழ்ந்தவனையமைச்சர்புரோகிதரெடுத்துமெய்துடைத்துப்
போழ்ந்தகவலையனுகச்சின்மொழிகள்புகன்றிடலும்
வாழ்ந்தநகரிணையடைந்துமாதேவனருட்கடலி
னாழ்ந்தகுரவன்சதானந்தனடியிணைதொழுது. (௧௦)

எந்தையிதற்கொருகழுவாயியம்புதியாலெனவேண்ட
நிந்தையிலம்முனிவரனுநெடுநேரமுளத்தெண்ணிச்
சிந்தைமகிழ்திருநாகைக்காரோணஞ்சேர்ந்திறைஞ்சின்
முந்தைவினையொடுபிணியுமுருங்குமாலென மொழிந்தான். (௧௧)

முனிவனுரைதலைக்கொண்டுமொய்த்தபெருவகையனாய்ப்
புனிதமிகுதுணைவரொடுங்காரோணத்தலம்புகுந்து
பனிபடுவானவதீர்த்தம்படிந்தனனப்போதத்தே
யினியதலாவெண்குட்டமிரிந்ததுபண்டுருப்பெற்றான். (௧௨)

பண்டையுருப்பொலிவெய்தும்பார்த்திவன்மிக்குளமகிழ்ந்து
தொண்டைவிடாதவர்பூசுஞ்சுந்தரவெண்ணீறணிந்தே
யண்டைமலரவனெடுமாலின்னுநேடியுங்காணுக்
கண்டைவிடைக்காரோணக்கண்ணுதலோன்முன்சென்றான். (௧௩)

காரோணப்பெருமானைக்கண்டிறைஞ்சியருள்பெற்றுப்
பாரோதுங்கருந்தடங்கட்பராபரைபாதமும்போற்றி
நீரோதப்புவிவியப்பநெடும்பணிபன்னாட்புரிந்து
சீரோவாத்தன்றேயஞ்சென்றுவாழ்ந்தினிதிருந்தான். (௧௪)

ஆயவிரேதனென்னுமரசுநாகையிற்புகுந்து
மேயவுடற்பிணிதவிர்ந்தவிதந்தெரியவெடுத்துரைத்தாம்
பாயபுகழ்ச்சயதுங்கன்பரவுபுகைபெற்றவருட்
டேயகதைவிளங்கும்வகையினியெடுத்துச்சொல்லுவாம். (௧௫)

விரேதன்சாபந்தீர்ந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௪௯ இ திருவிருத்தம்-௨௧௮௯.

# சயதுங்கப்படலம்

கருமவேலைக்களைந்திடுமைமிசத்
துருமம்வாழ்பவர்குதனைப்போற்றுபு
தருமமோருஞ்சயதுங்கன்காதையைப்
பெருமவோதெனவன்னவன்பேசுவான். (௧)

ஏட்டைதீர்ந்தகலிங்கமெனும்பெயர்
நாட்டையாளுநராதிபனெஞ்சகத்
தோட்டையோவுசயதுங்கனுற்றமா
வேட்டையாடினன்கானம்விராவியே. (௨)

புலிமடங்கல்புகர்முகமாதிய
வலிவிலங்கறக்கைச்சிலைவாங்குபு
மெலிவில்பல்கணைதூண்டிவெயின்முதிர்
பொலிவின்வெம்பசிபூண்டுவருந்தினன். (௩)

வினையகன்றவயிற்றெழுவெம்பசி
யினையொழித்தற்கிகற்பரிதூண்டுபு
துனையவன்செதிர்தோன்றிடுஞ்சூழலொன்
றனைநிகர்க்குமரீசியமரிடம். (௪)

பெருவளத்துப்பிறங்குதல்கண்டத
னொருபுறத்துப்படையொடுமுற்றனன்
மருவுமற்றதன்வண்ணமெலாந்தெரி
தரும்விருப்பினனெங்குஞ்சரித்தனன். (௫)

நல்லவாயநரந்தமோர்பாலெலாஞ்
சொல்லவாயவொண்சூதமோர்பாலெலாம்
பல்லவாயபனசமோர்பாலெலாஞ்
செல்லவாமுடித்தென்னையோர்பாலெலாம். (௬)

தலைவிரிந்தவரம்பையொர்சாரெலாந்
தொலைவிலாதகர்ச்சூரமொர்சாரெலா
நிலைகொண்மாதுளைநீர்மையோர்சாரெலாம்
விலைசெயாவெலுமிச்சையோர்சாரெலாம். (௭)

நறியதீஞ்சுவைநாவலோர்கண்ணெலாஞ்
செறியவாமுந்திரிகையோர்கண்ணெலாம்
வெறியவாவுவிளவொருகண்ணெலா
மறுவிலாத்தமரம்மொருகண்ணெலாம். (௮)

இவைமுன்னாயவிருங்கனிமல்கிய
நவையிலாவளங்கண்டுநராபதி
யுவகைநமக்குணவாகுமென்றுன்னியே
செவையிலாக்கொடுஞ்செய்கைசெய்தானரோ. (௯)

உள்ளயாவுமொருங்குகவெருபு
தள்ளலாவகைதாளுண்டதன்றியும்
விள்ளலாத்தன்றமரும்விழைந்தனுக்
கொள்ளல்கினன்றீவினைக்கோட்பட்டான், (௧0)

மாதவத்துமரீசிமுனிவரன்
போதலர்ந்ததண்பூம்புனலாடிபு
வேதநான்கும்விளம்புமருட்குறி
மேதகும்பெரும்பூசைவிரும்பினான். (௧௧)

பூசைசெய்யப்புகுந்தவக்காலையின்
மாசைநீங்கியவண்கனியாவுமாங்
காசையோடுமமைத்திடக்கண்டிலா
ரோசைமாமுனியேவலுனுற்றவார், (௧௨)

தம்மைநோக்கியென்றந்திலிர்நீமொன
வெம்மையோடவர்வேந்தனொருவன்வந்
தம்மைபாகனுக்காவவென்றெண்ணிலான்
செம்மைதீரக்கவர்ந்துநின்றானென்றார். (௧௩)

என்றவார்த்தையிருசெவியேறலுங்
கொன்றதன்னவெங்கோபங்குடிகொள
வொன்றநெஞ்சமூளைந்துகவன்றன
னின்றிழிந்ததுகொல்லென்றவமென்பான். (௧௪)

புரம்பொடித்தபுராணனுக்காட்டவு
நிரம்புமாறெடுத்தூட்டவுநேர்வைத்த
வரம்பிலாக்கனிவெளவிநுகர்வதோர்
பரம்புதீவினைப்பார்த்திவன்றானனு, (௧௫)

சுடுசினந்தலைக்கொண்டுதுடிதுடித்
தடுசினக்களிற்றன்னையறக்குறைந்
திடுபலிக்கிவர்கென்னச்சபித்தனன்
கடுவெயிற்றினின்றுங்கழன்றலென, (௧௬)

சொற்றசாபந்தனைதரப்பற்றது
மற்றகையினனுய்ப்புவியாள்பவ
னுற்றசெல்வமுமோவக்கவன்றனன்
கற்றமார்ந்தர்களாந்தனருண்மையே, (௧௭)

கேட்டபோதுகிலேசத்தழுழ்கியுள்
வாட்டமேவமரீசிமுனிவரன்
றட்டலைத்தலைசாரப்பணிந்தனன்
கோட்டமேதமிலாக்குணக்கொண்டலே. (௧௮)

அடியனேன்பிழையத்தனையும்பொறுத்
தொடிவிலாவருளுதியநல்கெனக்
கடிதினேர்ந்துகதறுமரசற்கு
முடியவேயார்ந்தமுனிவனிரங்கியே (௧௯)

ஆண்டநாயகற்காருக்கணிகலர்ந்
தீண்டநீசெய்யிரும்பிழைக்குத்தக
மாண்டசாபம்வருத்திலநின்னிடைப்
பூண்டபேரருளாற்புகனருமரோ. (௨௦)

இன்றுநீவந்தினேர்ந்துறவேண்டலா
லொன்றுநாகைக்காரோணத்திலுட்புகூஉ
நன்றுசால்சுரதீர்த்தநன்காடிடிற்
கன்றுதீரிருகையும்வளருமால். (௨௧)

பின்னராதிபுராணனைப்பேணுபு
நன்னரோத்திடினந்தவறுமைபோ
மென்னசெல்வமுமெய்துவையத்தல
மன்னலான்முத்திமாண்பும்பெறுவையால். (௨௨)

போதியென்றுபுகறலுந்தாழ்ந்தெழுந்
தேதிவேந்தன்சின்னாளில்வந்தெய்தினா
னாதிநாதரமர்திருநாகையிற்
சோதியாரருளென்னுந்துணிபுற. (௨௩)

தேவதீர்த்தத்துச்சென்றுபடிந்தனன்
பாவமாசறப்பண்டையிற்கைகள்பெற்
றுவவென்றிறம்பூதுகண்டாருற
மேவத்தானும்வியப்புற்றெழுந்தனன். (௨௪)

அருள்விராவுறவாதிபுராணர்தம்
பொருள்விராவுபொற்பாதமும்போற்றினான்
மருள்விராவுவறுமைசிதைதரத்
தெருள்விராவுதிருவரம்பெற்றனன். (௨௫)

கருந்தடங்கட்பிராட்டிகமலமொத்
திருந்தபாதமுமேத்தியிறைஞ்சுபு
திருந்தமற்றத்தலங்களுஞ்சேவித்துப்
பொருந்தவேண்டும்பணியும்புரிந்தனன். (௨௬)

மிக்கமேன்மைவிடைபெற்றுப்பல்வளந்
தொக்கதன்பதிதுன்னுபுவாழ்ந்துபின்
பக்கம்பாரிடம்பாடநின்றாடுவோர்
நக்கசேவடிநண்ணியின்புற்றனன். (௨௭)

அற்றமோவவடைந்தசயதுங்கன்
பெற்றபேறுபிறங்கவுரைத்தனங்
கற்றதன்மையில்காளகண்டன்புகுந்
துற்றதன்மையுமோதிடுவாமரோ. (உஅ)

சயதுங்கப்படலம் முற்றிற்று.

ஆகப் படலம் ௪௭ இ திருவிருத்தம்-உஉக௪.

## காளகண்டப்படலம்.

முனிவரர்சூதமுனியைவணங்கிக்
கனிவொடுகாளகண்டனடைந்து
புனிதனபாதம்போற்றியகாதை
யினிதருளென்னவிசைத்திடுமன்றூன். (க)

கரிசில்விருத்தகங்கையந்திரத்
திரிவில்பஞ்சானமென்னுமோரூரிற்
பரிவொடுவாழ்வான்பார்ப்பனமாக்க
ளுரியகுலத்தானுத்தமமிக்கான். (உ)

விட்டுணுசாமியெனும்பெயர்மேயான்
கட்டுறுமில்லாள்காமர்குணத்தா
ளொட்டுறுசாறுமதிப்பெயருள்ளாண்
முட்டுதலோவிமுயங்குபுவாழ்நாள். (ங)

கொடுவினைசெய்யுங்கூற்றினுந்தீமை
யொடுவருதுட்டனொருவனுதித்தான்
கடுகுபுகாளகண்டனெனும்பே
ரிடுபுவளர்த்தாரீன்றவர்மாதோ. (௪)

ஒழிவறவுண்பதுடுப்பதையன்றி
யழிவறுமத்தியயனமிலாமற்
பழிபடுநாள்கள்பற்பலசெல்லக்
கழிதுயர்பூண்டுதந்தைகனன்றுன். (ரு)

அருமறையத்தியயனஞ்செயாது
முருடரின்வாழ்வாய்முழுமகவென்று
வொருகதைகொண்டுபுடைக்கவுடன்று
பருவலிமைந்தன்பற்றியறைந்தான். (சு)

அறையுறலோடுமாவிரடுங்கத்
தறையிசைவீழ்ந்துதாதையிறந்தான்
கறைகெழுகாளகண்டனுமந்த
வுறையுடனஞ்சேயுழிதரலுற்றுன். (எ)

கொலைப்பழிபூண்டுகூவெனவாய்விட்
டலைப்புறுநெஞ்சோடோரிடமேனு
நிலைப்பதிலாதுநீசருமெள்ளும்
புலைத்தொழில்செய்தான்பொருமியுழன்றான். (௮)

உழிதருநாளிலுத்தமநன்னூல்
வழியொழுகுஞ்சீர்வசிட்டனிருக்கு
மழிவருமாச்சிரமமடைந்தான்
கழிதுயர்க்காளகண்டனென்பானே. (௯)

பரவுவசிட்டன்பாதம்வணங்கி
விரவுமென்பாவம்விடுபடுமாறோர்
புரவுசெய்கழுவாய்புகலுதியென்று
னுரவுகொளையனோர்ந்தருள்செய்வான். (௧௦)

சூரதனெனும்பேர்த்தோன்றலொருத்தன்
வரமருள்காயாரோகணமன்னிக்
கரவறநூற்றெட்டுத்தரங்காம
ருரவுறச்சூழ்வானுற்றவந்நாள்வாய். (௧௧)

மறையவர்சில்லோர்மற்றதுகண்டி
குறைவறநீயிவ்வாறுசெய்கொள்கை
முறைதெரியென்னமுனிவிலனாகிக்
கறையறவன்னோர்தெரிதரக்கரைவான். (௧௨)

முற்சனனத்துழுயங்கொருகிளியா
முற்பவமுற்றேனுற்றவந்நாளி
லொற்கமிலிந்தவூர்வலஞ்செய்தேன்
சிற்சுகமூர்த்திதிருவருள்செய்தான். (௧௩)

அந்தவிசேடத்தாலரசாகி
யிந்தமண்ணாள்வேனின்னமுஞ்சூழிற்
பந்தமில்வீடுபாலிக்குமென்று
நந்தவுணர்ந்துநானிதுசெய்வேன். (௧௪)

என்றனன்கேட்டவிருபிறப்பாளர்
நன்றிதுவென்றுநாடிவியந்தே
யொன்றமற்றன்னோரொடுறச்சூழ்ந்தார்
கன்றலின்முத்திகைகொடுவாழ்ந்தார். (௧௫)

ஆதலினீயுமத்தலமெய்திக்
காதலிற்சூழிற்கழிதரும்பாவ
மேதமிலாப்பேரின்பமும்வாய்க்கும்
போதருகென்றான்புண்ணியமேலோன். (௧௬)

அனையவகிட்டனடிமலர்போற்றித்
துனையவெழுந்துநாயகாரோணப்
புனைநகர்நோக்கிப்போயினனம்மா
கனைபெரும்பாவங்காற்றல்குறித்தான். (௧௭)

நாகையடைந்துநன்குபணிந்தே
யோகையினூற்றெட்டுத்தானஞ்சூழ்ந்தா
னோகைசெய்யன்னுளித்தொழிலாற்ற
வாகையடைந்தான்பாதகமாய்த்து. (௧௮)

பாதகமாய்ந்துபண்புணர்ஞான
மேதகமேவிவேதமுழங்கும்
போதகத்தெய்வப்பூம்புனலாடி
மாதகவாம்வெண்ணீறுவயக்கி. (௧௯)

ஆதிபுராணத்தண்ணலையேத்தி
யோதியுணர்ந்தார்க்குறிடுமூறு
காதியவெங்கள்கருந்தடங்கண்ணாள்
சோதிகொடானந்தொழுதுதுதித்தான். (௨0)

ஆயுளினகாறுமறபுதமாக
மீபுயர்சேவைவிருப்பொடுசெய்து
சாயறுதீமைநகடுவ்வினைமாய்த்துப
பாயுயர்முத்திபடர்ந்தனனன்றே. (௨௧)

கண்ணியகாளகண்டனடைந்து
நண்ணியபேறறைநாமுறைசெய்தா
மெண்ணியவானதிறையவன்சாப
மண்ணியமேயவண்ணமுரைப்பாம். (௨௨)

காளகண்டப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௪௮ இ திருவிருத்தம்-௨௨௫௬.

## இந்திரன்சாபந்தீர்ந்தபடலம்.

போதவிலாசமுனிவரரியாரும்புகழ்பயரபயார்
சூதமுனிவரனருட்டாமரைகடொழுதருள்சா
றூதநெடுவிண்புரப்பவன்சாபநலிவறுத்த
தோதவவாவுதியென்னவன்றன்மகிழ்ந்தோதுவனே. (௧)

விண்ணம்புரக்குங்குலிசாயுதப்பெருவேந்தனென்பான்
வண்ணம்பரப்புஞ்சுதன்மையின்மேவிமதியமைபொற்
றண்ணங்குரவனடிபோற்றிநன்னிலைசாறறுகென
வெண்ணம்பொருந்தத்தருமாதருமமியம்புவனே. (௨)

கண்ணியநீற்றுப்பெருமையுங்கண்மணிச்சீருங்கற்றோ
னண்ணியவைந்துபதமான்மியமுநவிலடியார்
புண்ணியமாண்பும்பத்திச்சீருமற்றும்புகறருங்காற்
றிண்ணியவாகைமகவானபராமுகஞ்செய்தனனே. (௩)

பராமுகஞ்செய்தெதிர்நின்றானைக்கூஉய்ச்சிலபன்னுதலும்
புராதனவாரியவாண்டளப்பான்சினம்பொங்கத்தூய
ராரவிவருத்தும்பிரமவிராக்கதனுறியென்றான்
கராசலவூர்மகவானதுகேட்டுக்கலங்கினனே. (௪)

அடியேனறிவிலியானேன்பிழைபொறுத்தாடியென்று
கடியேர்நறுமலர்க்கற்பகமாலையன்காலுழலும்
படியேழ்புரப்பவற்கோதியதுபழுதென்றெண்ணி
முடியாவிரக்கத்துமந்திரிபின்னுமொழிகுவனே. (௫)

நலமார்வளம்பொலிகாரோணமாநகர்நண்ணிமிக்க
புலமார்முனிபுண்டரீகன்னுமப்புனலபடியின்
வலமாறிச்சாபம்விடும்பின்னர்வள்ளலைவாழ்த்தியந்தித்
தலமாராசுபுரியெழுபோவெனச்சாற்றினனே. (௬)

பொன்புகல்வார்த்தைபொன்போலப்பொதிந்துபுரந்தரன்வந்
தன்புகுலாவமுனிதீர்த்தமாடியடர்ந்துபற்றி
வன்புவிராயகொடுஞ்சாபம்போக்கிமனமுருக
வென்புமுருகவெழுந்தானிறைவன்முன்னெய்தினனே. (௭)

இறையவன்முன்னர்ப்பணிந்துபல்பூக்கொண்டினிதருச்சித்
தறையுடனமொய்த்தவுரோமஞ்சிலிர்ப்பவகத்தடங்கா
நிறைமகிழ்பூப்பவிழிப்புனல்வாரநிலாவுமன்பு
குறையறவோங்கக்குளறிடநாத்துதிகூறுவனே. (௮)

சங்கரசம்புசதானந்ததற்பரநித்தமுத்த
பொங்கரவாபரணவெனவேத்திப்பொலியருள்பெற்
றங்கரவென்றுபுடைவளைந்தேத்துமமரரொடு
செங்கரவச்சிரத்தான்பண்டைத்தானஞ்சியணினனே. (௯)

வாசித்தகற்பகமாலையினுன்வந்துமாத்துயர
மோசித்தகாதையுணர்த்தாநதவத்துமுனிவரர்கா
ணேசித்தநாகைத்தலத்தையடைந்துநிகழ்தருமன்
பூசித்தகாதைதெரிவானெடுத்துப்புகலுறுமே. (௧0)

இந்திரன்சாபந்தீர்ந்தபடலம் முற்றிற்று.

ஆக படலம் ௪௧ இ திருவிருத்தம் - ௨௨௪௬.

## தருமன்பூசித்தபடலம்.

பாயமலமுமதன்வேரும்பறிந்துயாந்த
தூயபெருமுனிவர்க்குநமுனியைப்பணிந்தே
யாயதருமனருச்சித்தவண்ணமெவ
னேயமருவச்சொலெனவந்தமுனிநிகழ்த்தும். (க)

திராவிடதேயத்துச்செறியும்வணிகன்
பராவுதருமனெனும்பேர்படைத்தான்
விராவுகாய்தந்தைசிறுபோதேவிய
வராவுவறுமையிலக்காயழிவான. (உ)

பொல்லாவறுமைபுகுந்துழக்கப்பட்டுப்
பல்லாரகத்தும்பலியேற்கும்வாழ்க்கை
யொல்லாதுகொல்லெனவொழிக்குந்திறம்பூணு
னல்லாதரவினயந்துமேற்கொண்டான். (௩)

பலியுணவியாரும்பரிந்திடாவண்ண
மெலியுமுடம்பெல்லாம்வெண்குட்டமேவி
நலிபிறநோயுநடுங்கவுடற்றக்
கலிவறுமைமூழ்கிக்கலங்கித்திரியுநாள். (௪)

பஞ்சகந்தகதேப்டபாமுத்தியென்றுழலும்
வஞ்சமனப்புராபுரத்துவாருநசயனுய்
நஞ்சநிகருமவாகொள்கைநணிநு
னஞ்சவிலம்பாடுறுத்தலாக்குந்தணிந்திலான். (௫)

சின்னுள்கழியவதினின்றுர்தீர்ந்தாறு
யெனருணமக்குவருமேற்றமெனக்கவல்வான
பன்னுளொழியப்பளகுதவிாகீறணிந்து
நன்னுளுறவுறுநாகைக்காரோணத்தே, (௬)

ஆயகாரோணத்தடிகடிருக்கோயின்
மேயபலிபீடமிம்பெண்சோறெடுத்தயில்வா
னேயமுறவுட்புகுந்தாவிண்டபசிவருத்த
மாயவுடல்சோரமாழாந்துமண்வீழ்ந்தான், (எ)

வீழ்ந்தானைநோக்கிமிகவிரங்கியெம்பெருமான்
றாழ்ந்தானமையென்றுதாவாவருள்செய்தான்
வாழ்ந்தானெழுந்தான்வறுமைவறுமையுறப்
போழ்ந்தானுடம்பிற்புணர்நோயெலாமொழிந்தான். (அ)

அந்தநகரத்தணிமாளிகையாதி
யெந்தவளமுமியைநதாண்குபேரனினு
நந்தவமைசெல்வநனிவரப்பநற்குணசம்
புந்தமனைவிமகாரோடும்பரவினுன். (௯)

வந்தாருக்கன்னம்வறுமைசிதைத்தலினா
னொந்தாருக்காசைறுவன்மற்றுளபிறவு
மந்தார்வணிகனவாவியருளுவான்
கந்தார்களிற்றரசர்நட்புறனிகைக்கொண்டான். (௧௦)

எண்ணாவறுமையினையந்துதிரிந்தானளக்க
வொண்ணாத்திருவமுடையானேயாயினா
னண்ணாவரசேயென்றாரமுதேயென்பார்க்குப்
பண்ணாவருளும்பரமற்குளதேயோ. (௧௧)

வளைகடலிற்பல்கலங்கள்வந்துவந்துசெல்லு
மளையுமவற்றாலமைபொருளும்பல்ல
விளைநிலத்துநாளும்விளைபொருளும்பல்ல
வுளைவில்வணிகற்குறுவவளப்பாரார். (௧௨)

எங்குமவன்சத்திரங்களெங்குமவனீர்ப்பந்த
ரெங்குமவனாலயப்புரிகழக
மெங்குமவனாலினிதியற்றுங்கல்யாண
மெங்குந்தருமமெனிலிட்டபேர்காரணமே. (௧௩)

இந்தவிதம்பொலிவானெங்கள்காரோணருக்குஞ்
சந்தக்கருந்தடங்கணம்மைக்குந்தாவாத
பந்தத்திருப்பணிகள்பல்லபுரிந்துவந்தே
யந்தத்தின்முத்தியடைந்தினிதுவாழ்ந்தனனே. (௧௪)

ஆயதருமனடைபேறெடுத்துரைத்தாம்
போயபொலிவிற்புரோகிதனென்பானொருவ
னேயமருவநிகழ்காரோணத்தடைந்து
தீயவொருவித்திகழ்ந்தகதைசெப்புவாம். (௧௫)

தருமன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௫௦ இ திருவிருத்தம் - ௨௨௬௧.

## புரோகிதப்படலம்.

செங்கணெடுமாலுநேடருந்திருவடியை
யங்கணிதயத்தழுத்துவார்சூதமுனி
பங்கயப்பாதம்பரவிப்புரோகிதன்யா
ரங்கவன்பேறுறுகெனவந்தமுனிபுகல்வான். (௧)

தென்னாடுகாக்குஞ்செழியர்குலத்தொருவன்
மின்னாடும்வேல்வலத்தான்வென்றிப்பெரும்பூணான்
பொன்னாடுநூலோர்புகலுமொருபுண்ணியநாட்
சொன்னாடுகொற்கைத்துறையடைந்துமூழ்கினான். (௨)

அந்தச்சமயத்தடுத்தபுரோகிதன்கை
யெந்தப்பொருளுமெடுத்தானியுதவி
முந்தக்கொடுத்திமுழுதுமறையோர்க்கென்று
னுந்தக்கொடியனுடன்பட்டுவாங்கினன். (௩)

காற்கூறுநல்கிக்கழித்தெஞ்சியவாமுக்
காற்கூறுபொன்னுங்கவர்ந்தானக்கேயெனமண்
பாற்கூறுநல்லோர்பழிமொழியோடாக்கினனப்
பாற்கூறுசெய்யவருபாவமுமஞ்சாக்கயவன். (௪)

பொல்லாத்தரோகம்புணர்தலினன்மற்றவனை
வெல்லாக்கொடுங்காலன்வீந்தநாண்மிக்கொறுத்துக்
கல்லாக்கயவர்பெறுங்காணியாங்கும்பியெலாஞ்
செல்லாத்துயரடைந்தேம்பச்செலுத்தினன். (௫)

ஆவாதரோகமனுவாற்றுதலுந்தீதென்னு
மாவாநமனரடர்த்தல்கொடிதென்னு
மாவாநிரயமழுந்தறகாதென்னு
மாவாவறியாமையால்விளைந்ததிதென்னும். (௬)

அஞ்சியவித்துன்பமனுபவித்தவெங்கொடியோ
னெஞ்சியதாந்துய்ப்பானிருங்கடல்சூழ்வையப்படைந்
நஞ்சியனுந்தன்பப்பிறவிபலநண்ணிக்
துஞ்சியபின்னுநதொலையாதசேடத்தால். (௭)

இரங்கும்பிரமவிராக்கதனேயாகி
யுரங்கொள்கபிலனுறைசூழலுற்றுத்
திரங்கொளொலியெழுப்பித்தேம்பியழுநான்
வரஞ்செயவனும்வரவுணாத்தியென்றன். (௮)

உள்ளவனைத்துமுணாத்தானதுகேட்டுக்
கள்ளமறுக்குமுனிகாரோணநீயடைந்தோர்
தெள்ளறலின்மூழ்கிற்றீருவையென்றன்னைத்
துள்ளவெழுந்தாதிதுடித்துப்போயினன். (௯)

பாரோரும்விண்ணோரும்பல்லோருமேத்தெடுக்கும்
காரோணமேவிக்கமலமலர்க்கிழவன்
சேரோககயானமைத்ததீர்த்தக்கரையமர்ந்தா
னோரொருவனடைநதப்புனன்மூழ்கி. (௧௦)

ஈரம்புலரவிருஞ்சிகையைத்தட்டனுமங்
காரத்தொருதிவலைநண்ணிற்றிவன்றலைமேல்
வீரக்கடற்புடவிமென்மேலதிசயிப்பச்
சோரத்துயருருப்போய்த்தெய்வவுருப்பெற்றன். (௧௧)

தாணுமகிசயித்துத்தாவாமகிழ்ச்சியெழ
மீனுஞ்சிவலோகமேவப்புனன்மூழ்கி
வாணும்பிறவுமதிக்குங்காரோணத்தெங்
கோனும்பலாய ‡ குழகனடிபோற்றுவான். (௧௨)

ஆதிபுராணரடிபோற்றியன்பர்வினை
காதியருளுங்கருந்தடங்கணம்மையையு
நீதியுறப்பணிந்துநேயமிகப்பெருகச்
சோதியமர்மற்றைத்தலமுந்தொழுதெழுந்து. (௧௩)

பொன்செய்விமானமெதிர்போதவதினிவர்ந்து
மின்செய்நுழைமருங்குன்மேனகைமுன்னோர்பலரு
மென்செய்பணியென்றெதிர்வந்துகைகுவிப்பத்
தென்செய்சுவர்க்கத்திருநாடுபோயமர்ந்தான். (௧௪)

பொல்லாவினைசெய்புரோகிதன்காரோணத்தை
நல்லாதரவினயந்துற்றபேறுரைத்தாம்
புல்லாத்தவஞ்செய்நிருகனெனும்பூமான்
வெல்லாவுவபின்மிகத்துனைந்ததோதுவாம். (௧௫)

புரோகிதபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௮ இ திருவிருத்தம்-௩௨௬௬,

## நிருகன்பூசித்தபடலம்.

துன்னியமாதவர்சூதமாதவன்
மின்னியமலரடிவிரும்பிப்போற்றுபு
பன்னியநிருகன்யாரெனையன்பண்புள
மன்னியபுகலெனவவன்வழங்குமால். (௧)

பொருதிரைப்புடவியாண்மன்னனபொன்னவிர்
தருகழற்காலினன்றயங்குமோலியா
னிருகனென்றியாவருநிகழ்த்தும்பேரின
னருமகற்பெறுவதற்காசைமிக்குளான. (௨)

மறையவர்முதலியோர்வகுத்ததானங்க
ணிறைதரவியற்றியநியமம்பூண்டுளோன்
பறைவதுசெய்துமாதீர்த்தமாடியு
முறைமகமனைவயிற்றுதிப்பக்கண்டிலான். (௩)

காண்டவாரணியத்துக்கடுகப்புக்கவண்
மாண்டவாரழற்புனன்முழுகிவானுற
நீண்டமாலுணர்வருநிமலதாண்மனம்
பூண்டவாம்பெருந்தவம்புரியுநாளையில். (௪)

‡ உம்பலாய - பிரணவகுஞ்சரமாகிய.

உருவில்வாக்கொன்றுகாரோணத்துள்ளுறப்
பொருவின்மாதவம்புரிபோதியென்றது
வெருவிலம்மொழியுணர்ந்தெழுந்துவேந்தன்வான்
றருவின்மண்பொலியுமத்தலத்தைச்சார்ந்தனன். (ரு)

உள்ளபஃறீர்த்தமுமுவந்துமூழ்கினு
னுள்ளபஃறலங்களுமொருங்குபோற்றினு
னுள்ளலர்வறியராமும்பர்தீர்த்தப்பா
லுள்ளமிக்குவப்புறவுற்றுநோற்றனன். (சு)

சிலபகலருந்தவஞ்செய்யவெம்மையா
ணிலவணிசடைப்பிரானேர்வந்தெண்ணிய
பலமவனடைதரப்பாலித்தானருள்
குலவரசனுமகிழ்கூர்ந்துபிற்றைநாள். (எ)

திருந்துகாரோணநஞ்செல்வநாதற்குங்
கருந்தடங்கண்ணிகருநகதிராவிடங்கர்க்கும்
பொருநதுபல்பணிபரிவட்டம்பொற்புற
வருநதவத்தரசாகோனனபின்வீசினன்.[illegible] (அ)

விடைகொடுதன்பதிமேவிமைந்தனைத்
தடையறப்பெற்றுளந்தவாமகிழ்ச்சியி
னிடையறத்துனைநதுநாளீறறினெற்றைகருங்
கடையுறுச்சிவபுரங்காணிகொண்டனன். (கூ)

மகப்பெறுவாஞ்சையினிருகன்வந்துநன்
கிகப்பெருந்தவஞ்செய்ததெடுத்துச்சொற்றனர்
தகப்பயனொருசண்டதருமனுற்றது
நகப்புகல்வாமுளநயந்துகேண்மினோ. (க0)

நிருகன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ருஉ இ திருவிருத்தம்-உஉஅசு.

## சண்டதருமன்பூசித்தபடலம்.

வினைமுதலறத்துமித்துயிளிர்பரபோகந்துய்க்கு
நனைமலர்வனப்புவாய்ந்தநைமிசமுனிவர்குதன்
புனையடிவணங்கிச்சண்டதருமன்சீர்புகலுகென்ன
வனைவிகரனையானுள்ளத்துவகையினறையலுற்றான். (க)

மறையவர்குலத்துவந்தான்மறைமுதற்கலையுணர்ந்தா
னிறைதவவொழுக்கம்வாய்ந்தானிதியேகருநிதிப்பான்
முறைமையிற்றிறம்பல்செய்யான்மூர்க்கரோடுறவுபூணன்
றறைபினட்சிறந்தான்சண்டதருமனென்றுரைக்கும்பேரான். (உ)

அனையவனினையஞ்சியமர்நாண்முற்பவத்திற்செய்தீ
வினைபயனருந்தப்புக்காலியாவரோவிலக்கவல்லார்
றனையநல்லொழுக்கமெல்லாந்தொலைத்திடுங்காமவேட்கை
மனைவயினடங்காதாகிமலிந்ததான்மேலுமேலும். (௩)

பரமடமாதரியாவராயினும்பரிவிற்புல்லி
வரமுறக்களிப்பாரேனுநாட்பழையாதும்மனையிற்புக்கோர்
குரகலர்கூந்தலாடனொங்கைகட்டுழவித்துய்த்தான்
விரவியகாமவேட்கைவிருந்திராசையிக்கன்றே. (௪)

கழிமுதவேவளிற்காலத்தாகநோய்கணுற்றலாலே
வழியினமோருண்டோவெனவுமினவவமடைந்தைநல்லாள்
படிகண்மொண்டருந்தெனக்கொடுத்தனள்பாராணுண்டு
விடிகள்ளெனத்திறந்தேர்ந்துவெருண்டனனவெளிவந்தானே. (௫)

வந்தவன்மறையோர்பாற்போய்வந்தபாதகமுனைத்துச்
சிந்தவோர்கழுவாய்கூறிறசிறியனேனுயவனென்று
னந்தணர்தூயவாலனயபுழலெழுகாயச்சிவாயி
னூர்தவிப்பொழுதுவிட்டாலொழியுமித்தீமையென்றார். (௬)

அன்னவனதுவேயாற்றியாவிமாய்ந்திடத்துணிந்தான்
றன்னமர்தந்தைகேட்டுத்தான்விரைந்தோடிவந்தே
யென்னசெய்குதிநீயானுமிறப்பனின்முன்னொன்றான்
பின்னொனசெய்துமெனநபேதுற்றுக்கவலுங்காலை. (௭)

மொழிசவப்பெருமைகூர்சாண்டில்லியமுனிவனபோந்து
கழிபழனெய்புனனுதிகாரோணதலத்தடைந்து
பழிதபுதேவதீர்த்தம்படிந்தனையாயிறபாவ
மொழியுமெனறுரைத்தான்சண்டதருமனங்குடனேசென்றான். (௮)

புண்ணியதேவதீர்த்தம்புக்கினிதாடலோடு
மண்ணியகள்ளுண்டோடமகன்றதென்பேரோர்வாக்கு
நண்ணியதிறம்பூசாற்றுறயந்துபல்புனலுநதோய்ந்து
கண்ணியதலங்கொல்லாநதொழுதுகாரோணத்துற்றான். (௯)

கருந்தடங்கண்ணிபாகக்காரோணப்பெருமானுனைத்
திருந்தநனையிறைஞ்சிப்போற்றித்திருவருணிரமபப்பெற்றுப்
பொருந்துதன்னுறையுண்மேவிப்பொறபலாழ்நதிருந்துபினனு
ளருந்தவக்கயிலைமேவியளப்பருமின்பந்துய்த்தான். (௧௦)

தாவருந்திருக்காரோணத்தலஞ்சண்டதருமனுற்று
மேவரும்பேறுபெற்றவிதத்தினையெடுத்துச்சொற்றும்
பாவரும்புகழான்மிக்கபதஞ்சசேனன்போநது
தேவரும்வியப்பப்பெற்றபேற்றினைச்செப்புவாமால். (௧௧)

சண்டதருமன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆக படலம் ௩௩-க்கு திருவிருத்தம் - ௨௨௯.

## பத்திரசேனன்பூசித்தபடலம்.

பணையொருபாகத்தெம்மான்பங்கயப்பாதமுன்னு
முனையமைமுனிவர்க்குதனுண்மலர்ப்பாதம்போற்றிப்
புணைதவிர்காரோணத்திற்பத்திரசேனன்போந்து
வினைதரப்பெற்றபேறுவிளம்பெனவவன்விளம்பும். (௧)

இக்குவாவங்கிசத்திலுதித்தவணிகலின்மிக்கா
னக்குவாள்விதிர்த்தலோமேகவிலொணாநடுக்கமெய்திப்
பக்குமாற்றலர்களோடும்பத்திரசேனனெனபான்
றிக்குமேவியசீரான்றனில்லறஞ்சிறப்பச்செய்வான். (௨)

ஒருபதுமவதியெனனும்பெயரினளொழுக்கமிக்கா
டிருபதுமினியோவென்னச்சிறப்புறவனப்புவாய்ந்தா
ளிருபதும்பதினாறுந்தீர்ந்திலங்குமாதேவன்றாள்க
டருபதுமங்கொண்டென்றும்பூசிக்குந்தன்மைமிக்காள். (௩)

அன்னநன்மனைவியோடுமடங்கலரரியேறன்ன
மன்னனன்கமையக்கூடிமாவடிவாணர்வைகும்
பன்னரும்புகழ்சால்காஞ்சிப்பதிவயின்மருவியாரு
முன்னருஞ்செங்கோலோச்சிமுறையுளிவாழுநாளில். (௪)

புரவலர்பலருமொன்றிபபுழுங்கழுக்காறுபூண்டு
கரவுறுமிவனைவெநகாணுங்கருத்தினராகிவல்லே
விரவினர்வளைந்துகொணடுமிக்கறைகூவிநின்று
ரரவணிபவற்கன்பாயபத்திரசேனனுய்ந்து. (௫)

மாவடியுலகமீன்றாளருச்சிக்கவைகுமண்ணல்
பூவடிவணங்கியேதிப்புரவலாபலருமொன்றித்
தாவடிகொண்டுமேன்மேற்சண்டைசெய்திடுவான்வந்தார்
மேவடியேறகென்செய்கைவிளம்பெனவேண்டலோடும். (௬)

நலங்கொணின்மனைவியோடுநாகைக்காரோணமெய்திப்
பலங்கொளுந்தேவதீர்த்தம்பகர்விதிப்படிபடிந்து
வலங்கொளிக்கும்பமாதமாண்புசாலிரவினம்மை
யலங்கொளப்போற்றில்வெற்றியடைகுவைபோதியென்றான். (௭)

அந்தலவிசேடந்தேறவறிவித்தானையனென்று
முந்தலம்புகழக்கற்புமுதிர்மனையாட்டியோடுங்
கைத்தலங்குவித்தெழுந்துநாகைக்காரோணஞ்சார்ந்து
பைத்தலத்தமர்மண்ணுளும்பார்த்திவன்விதிவழாதே. (௮)

தேவநீர்முழுகவன்றுசிவகிரியடைந்ததாக
மேவுமாரருட்காரோணவிமலற்கியாமநான்கு
மாவபிடேகமாதியாவையும்வயங்கச்செய்து
பரவுபேரன்பிற்றாழ்ந்துபதிச்சினன்பாராள்வேந்தன். (௯)

வழிவழியடிமைபூண்டமன்னவற்கிரங்கியையன்
பழிதபுநன்காரோணப்பதிமதிராவின்மேவி
மொழிபெரும்பூசையாற்றுமுறைமையாளினனுமாற்றூர்
கழிபெரும்போரிலாசைகழிந்துநட்பாலவர்கண்டாய். (௧௦)

ஆதலின்வருடந்தோறுமனைதருநமதிராவிற்
காதலினிங்குமேவிக்கரிசறப்பூசைசெய்தி
மேதகுமுத்தியமபினமேவுவையெனவிடுத்தான்
போதகமனையவேந்தன்மனையொடுங்காஞ்சிபுக்கான். (௧௧)

காஞ்சிவந்தடைதலோடுங்கடுகமுனைவனோர்ந்துமாற்றூர்
தாஞ்சிவநிசிக்காரோணதரிசனஞ்செய்தலாற்று
றுஞ்சினந்திடல்கூடாதுநட்பதேகருமமென்று
பூஞ்சினைமாவினீழ்வாழ்புண்ணியபிரானையேத்தி. (௧௨)

பத்திரசேனமன்னன்பால்வந்துநட்புப்பூண்டு
துத்தமக்கியன்றதாயதிறைதந்துதழுவிபோனா
ரத்தகுமிறைவனாகையாண்டுதோறொருநாட்போற்றி
யுத்தமமனைவியோடுமுற்றனன்முத்தியீற்றில். (௧௩)

வாகையந்திண்டோண்மன்னன்பதிரசேனன்வண்சீர்
நாகையந்தலத்துமேவிஎம்பிரானருளப்பெறற
வோகையையெடுத்துச்சொற்றுமோங்குமந்தலத்தையின்று
மூகைமற்றொருவன்போற்றிபெற்றதுமொழிவாமன்றே. (௧௪)

பத்திரசேனன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௫௪ இ திருவிருத்தம் - ௨௩௧௧.

## மூகைபூசித்தபடலம்.

வாகைமாதவர்சூதமாதவ
னீகையார்பதமிறைஞ்சிநாகையின்
மூகைபோற்றியமுறையுஞ்சொல்லென
வோகையோடவனுரைக்கலுற்றனன். (௧)

தணிதராவளந்தங்குநாகையின்
வணிகர்தங்குலத்துதித்தவன்முனைப்
பிணிசெய்தீமையாற்பேச்சிலாதவன்
கணிதமில்பசுக்காவல்பூண்டுளான். (௨)

ஓகையார்பசுவொன்றைநாடொறு
நாகைசூழ்ந்தனவிருளினூடிப்பின்
‡ மேகைதேர்ந்தவப்பசுவுமீடரா
தாகைவாய்ப்புறச்சூழ்ந்ததல்லெலாம். (௩)

‡ மேகை - மேவுதல்.

வெருவின்றூகையும்விடாதுசூழ்ந்தனன்
பொருவிலவ்விராயபுணரியகெழு
திருவினுய்த்திடுஞ்சிவனிராயதா
யொருவிலாவளமுறப்பதாயிற்றே. (௪)

பெட்டியாவரும்பேசிராவெலா
நட்டெவகுமிநாகையைநகுடஞ்
சுட்டுறூகையுஞ்சூழ்ந்தவென்றுதோல்
கட்டுநாயகன்கருணைசெய்தனன். (௫)

மருளிலாத்தசாருணவனேறட்டகந்
தருளின்றூகையோராரசனேயினை
றெருளமைச்சனேய்ந்திகழ்ந்தோண்பசுப
பொருளினமேவரசாணைபோதுநாள். (௬)

மூந்துசனமதநிணிகழ்ச்சிமுறறவு
நந்துமாறுணாநலமவிராவலாற
பந்துகோர்முலைபாகர்நாகையை
வந்துசூழ்ந்தனாயினறுமாணைபுற. (௭)

முனிவாசிற்சிலாகணேடுமுறறுளாக
கனிவிறேடிராம்பகனுவனைநகுர
தினியநாகையைச்சூழவதெனவைப்
புனிதரோதிறோபுணாந்தயானையும். (௮)

ஒருதினத்தறியாமனுந்தல
மருவிச்சூழ்ந்தவாபெறணமாறீதெனி
லொருவறத்தெரிநூவந்துசூழ்பவர்
பெருகும்பேறறினைபபேசுவாரெவர். (௯)

என்றுமாதவொண்ணியுநல
நன்றுசூழ்ந்தனாநமபிரானரு
ளொன்றுமாறுகண்டுவகைபூணடனர்
வென்றுமேம்படுமுத்திமேயினா. (௧௦)

மதியமைசசனுமனனனும்பெருந்
துதிவிராவுறச்சூழ்ந்துநாகையிற
பதியுந்தீர்த்தமெல்லாமபடிநதுபின்
கதிசெயுஞ்சினகரமெலாநதொழா. (௧௧)

ஓங்குநாகைக்காரோணவுத்தமன்
பாங்குமேவியதிருமுன்பம்பினூர்
நீங்குமன்புளம்விரியத்தாழ்ந்தனா
ராங்குநாயகனருகுசார்ந்தனர். (௧௨)

கண்டுதாழ்ந்தனர்கருந்தடங்கணு
ளண்டுபோருட்டிலக்கமாகவிடுந
தொண்டுபூண்டனர்தொழுதுவாழ்த்தினர்
பண்டுநேர்மையுட்பற்றிலாதவர். (கஎ)

மேயசுந்தரவிடங்கப்போயுனை
நாயனார்பதநண்ணிப்போற்றினர்
பாயவின்பமாப்பரவையாடினர்
நேயமுற்றெழிலவுநீர்மையார். (கஅ)

இந்தவாதிருவோருமென்னினு
ளந்தமாத்தலத்தடித்தொண்டராறுபு
சந்தமாரருட்டலைமைவாய்ந்தனா
முந்தமேவினார்முத்திவைப்பரோ. (க௯)

கந்தர்தந்தையாரகருணைசெய்தலின்
வந்தமூகையார்வயங்குநாவிலா
னந்தரானதைநவின்றஞானசம்
பந்தர்ம்பாற்றியபரிசுங்கூறுவாம். (உ௰)

மூகைபூர்த்தபடலம் முற்றிற்று.

ஆ-படலம ௩௰ ௯ திருவிருத்தம்-உகூஉஎ.

## ஞானசம்பந்தப்படலம்.

முதிர்புகழ்முனிவர்கூறுமுனிவரன்பொற்றாள்போற்றி
யதிர்கடலுலகமேத்துமணைவலார்சாரோணைந்தறக்
கதிர்புனாசருசம்பந்தர்கலைந்துபோற்றியசேரநென்ன
வெதிராதுபோற்றியனைத்தியம்புமச்சுதமேலோன். (க)

ஆழிசூழ்புடவியேத்துமகன்புனற்சோழநாட்டுக
காழிமாமறையோர்தம்முட்கவுணியர்குலஞ்செய்சோன்பால்
வாழியாருயிர்களோம்பசிவபாதவிருதயர்வாழ
ஆழியானருளையென்னவொருவர்வந்தவதரித்தார். (உ)

ஆண்டுமூன்றணையுங்காலையப்பர்தம்பின்புசென்று
பாண்டுநீறணிவார்கோயிற்பைம்பொன்செய்தோணிநோக்கி
மூண்டபேரன்புபொங்கமுலைசுரந்துலகமீன்றாள்
வேண்டியொழூட்டவுண்டுகண்பிசைந்தழுகைவிட்டார். (௩)

ஊட்டினர்யாவரென்றுமொருவர்க்கோர்விரலாற்சுட்டிக்
காட்டினர்தமிழ்வேதந்தோடுடையமுற்கழறியபின்னர்
நீட்டினவேதியார்தங்கோலக்காவினைந்துசென்று
மீட்டினவோசைச்சால்பொற்றாளங்கைக்கொண்டாரன்றே. (௪)

பெருந்திருக்கூட்டத்தோடுந்தலமெலாம்பேணிப்போற்றி
யருந்திறற்பிள்ளையார்தாமரத்துறைக்கோயில்சார்ந்து
மருந்தமுண்டமரர்க்காத்தவள்ளலைவணங்கிமேன்மை
பொருந்தமுத்தமைந்தயானமாதியபொலிவிற்பெற்றார். (௫)

அங்குநின்றகன்றுபல்லதலமெலாமணுகிப்போற்றித்
தெங்குவிண்டடவும்பாச்சிலாச்சிராமத்திற்சென்று
தங்குநன்மழவன்பெற்றகன்னிகைதவாததுன்புண்
ழுங்குதற்கேதுவாயமுயலகனொழித்துப்பின்னர். (௬)

அறிபெருங்கொங்கர்நாட்டையடைந்தடியவரைவருத்துஞ்
செறிபனிக்கொடுமைநீங்கத்திருநீலகண்டம்பாடி
மறிவரும்வேனில்வெப்பமடங்கப்பட்டீச்சரத்துக்
குறிகுணமில்லார்நல்குகுளிர்முத்தின்பந்தர்பெற்று. (௭)

பெற்றவரினிதுசெய்யும்பெருமகமுற்றுமாறு
கற்றவர்நிறையுமெங்களாவடுதுறைகலந்தாங்
குற்றவரினிதுநல்குமுலவாதகிழிபெற்றிஞ்சி
செற்றவர்தலங்களெல்லாஞ்சென்றுசென்றிறைஞ்சிப்போற்றி. (௮)

காவணமெங்குமிட்டுக்கமுகொடுகதலியாத்துய்
பூவணமாலையோடுபொன்னரிமாலைநாற்றித்
தூவணப்பனிநீர்சாந்தஞ்சுண்ணமெவ்விடத்தும்வீசி
யாவணவலங்காரத்தோடேனவுமலங்கரித்தே. (௯)

எல்லியன்மறையோராதியடியவரியாருமீண்டிப்
பல்லியலியமுழங்கப்பாவுபொற்குடங்கையேந்திச்
சொல்லியல்வாழ்த்தெடுத்துத்துதித்தடிவணங்கப்போற்றி
நல்லியனுருமேயநாகைக்காரோணம்வந்தார். (௧௰)

கருந்தடங்கண்ணிபாகங்கலந்தமர்தருமாதேவை
யருந்தவருள்ளநீங்காவற்புதக்கூத்தினானைப்
பொருந்தநன்கருள்செய்யாதிபுராணனைப்புலவர்கோவைப்
பெருந்தமிழ்பயில்காரோணப்பிரானைநேர்கண்டுதாழ்ந்தார். (௧௧)

மனங்கனிந்துருகவோவாமழைவிழிபொழியமேனி
யினங்கிளருரோமமெல்லாமியைதரச்சிலிர்ப்பவெண்ணு
முனங்கதிராவல்லானிம்மூர்த்தியித்தலங்கற்பத்துங்
கனங்களையாதுவைகுமென்பதுகருத்துட்கொண்டு. (௧௨)

தோகைக்கோர்பாகநல்குஞ்சுந்தரர்மதியஞ்சூடு
மேலைக்காபாலியாருக்குறையிடமாவதென்று
நாகைக்காரோணமேயென்றருந்தமிழ்கவின்றுபோற்றி
மேதைக்காரணர்க்குச்சின்னாள்விருப்பொடுமமர்ந்தாரன்றே. (௧௩)

அருந்தமிழதமுற்பல்லவறைந்துகாலங்கடோறும்
பொருந்தநன்கிறைஞ்சிமற்றைத்தலங்களும்புரிந்துபோற்றிப்
பெருந்தவருடங்குசூழப்பிறங்குநன்மருகல்சார்ந்து
மருந்தமோர்வணிகனீங்கியுய்ந்திடவாய்மலர்ந்தார். (௧௪)

வற்கடமொழியுங்காறுமறையவர்வீழிமூதூ
ரொற்கமில்பொற்காசெய்தியுறுமிடிதவிர்த்துவைகி
யற்குநன்மறைக்காடெய்தியவிர்கதவம்பிணித்துக்
கொற்கையர்துறைவன்மேயகூடலையடைந்தாரன்றே. (௧௫)

கைதவன்மேனிவெப்பங்காற்றியாரழலிலேடு
பெய்ததனுலர்தன்மாற்றிப்பெரும்புனனதியெதிர்த்திட்
டெய்தவங்கேடுபோற்றியமணரைக்கழுவிலேற்றிச்
செய்தவச்சைவமொன்றேபொருளெனத்தேற்றினூரால். (௧௬)

வழுதிநாட்டங்கவுள்ளதலமெலாமருவிப்போற்றிச்
செழுவியகொள்ளம்பூதூர்சேவிக்குமார்வமெய்த
வொழுகுறுமுள்ளிவாய்நீரோடம்வாக்காலியக்கிப்
பழுதகறெளிச்சேரிக்கட்பாங்குறமேவுங்காலை. (௧௭)

வழியொருபுத்தன்சென்னிமடிதரவுருமுவீழ்த்துக்
கழிபுகழ்த்தொண்டைநாடுகலந்தோத்தூர்மேயகாலைப்
பழிதபுமொருவர்வேண்டப்பரவுமாண்பனைகளெல்லா
மொழிவருங்குரும்பையீனவாய்மலர்ந்தொருசொற்பேசி. (௧௮)

பரவைவெண்டிரைக்கையாலேபவளமுமுத்தும்வீசு
முரவைநன்கமைபுன்னைகவொண்பொழின்மயிலைசார்ந்து
கரவையிலடியாருள்ளங்களித்திடவுக்கவங்க
மரவையேரல்குலாகவழகியவாய்மலர்ந்து. (௧௯)

எண்ணருந்தலங்களெல்லாமினிதுறச்சென்றுபோற்றி
நண்ணருங்காழிமேவிநயந்துபல்லடியாரோடுங்
கண்ணரும்பெருமைஞானசம்பந்தர்களிப்பின்வைக
விண்ணரும்விழையுமன்றலாற்றுவான்விழைந்தாரியாரும். (௨0)

பெருமணமூதூரெய்திப்பெண்பேசியாரும்வேண்டப்
பெருமணப்பதுமப்பூந்தார்ப்பிள்ளையாரெய்தியாங்குப்
பெருமணஞ்செய்துகாணப்பேணிவந்தடைந்தாரோடப்
பெருமணப்பெருமான்பாதம்பெற்றின்பந்துய்த்தாரன்றே. (௨௧)

ஞானசம்பந்தமூர்த்திநாகைக்காரோணமெய்தி
யீனசம்பந்தநீங்கப்பாடியதிசைத்தாமெய்யோ
டானசம்பந்தநாவுக்கரசருமாங்குமேவி
யூனசம்பந்தநீங்கப்பாடியதுரைப்பாமன்றே. (௨௨)

ஞானசம்பந்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௫௬ இ திருவிருத்தம் ௨௩௪௧.

## வாகீசப்படலம்.

பந்தமில்பன்முனிவருஞ்சூதமுனிபதம்போற்றி
யந்தமில்சீர்த்திருநாவுக்கரசராய்பல்வளமு
நந்தமிகுபுகழ்படைத்தநாகைக்காரோணத்து
வந்தமலற்பாடியதைவழங்கெனமறறவனுரைக்கும். (௧)

முக்கணிறைதனிசெறியுமுனைப்பாடிவளநாட்டின்
மிக்கதிருவாமூரில்வேளாளர்பெருங்குலத்துத
தக்கசொறுக்கையரதிபர்புகழனாரமனைசயத்
தக்கமெனத்திலகவதியார்பினவதரித்தனரே. (௨)

வள்ளலருளாலுதித்தார்மருணீக்கியாரொழும்பே
ரொள்ளலடையர்மலடைந்தினியகலைபலகற்று
விள்ளலறமேவுநாள்விமலனருளாமையினு
லுள்ளல்குறியாவமணர்சமயத்திற்புகுந்தார். (௩)

தெளவையார்பற்றொழியத்திருவதிகைத்தலஞ்சார்ந்து
செவ்வையார்பணிசெய்வார்சிவபெருமான்றிருமுன்னர்
கவ்வையாரமண்சமயங்கைவிட்டுத்தம்பியா
ரிவ்வையார்திருச்சமயமெய்தவருள்புரியென்பார். (௪)

ஊழிமுதலருள்சூலையுடற்றுதலாலமணர்செறி
யாழிமிகப்படைத்திருந்தபாடலிபுத்திரநீங்கி
வாழியதிகைபிற்றிலகவதியார்தாள்வந்திறைஞ்சி
யாழிவிடமயின்றபிரான்வெள்ளியநீறவாய்த்தரித்தார். (௫)

அண்ணலார்திருமுன்னரணைந்துபணிந்தெழுதாலு
நண்ணலார்கொடுஞ்சூலைசிந்தக்கூறறுயினவென்
றண்ணலார்திருப்பதிகமோதினாரவரருளா
லெண்ணலார்திருநாவுக்கரசவெனும்பெயரேற்றார். (௬)

இடையறுவன்புமனத்தெழுதலாலுழவாரப்
படையறாத்திருக்கையும்பாட்டறாச்செவ்வாயு
மடையறாதொழுகுபுனன்மழையறாநோக்குமுநன்
னடையறுப்பெருந்தவமாய்ப்பொலிந்தார்நாவரசர். (௭)

புண்ணியநாவுக்கரசரிவ்வாறுபொலிவதனை
யெண்ணியவெஞ்சமண்கையரிப்புநீற்றறையிருந்தும்
கண்ணியவெவ்விடநுகர்ந்துங்கடகரியைப்புறங்கண்டுந்
திண்ணியகல்லொடுகடலைநீந்தியுமேன்மேற்சிறந்தார். (௮)

பெருந்திருப்பாதிரிப்புலியூர்ப்பெம்மானையடிபணிந்தே
யருந்தமிழ்நாவுக்கரசரதிகைமீட்டும்பணிந்து
பொருந்தியவண்டுங்காணைமாடத்திற்புக்கிறைஞ்சி
யிருந்திறற்சூலமும்விடையுமிருதோளுமுறப்பெற்றார். (௯)

ஆறைவடதளியமணராயிரருமறமாய்த்துச்
சேறைமுதற்றலங்களெலாஞ்சென்றேத்திக்கழனிதொறு
றாறைபயிறிங்களூர்நோற்றவருந்தவரடைந்து
கூறைதிசையாரருளாற்கொடுவிடமோர்மகற்கொழித்தார். (௧0)

பொல்லாவற்கடகாலம்போமளவும்வீழிநகர்
நல்லாதரவினமர்ந்துநாடொறும்பொற்காசுபெற்றுச்
சொல்லாருமறையடைத்தனாயகதவந்திறந்து
பல்லாருஞ்சூழ்ந்தேத்தப்பஃறலமும்போய்த்தொழுவார். (௧௧)

வீதிதொறுந்தூராலகற்றிமேயநறும்புனறெளித்துச்
சோதிசெய்காவணம்புரிந்துதோரணமாதிகளியாத்துப்
பாதிமதிபுனைந்தபரம்பரனுறைகைக்காரோணத்
தோதியுணர்ந்தவரொதிர்கொண்டுறப்போற்றவெதிர்போற்றி. (௧௨)

நெருங்குபலவடியரொடுநீலநெடுங்கண்ணியார்
மருங்குதழுவுறவமருமாதேவர்கழல்பணிந்தே
யொருங்குதலவிசேடமெலாமுணர்ந்துதிருவாய்மலர்வா
ரருங்குணாத்தென்றியாவர்களுமதிசயிக்குந்திருப்பதிகம். (௧௩)

கற்பநீறணிபெருமான்காரோணத்தலமொன்றே
கற்பநாளினுமழியாக்காட்சியுறலாற்பலவி
கற்பமாத்தலத்தமருங்கடவுளர்யாவரும்புகுவார்
கற்பயாவருமிதன்சீர்காணலாமெனப்புகல்வார். (௧௪)

முந்தியசெய்யுளிற்பழனமுதலாகத்தலமூன்றும்
பிந்தியதில்வீரட்டமெட்டனொடுபிறமூன்று
நந்தியமூன்றினின்மறைக்காடாதியாநயந்தேழும்
வந்தியலவொருநான்கினம்பர்முதல்வருமூன்றும். (௧௫)

நாறுசுவையைந்தகத்துநல்லூர்முன்னோரிரண்டு
மாறுபெறப்புகலிமுதலாயதலமொருமூன்று
மேறுபுகழ்மிகுமேழிலேற்றசிராப்பளியொன்றும்
வீறுதருமிருநான்கின்விளங்கவேகம்பமொன்றும். (௧௬)

மருவியவொன்பதிற்சோற்றுத்துறையாதிவயங்கிரண்டுந்
திருவியல்பத்தினில்விதந்துசெப்பாததலமனைத்தும்
பொருவரியபன்னொன்றிற்பாம்புரமுற்பொருந்திரண்டுங்
கருவரியபெருந்தகையார்காதலிற்சேர்த்தருளினார். (௧௭)

இன்னதிருப்பதிகமுதற்பலபதிகமெடுத்தோதிச்
சொன்னபுகழ்நாவரசர்சூழடியர்குழாத்தோடு
மன்னதலத்திடைச்சிலநாளமர்ந்தருள்பெற்றப்பாலும்
பன்னவரியாரமருந்தலம்பலவும்பரவுவார். (௧௮)

எண்ணரியதலமனைத்துமெய்தியுருகிப்பணிந்து
கண்ணரியவையாற்றிற்கயிலாயநதரிசித்து
விண்ணரியதென்றுமன்மிகச்சிறந்துதவமிலார்
நண்ணரியதிருப்புகலூர்நாதனைச்சார்ந்தின்புற்ருர். (௧௯)

ஆன்றதவத்துயர்முனிவராகியநாவுக்கரசர்
சான்றவர்சேர்திருநாகைக்காரோணத்தலஞ்சார்ந்து
தோன்றவருள்பெற்றதிறஞ்சொற்றனஞ்சுந்தரரடைந்து
தேன்றருசெந்தமிழ்பாடிப்பரிசுபெறுதிறம்புகல்வாம். (௨௦)

வாகீசப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௫௭ இ திருவிருத்தம் - ௨௮௬௧.

## சுந்தரப்படலம்.

முனிவரர்சூழமேலோன்முண்டகமலர்த்தாள்போற்றி
நனியருள்பொழிந்துமேவுநாகைக்காரோணமெய்திப்
பனிமலர்த்தொடையாலாலசுந்தரர்பரிசுபெற்ற
புனிதமாங்கதையோதென்னப்புரிந்தவன்புகலலுற்ருன். (௧)

திருமுனைப்பாடிநாட்டிற்றிகழ்திருநாவலூரி
லருமறையாதிசைவராகியசடையனூர்பாற்
பொருவருங்கயிலைநின்றம்பூரணரருளாலின்பம்
பெருகவதாரஞ்செய்தாராரூரனொனும்பேர்பெற்ருர். (௨)

மருவனூன்மார்பிற்பூண்டுமாண்கலைபலவுங்கற்றுத்
திருமறையவர்கள்சூழமணம்வந்தபுத்தூர்சேர்நதே
பொருவரும்வெண்ணெய்நல்லூர்ப்புனிதனோலைகாட்டிப்
பெருவழக்காடிவெல்லவன்றொண்டனெனும்பேர்பெற்ருர். (௩)

புகழ்திருத்துறையூர்சார்ந்துபுலனென்றப்பாடிப்பெற்றுத்
திகழ்திருவதிகைமேவிச்சேவடிசென்னிசூடி
யகழ்வினையாரோபோற்றுமம்பலத்தாடல்போற்றி
யிகழ்தலிலாரூர்மேவிப்பரவையாரின்பந்துய்த்தார். (௪)

ஒருவிறன்மிண்டர்வன்மையுறுமொழிசெவியினேற்று
வெருவருங்கடல்சூழ்வைப்பின்மிடையுயிருய்யுமாறு
பொருவரும்பெருமான்வாக்குமுதலெடுத்தருளப்போற்றிச்
சுருதியேயென்னுநதொண்டத்தொகையினிதருளிச்செய்தார். (௫)

குண்டையூர்பெருமான்மேயகோளிலீச்சரம்பணிந்து
குண்டையூர்நெல்லனைத்துங்குலவாரூர்வரவழைத்துத்
தொண்டையாதரித்துமேன்மேற்றலமெலாந்தொழுதுசெல்வாய்த்
தொண்டையார்பரவையாரோடின்புறத்திருப்பாரானார். (௬)

திருப்புகலூரின்மேவிச்செங்கல்பொன்னாகப்பெற்று
விருப்பமர்முதுகுன்றெய்திமேதகுபதிகம்பாடிப்
பருப்பதச்சிலையார்நல்கும்பளகில்பொன்னாற்றிட்டாரூர்
மருப்பதுமஞ்சூழ்தெய்வவாவியினெடுத்தபின்னை. (௭)

என்னரூந்தலங்களெல்லாமெய்துபுபணிந்துபாடிக்
கன்னகன்றொண்டைநாடுகலந்தொற்றியூர்மேவிப்
பண்ணைமொழியினார்சங்கிலியார்தோள்பரிவிற்புல்லி
யொண்ணலமருவியாங்கேயுறைந்தனர்சின்னாளம்மா. (௮)

அணிமதிலந்தணாரூரடைந்தபின்பரவையார்தங்
தணிவருங்கோபங்கண்டுதாங்கரும்வருத்தம்பூண
மணிமருள்கண்டத்தெண்டோள்வள்ளலேதூதுசென்று
பணிசெயற்குரிமைசெய்யப்பராயின்பநுகர்ந்துவாழ்நாள் (௯)

குரவமர்கூந்தலார்தங்கொடைக்குறையகப்பானெண்ணிப
பரவுவார்குருகிங்கூனும்பாற்றியநாவலூர
ரரவமேகலையார்பாடலாடனீங்காதாயென்றுங்
கரவர்சேராதநாகைக்காரோணங்கருதிவந்தார். (௧௦)

ஓங்குகாரோணமேயவடியவரொருங்குகூடிப்
பாங்குசானகரமுற்றும்பண்புறவலங்கரித்து
வீங்குபேருவகையோடுமெதிர்சென்றுவிருப்பிற்போற்றி
வாங்குபேற்றழைப்பத்தாமும்போற்றுபுமகிழ்ந்துவந்தார். (௧௧)

அருண்மலிகருந்தடங்கணம்மையோர்பாகமேவப்
பொருண்மலிந்தமருமாதிபுராணனைக்கண்டுபோற்றித்
தெருண்மலிசிந்தைவேட்டபொருளெலாந்தெளியத்தேற்றி
வெருளாறுஞ்சுவைத்தேந்தீஞ்சொற்பதிகமேல்விளம்பலுற்றார். (௧௨)

பத்தூர்புக்கென்றபாட்டிற்றொழுமைப்பண்புகூர
முத்தார்வெண்ணகையுட்டோன்றப்பல்வகைமொழிந்துபோற்றிக்
கொத்தார்முத்தாரவைரக்கோவைபூண்டிடுமாதந்து
கத்தூரிசாந்துபூசக்கனிந்தினிதருள்கவென்றும். (௧௩)

வேம்பினோடென்றபாட்டில்விருத்திநான்வேண்டவேணி
பாம்பினோடலங்கக்காட்டிப்பகட்டவொட்டுவனோவொட்டேன்
சேம்பினோடரத்தஞ்சூழ்சீர்த்திருவாரூரிருந்தீர்நீரோ
காம்புநேத்திரமும்வேண்டுங்கனிந்தருள்செய்கவென்றும். (௧௪)

பூண்பதோரென்றபாட்டிற்பொல்லாதவேடங்கொண்டு
பாண்பேசித்தலைக்கலத்துப்பலிகொள்கைதவிரீர்ந்தோ
வீண்பேசிமடவார்செங்கைவெள்வளைகோடலாமோ
காண்பாருமாடமல்குங்காரோணத்தமர்ந்தீரென்றும். (௧௫)

விட்டதோரென்றபாட்டிலடிமைவீணுகந்ீர்பொல்லாத்
துட்டவான்பேய்களெல்லாஞ்சூழ்தரநடித்துச்செம்பொன்
வட்டவார்குழன்மின்னார்க்குமயல்செய்வீர்வாட்டந்தீரக்
கட்டிநல்குவதெப்போதுகனிந்தருள்செய்வீரொன்றும். (௧௬)

மீண்டாடியென்றபாட்டில்வினைக்கேடுசொல்லவல்லீர்
தொண்டாடித்திரிவேனுக்குத்தொழும்பேற்றுவீர்செஞ்சாந்தம்
பண்டாரத்தாடையோடாபரணமும்பிரமாணத்தாற்
கண்டார்க்கொள்ளீர்மிர்ந்திர்கனிந்தருள்செய்வீரொன்றும். (௧௭)

இலவவென்றுரைக்கும்பாட்டிலெருதேறிப்பிச்சைகொள்வான்
பலவில்புக்குழலாநிற்பீர்பட்டொடுநறியசாந்த
நலமிகவருடாரதபரிசெவனவிலல்வேண்டுந்
கலவமாமயிலார்செல்வக்காரோணத்தமர்ந்தீரொன்றும். (௧௮)

தூசுடையென்னும்பாட்டிற்றுணுக்குமுற்றரக்கன்பாடத்
தேசுடைறுதியவைவாடேரொடுங்கொடுத்தீரன்று
நேசநல்லடியாருண்ணநித்தலும்வீழியிற்பொற்
காசருள்செய்தீரின்றெற்கருளுதல்கடனேயென்றும். (௧௯)

மாற்றமேலென்றபாட்டில்வாழ்விப்பனென்னவாண்டு
ராற்றவுந்திருவமிக்கிரோரூரிற்புகுத்தபொன்னிற்
றேற்றுமுக்கூற்றிலொன்றுதாரீரோற்றனைத்தாள்பேரீர்
காற்றுநேர்பரிமாவேண்டுங்கனிந்தருள்செய்வீரொன்றும். (௨௦)

மண்ணுலகென்றபாட்டின்மலைமகண்மகாருள்ளாளா
யெண்ணிலனுடல்விருத்தியினிதுறத்தாரீராகி
னண்ணுறவுமதுமேனிவருந்துறவளைப்பேணுனைக்
கண்ணறையென்னல்வேண்டாகாரோணத்தமர்ந்திரொன்றும். (௨௧)

மறியேறெண்றெடுத்தபாட்டில்வல்லீராயாண்டுகொண்டீர்
இறிபேசிக்கீழ்வேளூர்புக்கிருந்தனிர்கேடொன்றில்லீர்
பொறியார்பொற்சுரிகைபொறபூப்பட்டிகைபுணர்த்தல்வேண்டுங்
குறியார்நெய்சோறும்வேண்டுங்காரோணத்தமர்ந்தீரொன்றும். (௨௨)

பண்மயவென்னும்பாட்டிற்பரவைசங்கிலிக்கெனக்கும்
வண்மயப்பற்றுயுள்ளீர்மறருரையுடையேன்யானே
வுண்மயவுமக்குத்தொண்டனுறுகுறைதீர்க்கவேண்டுங்
கண்மயத்திரந்தவெல்லாங்கனிந்தருள்செய்வீரொன்றும். (௨௩)

என்றுநைந்துருகிப்பாடவியம்பியவனைத்துநல்கி
யொன்றுதம்பரியுமேறியுலவுமாறருளிச்செய்தா
ரன்றுதொட்டத்தலத்தினடற்பரியேற்றச்சாறு
நன்றுதண்கழனிசூழ்நாவலூராரர்க்கேநண்ணும். (௨௪)

சிலபகலங்குலவித்திருவாரூர்புகுந்தாரூரர்
நலமலிகோதையோடுநடந்துசென்னையாறெய்தக்
குலநதிப்புனலையோர்பானிறுத்தபுகுநாட்டெய்தி
வலமிகுமுதலையுண்டமதலையையுமிழப்பாடி. (உரு)

கடவுளர்செறியுமஞ்சைக்களம்பணிந்தருளாற்சேர
வடலரசொருமாவேறியணையவெள்ளானையூர்ந்து
படவரவணையானுதிப்பண்ணவர்சூழ்ந்துபோற்றத்
தடனெடுங்கயிலைமேவித்தவாதபேரின்பந்துய்த்தார். (உசு)

நலமலிநாவலூரர்நாகைக்காரோணமெய்திப்
புலமலிபதிகம்பாடிப்பொருபரியாடைசெம்பொற்
கலமலிபிறவும்பெற்றவுண்மையைக்கரைந்தாமர்தத்
தலமலியன்பின்மேயவதிபத்தர்சரிதஞ்சொல்வாம். (உஎ)

சுந்தரப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ருச இ திருவிருத்தம்-உ௱கூசு.

## அதிபத்தப்படலம்.

போதமாகியதிருவமேபொலிதரப்புணர்ந்த
சூதமாதவன்றுணையடிமுனிவரர்தொழுது
வேதமோதுகாரோணத்தையதிபத்தர்விழைந்து
பாதமெய்தியகதைபகரெனவவன்பகரும். (க)

தலத்தின்மிக்கதென்றியாவருமெடுத்துறைச்சாற்று
நலத்தின்மிககநாகபட்டினத்திருநகர்க்கீழ்ப்
புலத்தின்மிக்கதாநதிரைக்கடற்கோட்டிடைப்பொலியுங்
கலத்தின்மிக்கபல்பரதவர்கலந்துவாழ்சேரி. (உ)

கோடுகொண்டபல்புன்னையம்பொழிற்றழைக்குழுவான்
மாடுகொண்டபஃறிரைக்கடல்பசப்புமல்கியதோ
நீடுகொண்டவக்கடலுடைப்பசுமையானிலவு
மேடுகொண்டபல்புன்னையும்பசுமையெய்தியவோ. (ங)

வலைவளத்தொழிலாளர்தமடந்தையர்வாரிக்
குலைநிலைத்தபுன்னுகவண்கோட்டுறதொட்டிற்
றலைமழக்களைக்கிடத்துவாரடிக்கடிதாமீ
னலைதரச்செய்தம்மழக்களையுறக்குவம்மா. (ச)

பொற்றதையலாரிளமுலைப்போகமுட்புரிந்து
கற்றவாடவர்மடற்பரிமாவிவர்கருத்தா
லுற்றவேலையங்கரைமிசையுலாவுவர்தாலஞ்
சொற்றவன்றிலம்பேடைடைகிடத்தலிற்றுயர்வார். (ரு)

வீசுநீள்வலைச்சேரிசூழ்விரிபுனலகழும்
பேசுவானகந்தோய்தரவெழுபெருமதிலு
மூசுநெய்தலொண்பன்மலர்க்கழியுங்கொண்மூவே
மாசுபோன்மெனமேற்கொளுந்தாலமுமன்றே. (௬)

வலையகப்படுமீன்குவித்திடலிளுமலையுங்
கொலையமீன்கணம்பிளந்தெறிதரவுயர்குன்றுந்
தொலைவிலுப்பமைத்துணக்கிமேதுயர்த்திடுசெரும்பும்
விலைசெய்பொன்குவியோங்கலுஞ்செறிவமேன்மேலும். (௭)

தரையில்யாருமோர்வினைசெயச்சமைதருகாலை
விரையுமூர்திமேவுநர்சிலர்நடப்பவர்பலர்மே
லுரைசெயத்தகுசேரியார்வினைசெயலுறுகாற்
புரையிலூர்தியிற்றண்ணெனப்போவதேயமைந்தார். (௮)

சிறுமுழக்கமுண்டாயினுந்துயிலுதல்சிவணு
முறுநிலத்தவரலைமுழக்கொழிதராதென்று
மறுவிலத்தகுசேரியோர்துயிறலும்வாய்ந்தார்
செறுபடைத்திருமால்கொலோசிந்தையிற்றேறேம். (௯)

அம்பரத்தியர்கொங்கையம்பரத்தியர்மருங்கு
லம்பரத்தியர்மற்றதுசூழ்பலவன்ன
வம்பரத்தியராள்வழக்கறுத்திடுநெடுங்க
ணம்பரத்தியரன்னராற்பொலியுமச்சேரி. (௧0)

வானமுட்டுவவுணங்கன்மீன்போர்கண்மாத்திரமோ
பேனவெண்டிரைபெயர்த்தெறிசங்கவெண்போரு
மூனமொன்றறவலைவளத்தொழில்புரியுரவோ
ரானவன்றிவெம்பரதவர்சிலைத்திடுமோர்ப்பும். (௧௧)

பாய்தரும்புனலுண்டமேகமுநணிபடர்நா
வாய்தருங்கருங்களிறும்வாணியங்கலும்பரவை
வேய்தரும்புலியியங்கலும்விட்டிருந்தனவே
லாய்தருந்திறலார்க்கும்வேறறிதரற்காகா. (௧௨)

உணவுமீன்விலைப்பொன்னின்றிவேறிலார்க்குற்ற
பிணவுபல்லவுஞ்சிற்றில்கோலுவபெருமுத்த
மணவுசோறடுகுழிசியுங்கொக்கரையடுப்பிற்
றணவுறுவிறகொண்டுகிர்பிறவுமத்தகைத்தால். (௧௩)

இன்னபல்வளச்சேரியிற்பரதவர்க்கெல்லா
மன்னனன்கரசுரிமைசெய்குடிவழிவந்தா
ரன்னமூர்பவனுதியர்[illegible]னருமண்ணை
றன்னதாட்டுணைப்பத்திமையியற்கையேசார்ந்தார். (௧௪)

முத்தாராருண்முதல்வர்தாளன்றிமுன்னிடுவார்
பித்தர்மற்றவரிணக்கமுமடாதெனப்பிரித்த
சுத்தர்நீற்றுமெய்யன்பினர்வாரிதிசூழு
மித்தராதலமியம்புபேரதிபத்தனென்பார். (கரு)

உலகநாயகிகருந்தடங்கண்ணியோடுலகத்
திலகமாகியநாகைக்காரோணத்துச்சிறப்புற்
றிலகமேவியவாதிபுராணர்தாளிறைஞ்சுங்
கலகமொன்றிலாவன்புபூண்டனர்பவங்கழிப்பார். (கசு)

அராவணிந்தவர்நாகைக்காரோணத்தெம்மாதி
புராணர்கோயிலைவலஞ்செய்வாராலயம்புகுந்து
பராவுவார்விழாச்சேவைசெய்தானந்தம்பயில்வார்
விராவுமற்றவரடியரைமுற்பணிவிருப்பார். (கஎ)

இந்தநீர்மையராயவரியலுநன்றளிற்
சந்தமார்வலைதாங்குபுதமர்பலர்சூழ
நந்துமார்திரைப்பெருங்கடற்புக்கனர்நயந்து
முந்தவார்வலைவீசினர்முதல்வரைத்தொழுது. (கஅ)

வீசுமாமணிவலைக்கயிறிழுத்தனர்வெருவிக்
கூசுமீனமொன்றகப்பட்டதனைக்கரங்கொண்டு
தேசுசாலுமென்றுடுகாரோணத்தெஞ்செல்வர்
பேசுதாளடைந்திடுகெனப்பெருங்கடல்விடுத்தார். (ககூ)

நல்லமீனகப்பட்டதுநாடுபுகொள்ளார்
செல்லவென்றுறுமுகமனுஞ்செப்புபுவிடுத்தார்
வல்லமற்றிவர்செயலெவனென்றுளமதித்தா
ரல்லசெய்திடுவதிற்றலையாந்தமரானோர். (உ0)

பின்னர்வீசிடுவலைப்படுமீனெலாம்பெயரா
தன்னர்வெளவுபுதமரொடுமிருக்கையையணைந்தா
ரொன்னரேனுங்காரோணநாயகவெனவிசைக்கின்
முன்னர்மற்றவர்தாள்பணியத்தியின்முதிர்ந்தார். (உக)

வழிவருந்திணமுதற்பெருவாரிவாய்ப்புகுந்து
மொழிதருந்திறலார்வலைவீசுபுமுயன்று
பழியிலாதுமுன்றுளெனவாதியிற்படுமீன்
றழியெடுத்துவிட்டேனையகவர்ந்திலஞ்சார்வார். (உஉ)

இந்தவண்ணமுன்மீன்விடுத்தேனையகவர்ந்து
சந்தமேவுறவாழுநாட்டணிப்பெருந்தலைவ
ரந்தவன்பர்தமுறுதியையவனியோரறிந்து
பந்தமாற்றிடவெண்ணுபுதிருவருள்பதித்தார். (உங)

கராசலத்துரிபோர்த்தகாரோணத்தெம்மாதி
புராணர்பேரருளான்முதல்வலையிடைப்புக்கு
விராவுமீனமொன்றன்றிப்பின்வீசிடுந்தோறும்
பராவுமீனமொன்றாயினும்படலொழிந்தன்றே. (உச)

ஒற்றைமீனன்றிப்பிறிதொருமீனுமொழியாக்
கற்றையார்திரைக்கடலிடைப்படாப்பெருந்துயராற்
பற்றையார்பெருந்தமரொலாம்பசிப்பிணிவருத்த
வெற்றைநாளுமெய்தாவிலம்பாடுற்றதன்றே. (உரு)

மன்றுமாடுகாரோணர்சேவடிக்கெனவழங்கு
மொன்றதாயமீனமுஞ்சிறுளகப்படாதொழிய
வென்றவாரியநாடராய்விளங்கதிபத்தர்
கன்றவார்துயருறாரன்புசிறுமையுங்கழியார். (உசா)

வறுமையென்பதுபலபகல்வருத்தவுமன்பிற்
சிறுமையுந்தளராதவரொருதினஞ்சென்று
பொறுமையார்தரவீசினர்வலைதிரிபுவனம்
வெறுமையாம்படிபட்டதோர்நவமணிமீனம். (உஎ)

விலைசெயப்புவிபோதராநவமணிமீன
மலையிடைப்படக்கண்டதிசயித்தனரியாரு
மலைவிலித்தருமீனினால்வறுமைநோய்சிதைய
நிலைபடைத்தனமெனத்தமர்நீண்மகிழ்பூத்தார். (உஅ)

அந்தமீனையுநாகைக்காரோணர்தமடிக்கே
சந்தமார்தரச்செல்கெனத்தடங்கையாற்றாங்கி
முந்தவோகையின்விடுத்தனர்மொழியதிபத்தர்
வந்தபாசத்தோடிருந்ததும்விடுத்தனர்மன்றோ. (உகூ)

நெடியமான்முதற்றேவர்கைகுவித்தனர்நெருங்க
வொடிவில்பல்கணநாதருமொருங்குசூழ்ந்தேத்தத்
தொடிவிராயதோட்கருந்தடங்கண்ணியோடெங்க
ளடிகண்மால்விடைமேற்பொலிகாட்சிநன்களித்தார் (௩0)

தோகைமேயவோர்பாலொடுசுரர்கணஞ்சூழ
நாகைமேயகாரோணர்மால்விடைமிசைநண்ண
வோகைமேயவரிதுபெறற்குரியனோயானென்
றூகைமேயவன்பூற்றெழவடிமிசைப்பணிந்தார் (௩க)

அடிபணிந்தெழுமன்பனைநோக்கியவையர்
முடிவிலின்பெரும்பத்திமைமுழுவதுமுகந்தே
மொடிவினஞ்சிவபுரத்தமர்கணத்தொடுமுற்றுப்
படியிலின்பந்துய்த்தமர்கெனப்பணித்தனர்மறைந்தார். *(௩உ)

பஞ்சதூந்துபிமுழங்கினபணிமலரிறைத்தார்
வஞ்சமின்றியெவ்வானரும்வள்ளலார்பச்சை
யஞ்சமோடிகாரோணம்புக்கனரதிபத்த
ரொஞ்சலில்சிவபுரம்புகூஉமின்பமுற்றிருந்தார். (௩௩)

மருவுபோதிபத்தர்தம்வழிவருவாரும்
பொருவுதிருமத்தலத்தமர்புராணர்தாடபத்தி
யொருவுறுதசெய்துயர்சிறப்படைகுவரொன்றும்
வெருவுதாதொழிற்றலேினருமேதினிவியப்ப. (௩௪)

வலைவளத்தொழிற்றலைின்றுமயக்குவெம்பாச
வலையறுத்தருளடைந்தவர்சரித்திரம்வகுத்தாங்
கலைமதித்திடுமேலைக்காரோணத்திற்கலந்த
கலைமதிபபருஞ்சட்டைநாயகர்திறங்கூறுவாம். (௩௫)

அதிபத்தப்படலம்முற்றிற்று.

ஆ படலம் ருகூ இ திருவிருத்தம் - உசநக.

## சட்டைநாதப்படலம்.

முனிவரர்பலருஞ்சூதமுனிவரன்பாதம்போற்றிப்
பணிமலர்ப்பொழில்சூழ்நாகைப்பதிப்பெருங்காரோணத்துத்
தனிவிறற்சட்டைநாதர்வரவினைச்சாற்றுகென்னக்
கனிவுளத்தரும்பவன்றுன்கட்டுரைத்திடலுற்றான். (க)

நாற்றஞ்சால்கடுக்கைவேணிநம்பிரானடிக்கெப்போதுந்
தேற்றஞ்சாலன்புமிக்கார்செழுந்தவப்பெருமைவாய்ந்தார்
மாற்றஞ்சானீறுமொண்கண்மணியுமைந்தெழுத்தும்போற்று
மேற்றஞ்சாலிராமதேவனெனுமொருசித்தருள்ளார். (உ)

ஆனந்தவனமென்றேதுமரும்புகழ்க்காசியெய்தி
யானந்தர்தோய்ந்தார்க்கென்றுமளிக்குமொண்கங்கையாடி
யானந்தவுருவராயவகிலநாயகனைப்போற்றி
யானந்தம்பெருகச்சித்தியாவையுமடைதல்வேட்டார். (௩)

சித்திகளனைத்தும்வேட்டசிந்தையார்காசியோர்பாற்
சத்தியருண்மேற்கொண்டுசிந்திப்பார்தமக்கெஞ்ஞான்றும்
புத்திமுத்தியுநன்கீயும்வைரவர்பொற்புமேய
வத்திருவுருவங்கண்டாரிலக்கணமமையுமாறே. (௪)

கழுமுளொண்டிவாளங்குசம்மபயங்கபால
முழுவலிநாகம்வட்டமுரண்மிகுபாசந்தண்டங்
கழுவியகரங்கள்பத்துங்கிண்கிணித்தார்சார்மார்பும்
வழுவில்பொற்கழல்சேர்தாளும்வயங்குறவடிகாகின்றார். (ரு)

மாயவன்மெய்த்தோற்சட்டையயன்கலிற்சட்டைநாதன்
பாயவெர்நெலும்பாந்தண்டம்பற்றலிற்றண்டபாணி
தீயவெங்கொடியகூற்றிற்றீங்கறத்தெறுதலாலே
யேயநற்றவர்சொல்காலவயிரவனின்னுங்கூறில். (௬)

அடியவராவத்துத்தாரணஞ்செயுமருளினாலே
கடிகெழுமாவதோத்தாரணன்கமழ்புழுகுபூசி
செடிதுறவிளங்கலாலேநிறைபுழுகாளியின்னும்
படிதவிர்நாமம்பல்லபரித்தெதிர்கின்றனையன். (௭)

வடுகனென்றுரைக்குநாமவள்ளறன்பொலிவுநோக்கித்
தடுவருமன்புபொங்கச்சத்துவவிராமதேவர்
படுபலபொருளுங்கொண்டுபூசைபன்னாள்புரிந்து
விடுதலிற்சித்தியெல்லாம்பெற்றனர்மேலுமேலும். (௮)

எய்தருஞ்சித்தியெல்லாமெய்தியவிராமதேவர்
மெய்திகழனையமூர்த்திவிருப்பமேலோங்கலாலே
செய்தவப்பூசையாற்றுந்திறத்தொருவெறுப்புமெய்தார்
கொய்தளிராதிகொண்டுபூசித்துக்குலவிவாழ்நாள். (௯)

துங்கநன்மறையோர்சோளிச்சரமுடையவனென்றோர்பேர்
தங்கநன்கலைமந்தாரொன்றாதவநெறிகைக்கொண்டுள்ளார்
திங்களங்குழவிமோலிச்சிவபதஞ்சேரவெண்ணு
மங்கவர்வந்திராமதேவனையடைந்தாரன்றே. (௧௦)

அடைந்தவர்பணிதலோடுமாருள்சுரந்துநோக்கி
மிடைந்தவன்பினரீய்நம்பான்மேவியதென்னையென்னத்
தடைந்தவைம்பொறியீர்நும்மைச்சரணெனவடைந்தேன்சன்ம
முடைந்தவனுதற்கென்றுருதுதெரிந்திராமதேவர். (௧௧)

மேதகுசட்டைநாதர்விளங்குவிக்கிரகமொன்று
காதலினதைப்பூசித்தேகவலருஞ்சித்திபெற்றே
னாதரமருவிநீருமருச்சித்தேத்திடுவிராயி
னேதமிலின்பமுத்தியெய்தலாமென்றுகூறி. (௧௨)

அந்தவிக்கிரகந்தன்னையன்னவர்கையேந்திச்
சுந்தரமருவுஞ்சோளிச்சரமுடையார்கைநல்கி
நந்தமற்றிதனான்முத்திநண்ணுதிரென்றக்கங்கூறிப்
பந்தமிலனையதேவர்சுவேச்சையிற்பயின்றாரன்றே. (௧௩)

பொன்பொலிசட்டைநாதர்சட்டகம்போற்றியேற்ற
கொன்பொலிபெருமையன்பருபகரணங்கைக்கொண்டு
தென்பொலிபூசைசெய்துஞ்சிந்தையிற்குறித்தல்செய்து
மன்பொலியருதகாசியணிநகரமர்ந்தாரன்றே. (௧௪)

திரைகெழுகங்கைக்காசித்திருநகரிராமதேவ
ருரைவழிச்சட்டைநாதர்பூசனையுவப்பிற்செய்தாம்
புரைதபப்பன்னாளந்தப்புண்ணியரருள்வதெந்நாள்
வரைவிலின்புறுவதெந்நாளெனமதித்திருக்குநாளில். (க௫)

ஒருதினஞ்சட்டைநாதருவந்தவர்கனவிற்றோன்றி
மருவநின்னுள்ளங்கொண்டகவலைமாற்றிடுதியன்ப
பொருவருநினக்குமுத்திபுணர்ப்பதித்தானமன்று
கருநிறக்கடல்சூழ்நாகைக்காரோணமென்றுதேர்தி. (கசு)

அத்தலமித்தலத்துமதிகமாந்தேவதீர்த்த
முத்தமச்சருவதீர்த்தமொளிர்பெருங்காகதீர்த்த
முத்தலம்புகழாநிற்குமுனிதீர்த்தமாதியாகச்
சுத்தநற்றீர்த்தமெண்ணில்லனநனிதொக்கவாங்கே. (கஎ)

பெருந்தவப்புண்டரீகமுனிவரன்பேணிப்போற்றிப்
பொருந்தமெய்யன்புசெய்துபுனிதமாங்காயத்தோடுந்
திருந்தநந்தமையடைந்தான்றிசைமுகனுங்குப்போற்றி
மருந்தமுண்டொளிருநம்பால்வளமலிசிருட்டிபெற்றான். (கஅ)

தண்டுழாய்மாயோனந்தத்தலத்தினைச்சார்ந்துபோற்றி
மண்டுவெவ்விடத்தாலுற்றகரிசெலாமாற்றிவாழ்வா
னண்டுவானாடர்கோமானுவயினம்மைப்போற்றித்
தொண்டுபட்டளவாமேன்மைபெற்றனன்றூயவன்ப. (க௯)

இன்னுமத்தலத்தினம்மையிணர்மலராதிகொண்டு
மன்னுமெய்வழிபாடாற்றிமுத்தியைமருவினோர்கள்
பன்னுபல்கணக்குந்தீர்ந்தார்பகருவதின்னுமுண்டான்
முன்னுகற்பத்தின்மாயாதிருப்பதம்முழுத்தானங்காண். (உ0)

அதுபெருஞ்சோழநாட்டிலலங்குகாவிரிக்குத்தென்பாற்
சதுமுகன்முதலோர்போற்றுந்தடந்திருவாரூர்க்கீழ்பான்
முதுகுணகடற்றீரத்தின்முயங்குவதங்குமேவிக்
கதுமெனநமைத்தாபித்திதாபிக்குங்கண்ணுஞ்சொல்வாம். (உக)

விருப்புறமுனிபூசித்தமேலைக்காரோணத்துள்ளா
லிருப்பதுகுறித்தேமந்தவிடங்கடைப்பிடித்திமுத்தி
யருப்புவதாங்கென்றோதிமறைந்தனனையரன்பர்
பொருப்புவில்லுடையார்வார்த்தைநனவெனப்புந்திவைத்தார். (உஉ)

விடியுமுனெழுந்துகங்கைவெண்டிரைத்தீர்த்தமாடிப்
பொடியணிந்தினியகொண்டுபூசைமுன்போலவாற்றி
யடிகள்வாய்மலர்ந்தநாகைக்காரோணமடைவானெண்ணித்
தடிதலிலொருபேழைக்குட்சட்டைநாயகரைச்சேர்த்து. (உ௩)

தலைமிசைச்சுமந்துகொண்டுதக்கணதிசையைநாடி
மலைகளுங்காடுமாயவழிக்கொடுநடந்துவந்து
நிலைபருப்பதமென்றோதுநெடுந்தலம்பணிந்துபோற்றிக்
கலைகவில்விரூபாக்கத்தைதக்கலந்துகைதொழுதானன்றே. (உச)

தூயவொன்றுநீங்காச்சோமநாதத்தைமேவிப்
பாயபன்மலர்கடூவிப்பரம்பரனபாதம்போற்றி
யாயமேல்கடற்றீரத்திணைமைந்தகோகன்னம்புக்கு
நாயனார்பாதம்போற்றிநயந்தங்குநின்றுபோநது. (உரு)

வாங்குதெண்டிரைநீர்ச்செம்பொன்முகலியின்மருங்கிலொரு
மோங்குதென்கயிலைமேவியும்பர்தம்பிரானைப்போறறி
நீங்குதலின்றிமாவாய்நெடுமறைநிலவமேன்மை
தேங்குசீர்க்காஞ்சியெய்தித்தேவர்தந்தேவைப்போற்றி. (உசு)

மறைபுகழாலங்காடுவணங்கிமாற்பேறுபோற்றி
யறைதிருவோத்தூர்பாருரோற்றியூரவாவித்தாழ்ந்து
நிறைகழுக்குன்றமெய்திநிகரிலான்சரணந்தாழ்நது
மிறைதபுத்தினிதிலூரும்பாதிரிப்புலியூர்மேவி. (உஎ)

புலியொடுமுயலுங்கண்டபுண்ணியப்பாதம்போற்றி
யொலிதழலுருவமாயவொருபருப்பதமும்போற்றி
வலியவர்பதம்விருத்தவனாயினுநதொழுதுதெய்வம்
பொலிதிருத்தில்லைமூதூர்புக்கினிதாடல்போற்றி. (உஅ)

காழிமுற்பலவும்போற்றிக்காவிரிநன்னீராடி
வாழிமாயூரமேயவள்ளலைத்தரிசித்தபபா
லூழிகாண்வழுவூரேத்தியொருதிருபபனையூர்தாழ்ந்து
சூழிமால்யானைப்போர்வைச்சுந்தரராரூர்சோநதார். (உகூ)

கலமலியாரூர்மேயநம்பர்பொற்பாதம்போற்றி
நிலமலிகீழ்வேளூருஞ்சிக்கலுநினைநதுபோந்து
புலமலியன்பிறழுழ்ந்துபுண்ணியமுனிவர்சூழக்
கலமலிகடல்சூழ்நாகைக்காரோணநகர்வநதுற்றார். (௩0)

புண்ணியமலியும்வானோர்புனல்படிந்தெழுந்தியாருங்
கண்ணியவருள்சான்மேன்மைககருநதடங்கண்ணியோடு
நண்ணியகருணையாதிபுராணனைநயந்துபோற்றித்
தண்ணியவிடங்கப்பெம்மான்பாதமுநதரிசித்தப்பால். (௩க)

அருஞ்சுவைதக்கடேசம்யாருமறைநடுத்தலேசமேன்மை
தருந்தனிவிண்டுநாதந்தவாவகத்தீசமுண்மை
திருத்தமரோந்திரேசந்திகழுங்கார்முகேசமன்பு
பொருந்தியநாகநாதம்புண்ணியவிராமநாதம். (௩உ)

இவைமுதற்பலவும்போற்றியினிதுவப்புற்றேயன்புச்
சுவைமிகவையர்சோளீச்சரமுடையவர்வாறொரு
நவையறுத்துய்யுமேலைக்காரோணநயந்துபுக்கார்
செவையுறப்பணிந்தார்முத்தியின்பத்துத்திளைத்தாரொத்தார். (௩௩)

அன்றுநம்மடிகள்செவ்வாய்மலர்ந்தவாறமையநாடி
யின்றுநாநாகைமேலைக்காரோணத்தினிதிலுற்றே
மொன்றுமேற்பதிட்டைசெய்யவுறுபொருட்கியாதுசெய்வோ
மென்றுதம்முள்ளங்கொண்டேயிருந்தனரொண்ணமிக்கார். (௩௪)

அற்றைநாட்கனவின்முன்போலண்ணலார்சட்டைநாதர்
பற்றையாரவர்முற்றோன்றிப்பரிந்தனரருளிச்செய்வா
ரிற்றைநாள்வருந்தலென்னையிந்நகர்வடதிசைக்க
ணுற்றையாவைங்குரோசத்துள்ளதானகரமொன்று. (௩௫)

அன்னமாநகர்புரக்குமரசன்புத்திரியைமுன்னே
பின்னமொன்றில்லாவண்ணம்பிரமராக்கதமொன்றுற்றே
யின்னன்மிக்கியற்றுநீயாங்[illegible]டின்விலகுமந்த
மன்னனின்வயத்தனுவானெனறனர்மறைந்தாரன்றே. (௩௬)

அருடலைக்கொண்டுவப்புற்றாந்நகர்நேடிச்சென்று
பொருண்மிகுமரசன்முன்னம்போயிரைவனுந்தேர்ந்து
மருடபப்பணிந்தெழுந்துமகண்முனங்கொடுபோய்விட்டான்
கருளடற்பிரமராக்கதங்கழன்றடிவீழ்ந்தன்றே. (௩௭)

அடிதொழுமதனைநம்பின்வாவெனவழைத்துவந்து
படியறத்தாஞ்சமாதிபயிலிடமதற்குமேல்பாற்
கொடியவல்விலங்குபூட்டிக்குறும்பொழிநதிருத்தியென்றார்
மடிதுயரனைத்துநீத்துமன்னவன்புதல்வியுய்ந்தாள். (௩௮)

திருமலைராயனென்னுமரசிறுசிந்தைசெய்தெம்
பொருமலையொழித்தார்போல்வார்புவனத்திலுளரோவென்று
கருமலைபவர்சூழ்நாகைக்காரோணநகரமேவி
யருமலைபோல்வார்சோளீச்சரமுடையாரைத்தாழ்ந்தான். (௩௯)

அடியனேன்செயுங்குற்றேவலருள்செயவேண்டுமென்னக்
கடியவிழ்மாலைமார்பகாசியினின்றும்போந்த
முடிவினஞ்சட்டைநாதப்பதிட்டைசெய்முயற்சியின்னே
யொடிவறப்புரிதியென்றுருவர்தவனதுமேற்கொண்டான். (௪0)

வினைவலயவனர்க்கூவியொண்பொருள்வெறுப்பவீசி
நினையொருமுனிபூசித்தநின்மலப்பிராற்குத்தென்பாற்
கனைகதிர்பொருவிமானமாதியகதிர்ப்பச்செய்து
[illegible]னைதரப்பதிட்டைசெய்தான்சுரர்கள்பூமாரிதூர்த்தார். (௪௧)

தணிமனத்தினராமாதிசைவர்முற்றனிக்குவேண்டும்
பணிபுரிபவரையெல்லாம்பாங்குறப்பதிட்டைசெய்து
கனிதமில்வருவாயாக்கிக்கலந்துஇலாதிநல்கி
யணிகொணித்தியமுன்னாயவலங்குறநடாத்தல்செய்வான். (௪௨)

கதிரவன்றகரிராசிகலந்தமர்மதியமெய்த
வதிர்கழற்சட்டைநாதற்கற்புதமறையோர்வாழ்ந்த
வெதிரில்பல்லியமுழங்கவெங்கும்மங்கலம்விராவப்
பிதிர்தலில்விழாநடாத்திப்பெருமகிழ்பூத்தான்மன்னன். (௪௩)

விழாமகிழ்சிறப்பநோக்கிமிளிர்சட்டைநாதர்பொற்று
ழொமனமுடையசோளீச்சரமுடையாரத்தேவர்
வழாவபிமுகச்சமாதிவைகுபுமலமாசொன்றுந்
தழாவுயரின்பமுந்திசார்ந்தனர்தரணிவாழ்தத. (௪௪)

காதரமிரிக்குநாகைக்காரோணத்தலத்தைச்சார்ந்தார்
பாதகமொனினுமுத்திப்பயன்பெறலுண்மையென்னி
லாதரமிக்கசோளீச்சரமுடையாரவா[illegible]
போதநன்முத்தியுற்றததிசயம்புணருங்சொல்லோ. (௪௫)

மன்னியசட்டைநாதர்திருமுனமருவிமேன்மை
துன்னியபுகழ்சால்சோளீச்சரமுடையார்க்குநாளு
நன்னியமத்திற்பூசைநயந்துமுற்செய்யுமாறே
யன்னியமில்லாவன்னாரருள்புரிந்தாரன்றே. (௪௬)

காசியினின்றும்போந்துகலைபுகழ்சட்டைநாதர்
மாசிலாநாகைக்காயாரோகணம்வாழ்வதோர்ந்தும்
பேசியவனையதானம்வசித்திடல்சிறிதும்பேறு
ரேசிலாராவர்கொல்லோவியைவரோவினபமுத்தி. (௪௭)

பன்னரும்புகழ்சாறண்டபாணியார்வரவுசொற்று
முன்னரும்வளஞ்சானாகைக்காரோணமுழுத்தலத்தின்
றன்னரும்புகழையார்சொற்றிடவல்லராவா
ரொன்னருமதனைச்சார்நதேயின்பவீடடைவாரோர்மின். (௪௮)

தலமுதல்விசேடமூன்றுந்தழைந்ததெத்தானமென்று
நலவிகமாதிமூன்றுங்கலெத்தானமென்று
நிலவரீராய்ந்தவாறேவிரம்பியதலமீதொன்றே
குலமுனிவரர்காள்டேர்மினென்றனன்குணத்தான்மிக்கான். (௪௯)

குணமலிசூதமேலோன்கூறியமாற்றங்கேளாக்
கணமலிமுனிவரெல்லாங்களிப்பருமகிழ்ச்சியெய்திப்
பணமலிகலத்தானாகைக்காரோணம்பரவிப்போற்றும்
வணமலிவேணவாவுண்முழுஙினர்மயக்கந்தீர்த்தார். (௫௦)

கலைபயிறெய்வநாகைக்காரோணம்புகுவதென்று
தொலைவருநதேவதீர்த்தமுதலியதோய்வதென்று
புலையுணர்வடையாவாதிபுராணனைக்காண்பதென்றென்
றலைவுறவுளத்தினுன்னியிருந்தனரறிஞர்யாரும். (௫௧)

சட்டைநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௯௦ ஐ திருவிருத்தம் - ௨௬௭௨.

## நைமிசமுனிவர்பூசித்தபடலம்.

தனியுயர்தவத்தின்மிக்கசௌனகமுனிவனாதி
முனிவரர்பலருஞ்சூதமுனிவரன்பாதம்போற்றிக்
கனிதருமுள்ளகாலகக்காரோணஞ்சென்றுபோற்ற
நனிவிழைவுற்றனையநயந்தருள்செய்தல்வேண்டும். (௧)

கண்ணுதல்வயங்குநாகைக்காரோணத்தலச்சீர்முற்று
மெண்ணுதல்செய்யவெங்கட்கினிதருள்செய்தநீயே
விண்ணுதலனையதானம்விரும்பியாமடைந்துகாணப்
பண்ணுதல்கடனென்மற்றையெவர்க்குண்டுபகராயென்றார். (௨)

முனிவரரினையவார்த்தைமொழிதலுமகிழ்ந்துசூத
னனியதுகாணும்வாஞ்சைநமக்குமிக்குண்டுகண்டீ
ரினியதுபழுதறுமேயெய்துதுமென்றெழுந்தான்
கனிமகிழ்பூத்தெல்லாருங்கைகுவித்துடனெழுந்தார் (௩)

நண்பொடியாதசூதநாமவான்முனிவனோடும்
வெண்பொடியாருமேனித்தவரெலாம்விரவிமுச்சோ
றுண்பொடியாக்கிநாகைக்காரோணநகரநோக்கிப்
பண்பொடியாதநண்புபரித்தனர்நடத்தல்செய்வார். (௪)

வடதிசைநின்றுநதிம்பாற்கடலெழீஇவருதலென்னப்
புடவியினடவைகூடிப்போற்றுறுமவாசிநோக்கி
யிடவியநன்றுங்காணும்யாறுமெண்ணிலகடந்து
தடநெடுங்காசியாதித்தலமெலாந்தாழ்ந்துபோற்றி. (௫)

வாயரவொலியெழுப்பமனநெகிழ்ந்துருகாநிற்க
வாயகண்ணருவிவாரவலருரோமஞ்சிலிர்ப்ப
நேயமிக்கவராயல்லும்பகலுநேருறவியங்கி
நாயகமாயதெய்வநாகைக்காரோணம்வந்தார். (௬)

எல்லையைவணங்கியுட்புக்கியைந்தபல்வளமுநோக்கி
முல்லைவெண்முறுவல்பாகர்முயங்கருள்வியந்துகொண்டு
செல்லையொண்முடிகொண்மாடத்தெருவெலாங்கடந்துவந்து
வல்லைவண்டனிமுன்றூயகோபுரம்வணங்கினாரால். (௭)

தங்களுள்ளத்துமேயதடந்திரைத்தேவதீர்த்தந்
திங்களொண்முடியார்கோயிலெதிரொருதிசையிற்கண்டே
யங்களவில்லாவின்பமமைதரவிறங்கித்தோய்ந்தார்
கங்களோர்நான்குளானுங்கருதரும்பெருமைவாய்ந்தார். (அ)

வெள்ளியநீறுபூசிவிளங்குருத்திராக்கம்பூண்டே
யொள்ளியசிறப்பார்முத்திமண்டபத்துவந்துமேவி
வள்ளியவெழுத்தோரைந்துமனனுறக்கணித்தெழுந்தா
ருள்ளியகாமமாதியொருங்கவித்துயர்ந்தநீரார். (கூ)

பரவினர்க்கருளுநாகாபரணமால்களிற்றைப்போற்றிக்
கரமலர்குவித்துச்சென்னிமிசைக்கவினமையச்சேர்த்து
வரமருள்பெருமைசாலாவரணஞ்சூழ்ந்துட்புகுந்து
புரவுசெய்பரமராதிபுராணர்முன்போந்தாரன்றே. (க0)

அருமறைமுறையிட்டின்னுமறிவதற்கருமையாய
பெருகொளிமணியையாதிபுராணனைப்பெருங்காரோணத்
தொருமுதல்வனைநேர்கண்டேயுள்ளநெக்குருகப்போற்றி
யிருவிழியருவிவாரவின்பவெள்ளங்குடைந்தார். (கக)

அரிதவணகன்றுதென்பாலடைந்துசுந்தரவிடங்கப்
பெரியனைவணங்கிமாறுப்பேரின்பவெள்ளமூழ்கிப்
புரிதரவலஞ்செய்துள்ளயாரையும்பொருந்தப்போற்றிக்
கரிசறவடைந்தாரம்மாகருந்தடங்கண்ணிமுன்னர். (கஉ)

கருந்தடங்கண்ணிதனைக்கட்டவம்பொறியராய
வருந்தவருளத்தினையகிலமுமீன்றதாயைப்
பொருந்தநேர்கண்டுபோற்றிப்பூரணானந்தமேவித்
திருந்தமாதவத்தார்முத்திமண்டபஞ்சேர்ந்தார்பின்னும். (கங)

ஆவயினமர்ந்துகாட்சியற்புதச்சிறப்பனைத்து
மோவறவியப்புமேவவொருவருக்கொருவர்பேசிப்
பூவமரயன்மாலாதிப்புத்தேளிர்புரிந்துபோற்றுந்
தாவருந்தலங்களெல்லாந்தரிசிக்கும்வாஞ்சையுற்றார். (கச)

ஒருதினஞ்சுவைதக்கடேசமொருதினநடுத்தலேச
மொருதினம்விண்டுநாதமொருதினமிந்திரேச
மொருதினநாகநாதமொருதினமிராமநாத
மொருதினங்கார்முகேசமொருதினமகத்தியீசம். (கரு)

ஒருதினமேலைக்காயாரோகணமுண்மைமேவ
வொருதினமொளிர்சித்தீசமாகச்சென்றுருகிப்போற்றி
யொருவறமற்றுமுள்ளதலமெலாமுவந்துகாண்பா
ரொருமலர்மகனுந்தேருவுயர்புடையந்தணாளர். (கசா)

ஒருதினந்தேவதீர்த்தமொருதினமுனிவர்தீர்த்த
மொருதினங்காகதீர்த்தமொருதினஞ்சரவதீர்த்த
மொருதினம்பிரமதீர்த்தமொருதினம்விண்டுதீர்த்த
மொருதினசித்தகங்கையுவந்தனர்மூழ்குவாரால். (௧௭)

திருவிழாச்சேவைசெய்துஞ்சிறப்பவைகுரோசஞ்சூழ்ந்தும்
பொருவிலாக்காலந்தோறும்போற்றியுமிந்தவண்ணம்
வெருவிலாமுனிவர்சின்னாள்வசித்தனர்விடைபெற்றப்பான்
மருவுலாந்தந்துவைப்பையடைதரமனங்கொண்டாரால். (௧௮)

அருமைசெய்புராணஞ்சொற்றவருட்பெருஞ்சூதமேலோற்
கிருமைசெய்சிறப்புநல்கியினிதவனிருக்கையுய்த்தே
யொருமைசெய்யவனையாற்போற்றியுறவிடைபெற்றுப்பின்னர்த்
தருமைமாழுகிலத்தாங்குந்தம்மிடம்புகுந்துவாழ்ந்தார். (௧௯)

கடல்புடையுடுத்தநாகைக்காரோணப்புராணங்கேட்போர்
மிடல்கெழுபொருணன்காய்வோர்விருப்பொடுபடிப்போர்நாளும்
விடலறப்படிப்போர்க்கம்பொன்வீசுவோரெழுதிவைப்போர்
மடன்மலராதிகொண்டுவயங்குறப்பூசைசெய்வோர், (௨௦)

இம்மையின்மனைவிமக்களியைத்ரச்செல்வமெல்லாஞ்
செம்மையினனுபவித்துத்தேவர்தம்போகம்யாவு
மம்மையின்மிகத்துய்த்தீற்றிலருமறைமுடிவுந்தேருக்
கொம்மைவெள்விடையான்மேயசிவபுரங்குறுகிவாழ்வார். (௨௧)

கண்ணியபுகழ்சானாகைக்காயாரோகணப்புராணம்
புண்ணியம்பயப்பதென்றும்போற்றுபுபடிப்போர்கேட்போர்
ரெண்ணியவனைத்துஞ்சார்வாரிகபரமாதிதம்மை
யண்ணியபெயர்க்குறல்கும்வல்லவரவரேயன்றே. (௨௨)

கருந்தடங்கண்ணியோடுகாயாரோகணப்பிரானு
மிருந்தருடானம்போலுமேற்றமாரிப்புராணம்
பொருந்தநன்கமருந்தானமாதலாற்புகலத்தேத்துத்
திருந்தவெவ்வளனுமன்னுமூன்றுஞ்சேராவாறே. (௨௩)

வேறு.

போற்றுபுகழ்மலிநாகைக்காயாரோகணத்தாதிபுராணர்வாழ்க
வாற்றுபெருங்கருணையேயுருவாயகருந்தடங்கணம்மைவாழ்க
மாற்றுதலினீற்றெருடுகண்மணியணியுந்திருக்கூட்டம்வாழ்கமாசு
பாற்றுதிருவம்பலத்துணடநவிலுங்குஞ்சிதப்பொற்பாதம்வாழ்க. (௨௪)

நைமிசமுனிவர்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௬௧ இ திருவிருத்தம்-௨௫௦௬.

திருச்சிற்றம்பலம்.

## திருநாகைக்காரோணப்புராணம்முற்றிற்று.



தங்களுள்ளத்துமேயதடர்திரைத்தேவதீர்த்தந்
திங்களொண்முடியார்கோயிலெதிரொருதிசையிற்கண்டே
யங்களவில்லாவின்பமமைதரவிறங்கித்தோய்ந்தார்
கங்களோர்நான்குளானுங்கருதரும்பெருமைவாய்ந்தார். (அ)

வெள்ளியநீறுபூசிவிளங்குருத்திராக்கம்பூண்டே
யொள்ளியசிறப்பார்முத்திமண்டபத்துவந்துமேவி
வள்ளியவெழுத்தோரைந்துமனனுறக்கணித்தெழுந்தா
ருள்ளியகாமமாதியொருங்கவித்துயர்ந்தநீரார். (கூ)

பரவினர்க்கருளுநாகாபரணமால்களிற்றைப்போற்றிக்
கரமலர்குவித்துச்சென்னிமிசைக்கவினமையச்சேர்த்து
வரமருள்பெருமைசாலாவரணஞ்சூழ்ந்துட்புகுந்து
புரவுசெய்பரமராதிபுராணர்முன்போந்தாரன்றே. (க0)

அருமறைமுறையிட்டின்னுமறிவதற்கருமையாய
பெருகொளிமணியையாதிபுராணனைப்பெருங்காரோணத்
தொருமுதல்வனைநேர்கண்டேயுள்ளநெக்குருகப்போற்றி
யிருவிழியருவிவாரவின்பவெள்ளங்குடைந்தார். (கக)

அரிதவணகன்றுதென்பாலடைந்துசுந்தரவிடங்கப்
பெரியனைவணங்கிமாருப்பேரின்பவெள்ளமூழ்கிப்
புரிதரவலஞ்செய்துங்களையாரையும்பொருந்தப்போற்றிக்
கரிசறவடைந்தாரம்மாகருந்தடங்கண்ணிமுன்னர். (கஉ)

கருந்தடங்கண்ணிதன்னைக்கட்டவம்பொறியராய
வருந்தவருளத்திருளையகிலமுமீன்றதாயைப்
பொருந்தநேர்கண்டுபோற்றிப்பூரணானந்தமேவித்
திருந்தமாதவத்தார்முத்திமண்டபஞ்சேர்ந்தார்பின்னும். (கங)

ஆவயினமர்ந்துகாட்சியற்புதச்சிறப்பனைத்து
மோவறவியப்புமேயவொருவருக்கொருவர்பேசிப்
பூவமரயன்மாலாதிப்புத்தேளிர்புரிந்துபோற்றுந்
தாவருநதலங்களெல்லாந்தரிசிக்கும்வாஞ்சையுற்றார். (கச)

ஒருதினஞ்சுவைதக்கடேசமொருதினநடுத்தலேச
மொருதினம்விண்டுநாதமொருதினமிந்திரேச
மொருதினநாகநாதமொருதினமிராமநாத
மொருதினங்கார்முகேசமொருதினமகத்தியீசம். (கரு)

ஒருதினமேலைக்காயாரோகணமுண்மைமேவ
வொருதினமொளிர்சித்தீசமாகச்சென்றுருகிப்போற்றி
யொருவறமற்றுமுள்ளதலமெலாமுவந்துகாண்பா
ரொருமலர்மகனுந்தேருவுயர்புடையந்தணாளர். (கசு)

ஒருதினந்தேவதீர்த்தமொருதினமுனிவர்தீர்த்த
மொருதினந்நாகதீர்த்தமொருதினஞ்சமுலதீர்த்த
மொருதினம்பிரமதீர்த்தமொருதினம்விண்டுதீர்த்த
மொருதினஞ்சித்தகங்கையுவந்தனர்மூழ்குவாரால். (கஎ)

திருவிழாச்சேவைசெய்துஞ்சிறப்பவைக்குரோசஞ்சூழ்ந்தும்
பொருவிலாக்காலந்தோறும்போற்றியுமிந்தவண்ணம்
வெருவிலாமுனிவர்சின்னாள்வசித்தனர்விடைபெற்றப்பான்
மருவுலார்தம்துவைப்பையடைதரமனங்கொண்டாரால். (கஅ)

அருமைசெய்புராணஞ்சொற்றவருட்பெருஞ்சூதமேலோற்
கிருமைசெய்சிறப்புநல்கியினிதவனிருக்கையுய்த்தே
யொருமைசெய்யனையாற்போற்றியுறவிடைபெற்றுப்பின்னர்த்
தருமைமநூமுகிலைத்தாங்குந்தம்மிடம்புகுந்துவாழ்ந்தார். (கக)

கடல்புடையுடுத்தநாகைக்காரோணப்புராணங்கேட்போர்
மிடல்கெழுபொருணன்காய்வோர்விருப்பொடுபடிப்போர்நாளும்
விடலறப்படிப்போர்க்கம்பொன்வீசுவோரெழுதிவைப்போர்
மடன்மலராதிகொண்டுவயங்குறப்பூசைசெய்வோர், (உ0)

இம்மையின்மனைவிமக்களியைத்ரச்செல்வமெல்லாஞ்
செம்மையினனுபவித்துத்தேவர்தம்போகம்யாவு
மம்மையின்மிகத்துய்த்திற்றிலருமறைமுடிவுந்தேருக்
கொம்மைவெள்விடையான்மேயசிவபுரங்குறுகிவாழ்வார். (உக)

கண்ணியபுகழ்சானகைக்காயாரோகணப்புராணம்
புண்ணியம்பயப்பதென்றும்போற்றுபுபடிப்போர்கேட்போ
ரெண்ணியவனைத்துஞ்சார்வாரிகபரமாதிதம்மை
யண்ணியபெயர்க்குநல்கும்வல்லவரவரேயன்றே. (உஉ)

கருந்தடங்கண்ணியோடுகாயாரோகணப்பிரானு
ரிருந்தருடானம்போலுமேற்றமாரிப்புராணம்
பொருந்தநன்கமருந்தானமாதலாற்புகலத்தேத்துந்
திருந்தவெவ்வளனுமன்னுமுன்றுஞ்சேராவாறே. (உங)

வேறு.

போற்றுபுகழ்மலிநாகைக்காயாரோகணத்தாதிபுராணர்வாழ்க
வாற்றுபெருங்கருணையேயுருவாயகருந்தடங்கணம்மைவாழ்க
மாற்றுதலினீற்றொடுகண்மணியணியுந்திருக்கூட்டம்வாழ்கமாசு
பாற்றுதிருவம்பலத்துணடநவிலுங்குஞ்சிதப்பொற்பாதம்வாழ்க. (உச)

நைமிசமுனிவர்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் சுக இ திருவிருத்தம்-உகூ0சு.

திருச்சிற்றம்பலம்.

திருநாகைக்காரோணப்புராணம்முற்றிற்று.

# பிழை திருத்தல்.

| பக்கம். | பாடல். | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௪ | ௧0 | கதிர்வான் | கதிர்வாள் |
| ௩௫ | ௧௫ | யானையாநோக்கி | யானையாணோக்கி |
| ௫௫ | ௩௭ | அன்னியம் | அனணியம் |
| ௫௮ | ௧௨ | குளிர்ந்து | குளிர்ந்து |
| ௭௧ | ௩௨ | தானவர்கள்சோர | தானவர்கட்சோர |
| ௧௧௧ | ௫௫ | மாக்களித்தேறி | மாக்களிற்றேறி |
| ௧௨௮ | ௨ | பரப்பிறகும் | பாபபிறகும |
| ௧௩௭ | ௮௫ | உவகை | உவமை |
| ௧௫௩ | ௯௯ | இளிகிளர் | களிகிளர் |
| ௧௯௯ | ௧௪ | உன்புகழ்க் | உள்புகற் |
| ௧௮0 | ௩௮ | நீடியகால் | நீடியகாய் |
| ௧௯௩ | ௧௮ | எய்வார் | ஏய்வார் |
| ௧௯௫ | ௮ | எழுத்தெனும் | எழுத்தெனும் |
| ௨௧௩ | ௧ | மருத்தபுகழ் | மருததகுபுகழ் |
| ௨௪௪ | ௮ | உணர்த்து | உணர்ந்து. |

டி - அய்யாஸாமி சர்மா.

# சூசிபத்திரம்.

| பக்கம். | படலப்பெயர். | பாடற்றொகை |
|---|---|---|
| ௧ | கடவுள்வாழ்த்து. | ௨௧ |
| ௭ | அவையடக்கம். | ௧௨ |
| ௮ | சிறப்புப்பாயிரம். | ௨ |
| ௯ | திருநாட்டுப்படலம். | ௧௨0 |
| ௨௨ | திருநகரப்படலம். | ௧௫௧ |
| ௩௯ | நைமிசப்படலம். | ௩௬ |
| ௪௩ | புராணவரலாற்றுப்படலம். | ௨௫ |
| ௪௬ | ஆதிபுராணப்படலம். | ௩௭ |
| ௫௧ | தலவிசேடப்படலம். | ௫௧ |
| ௫௬ | புண்டரீகமுனிவர்முதற்காட்சியுரைத்சபடலம். | ௫௬ |
| ௬௩ | புண்டரீகமுனிவரிரண்டாங்காட்சியுரைத்தபடலம். | ௫௫ |
| ௬௭ | புண்டரீகமுனிவர்மூன்றாங்காட்சியுரைத்தபடலம். | ௫௧ |
| ௭௩ | தேவதீர்த்தப்படலம். | ௧௩௯ |
| ௮௬ | முனிதீர்த்தப்படலம். | ௬0 |
| ௯௩ | காகதீர்த்தப்படலம். | ௭0 |
| ௧0௧ | சறுவதீர்த்தப்படலம். | ௨௭ |
| ௧0௪ | அகத்தீசப்படலம். | ௯௫ |
| ௧௧௬ | நடுத்தலேசப்படலம். | ௩௨ |
| ௧௪௯ | இயமன்பூசித்தபடலம். | ௪௧ |
| ௧௨௪ | விண்டுநாதப்படலம். | ௩௧ |
| ௧௨௭ | நாகநாதப்படலம். | ௧௪௭ |
| ௧௪௪ | கார்முகேசப்படலம். | ௨௯ |
| ௧௪௬ | சுந்தரவிடங்கப்படலம். | ௧௫ |
| ௧௫௯ | சனிப்பிரதிட்டைப்படலம். | ௨௬ |
| ௧௬௨ | இராமநாதப்படலம். | ௨௫ |
| ௧௬௫ | கயிலாயநாதப்படலம். | ௩௯ |
| ௧௬௯ | எழுமுனிவர்முதலியர்பூசித்தபடலம். | ௧௮ |
| ௧௭௧ | நந்துவரதப்படலம். | ௬௮ |
| ௧௮௬ | சித்தாச்சிரமப்படலம். | ௪௭ |
| ௧௯௧ | பஞ்சகுரோசமான்மியப்படலம். | ௩௧ |
| ௧௯௫ | அரசகேசரிமுதலியோர்முத்தியடைந்தபடலம். | ௭௧ |
| ௨0௩ | சாலீசுகன்முத்திபெற்றபடலம். | ௨0 |
| ௨0௫ | தேவசாணித்தியபுரமான்மியப்படலம். | ௬௫ |
| ௨௧0 | கோசிகன்பூசித்தபடலம். | ௩௨ |

ஆ. உரு0சா.